வளர்தமிழில் அறிவியல்

# தமிழ் வளர்ச்சியில் இதழ்கள்

பதிப்பாசிரியர்கள்

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி

முனைவர் மா. இராமச்சந்திரன்

முனைவர் ஆ. தசரதன்

அனைத்திந்திய அறிவியல் தமிழ்க் கழகம்

தஞ்சாவூர் - 613 005

2005

வளர்தமிழில் அறிவியல்

# தமிழ் வளர்ச்சியில் இதழ்கள்

பதிப்பாசிரியர்கள்

**முனைவர் சா. கிருட்டினமூர்த்தி**

**முனைவர் மா. இராமச்சந்திரன்**

**முனைவர் ஆ. தசரதன்**



**அனைத்திந்திய அறிவியல்தமிழ்க் கழகம்**

தஞ்சாவூர் - 613 005

**2005**

## BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the book | : | Tamil Valarchiyil Ithalgal |
| Editors | : | Dr. S. Krishnamoorthy<br>Dr. M. Ramachandran<br>Dr. A. Thasarathan |
| Publication No. | : | 24 |
| Language | : | Tamil |
| Edition | | First |
| Date of Publication | : | June, 2005 |
| Paper Used | : | White Printing |
| Size of the Book | : | Demy 1×8 |
| No. of Copies | : | 1000 |
| Price | : | Rs. 60/- |
| Printing by | : | Sabanayagam Printers<br>176, East Street,<br>Chidambaram - 608 001. |
| Subject | : | Journalism |

**முனைவர் சா. கிருட்டினமூர்த்தி**
இணைச்செயலர், அனைத்திந்திய அறிவியல் தமிழ்க்கழகம்
இயக்குநர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை - 600 113

# பதிப்புரை

அறிவியலின் அடிப்படையில் அச்சுக்கருவிகள் கண்டுபிடிக்கப் பெற்ற காலக்கட்டத்திற்குப் பின்புதான் தமிழ்வளர்ச்சி பல்துறைகளிலும் பல்கியது. இவற்றில், உரைநடை எனும் உன்னத ஊடகமே இக்கால இலக்கியங்களுக்கு அடித்தளமாயிற்று. நவீனம், நாடகம், சிறுகதை, கட்டுரை, பயணம் மற்றும் பல இலக்கிய வகைகளும் அறிவியல்வகை எழுத்துகளும் ஏற்படலாயின. இவற்றுக்குக் காரணமாக இதழ்களே அமைந்தன என்றால் அது மிகையாகாது. விடுதலைக்கு முன்பும் பின்பும் அறிவியல்வகை எழுத்துகளுக்கும் ஈடுபாடு காட்டப் பெற்றது. இதனால் தமிழில் அறிவியல்தமிழ் தவிர்க்கவியலாததாகி விட்டது. அறிவியலின் மகத்தான வளர்ச்சியின் காரணமாக மொழியும் சமுதாயமும் வளர்ந்தன. மொழிவளர்ச்சியில் இதழ்களின் பங்கு மொழிபெயர்ப்பிலும், பிறமொழிகளில் அமைந்த புதிய செய்திகளை அறிமுகப்படுத்துவதிலும் அமைந்தது. இதனைக் கருத்தில்கொண்டே அனைத்திந்திய அறிவியல் தமிழ்க்கழகத்தின் பதின்மூன்றாம் க்ருத்தரங்கத்தின் ஓர் அங்கமாக **அறிவியல் தமிழ் நூல்களும் இதழ்களும்** எனும் பொருண்மையில் ஒரு நூல் வெளியிடப்பெற்றது. இக்கழகத்தின் பதினான்காம் கருத்தரங்கத்தின் மற்றோர் அங்கமாகத் **தமிழ் வளர்ச்சியில் இதழ்கள்** எனும் தலைப்பில் சிறப்புக் கருத்தரங்கம் ஒன்று நடத்தவும் தீர்மானிக்கப்பெற்றது.

2005-ஆம் ஆண்டிற்கு வேறொரு சிறப்பும் உண்டு. படிப்பறியாத பாமரரையும் எழுத்துக்கூட்டிப் படிக்கச் செய்து

நாட்டுநடப்புகளை நன்கறியச் செய்த தினத்தந்தியைத் தோற்றுவித்தவரான அமரர் சி.பா. ஆதித்தனார் அவர்களின் நூற்றாண்டு விழா ஆண்டாகும் இது. **அறிவியல் அறிஞர்கள்** எனும் தலைப்பில் நடைபெறும் அறிவியல்தமிழ்க் கழகத்தின் 14-ஆம் கருத்தரங்கத்தின் சார்பில் **தமிழ் வளர்ச்சியில் இதழ்கள்** எனும் கருத்தரங்கை அமரர் சி.பா. ஆதித்தனார் அவர்களின் நூற்றாண்டு விழாச் சிறப்புக் கருத்தரங்கமாக நடத்திடவும் முடிவு செய்யப் பெற்றது. இக்கருத்தரங்குகளைத் திருச்செந்தூர் ஆதித்தனார் கலை அறிவியல் கல்லூரியுடன் இணைந்து அக்கல்லூரியில் நடத்துவது பொருத்தமாக அமையும் எனக் கருதப் பெற்றது. தொடர்ந்து, அக்கல்லூரியின் நிருவாகத் தலைவரும், தினத்தந்தி அதிபருமான **வள்ளல் பெருந்தகை டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார்** அவர்களின் இசைவும் பெறப்பட்டது.

இந்நிலையில் **தமிழ் வளர்ச்சியில் இதழ்கள்** எனும் பொருண்மையில் பல கட்டுரைகள் பெறப்பட்டன. இவற்றில் பெரும்பாலும் அமரர் சி.பா. ஆதித்தனார் அவர்களால் தொடங்கப் பெற்றுத் தொடர்ந்து டாக்டர் பா. சிவந்தி ஆதிததனாரின் சீரிய தலைமையில் இயங்கிவரும் தினந்தந்தி தொடர்பான கட்டுரைகள் அமைந்தன. பிற இதழ்கள் ஆற்றிவரும் தமிழ்த் தொண்டுகள் குறித்தும் சில கட்டுரைகள் அமைந்தன. இவை ஒட்டுமொத்தமாக நூலாக்கம் செய்யப் பெற்றுள்ளன. **அறிவியல் அறிஞர்கள்** எனும் தலைப்பில் நடைபெறும் அனைத்திந்திய அறிவியல் தமிழ்க் கழகத்தின் பதினான்காம் கருத்தரங்கத்திற்கும், **தமிழ் வளர்ச்சியில் இதழ்கள்** கருத்தரங்கத்திற்கும் அனைத்துச் செலவுகளையும் ஏற்றுக் கொண்ட **பெருந்தகை டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார்** அவர்களுக்கு இக்கழகத்தின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இச்சிறப்புக் கருத்தரங்கு சிறப்புற நடைபெறுவதற்கு எல்லா ஆலோசனைகளையும் வழங்கிய இக்கழகத்தின்

தலைவரும் தமிழ்ப் பல்கலைக்கழக முன்னைத் துணை வேந்தருமான பேராசிரியர் முனைவர் ச. அகத்தியலிங்கம் அவர்களுக்கும், இதன் செயலாளர் பேராசிரியர் முனைவர் இராம சுந்தரம் அவர்களுக்கும், பொருளாளர் மருத்துவர் முனைவர் சு. நரேந்திரன் அவர்களுக்கும் என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

இச்சிறப்புக் கருத்தரங்கம் ஆதித்தனார் கலை அறிவியல் கல்லூரியில் நடைபெறுவதற்கான அனைத்து ஏற்பாடுகளையும் செய்துதவிய அக்கல்லூரியின் முதல்வர் முனைவர் பா. செல்வராஜ் அவர்களுக்கும், அவருடனிருந்து கருத்தரங்கப் பணிகளைச் செய்துதவிய அக்கல்லூரியின் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் மா. இராமச்சந்திரனுக்கும், தமிழ்த்துறை ஆசிரியர்களுக்கும், கல்லூரியின் அனைத்து நிருவாகிகளுக்கும் ஏனையோர்க்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இக்கருத்தரங்கு தொடர்பான அனைத்துப் பணிகளுக்கும், என்னுடனிருந்து உதவிவரும் முனைவர் ஆ. தசரதன் அவர்களுக்கும், இந்நூலிற்கான கணினி ஒளி அச்சுக்கோப்புச் செய்ததோடு அழகுற அச்சிட்டும் தந்த சிதம்பரம் சபாநாயகம் அச்சகத்தார்க்கும் நன்றி.

சென்னை
27.05.2005

**சா. கிருட்டினமூர்த்தி**
இணைச் செயலாளர்

# பொருளடக்கம்

# தமிழ் வளர்ச்சியில் இதழ்கள்

முனைவர் பா. மாலினி

அறியாமை இருளகற்றி அறிவுச் சுடரை ஏற்ற வல்லவை இதழ்கள். காற்றினைப் போல மனித உள்ளங்களிடையே எங்கும் பரவிப் புகுந்து கலந்து நிறைவாய்ப் பொங்கி ஒளிரும் தன்மை கொண்டவை. சனநாயகத்தின் பிற தூண்களாகிய ஆட்சி, நீதி, நிர்வாகம், என்பவை தவறு செய்கின்றபோது, அதைத் தட்டிக் கேட்டு, சனநாயகத்தைச் சரிந்து விழாமல் காக்கின்ற நான்காவது தூணாகச் செயல்படுபவை இதழ்களே. இதழ்களின் வளர்ச்சி, சனநாயக வளர்ச்சியின் உடனிகழ்ச்சி யாகக் காணப்படுகின்றது.

வாழ்க்கை நியதிகள் வேறு, சமயக் கொள்கைகள் வேறு என்றில்லாமல், வாழ்வியலைச் சமயத்தோடு பின்னிப் பிணைந்து காணும் நாடு நம் பாரத நாடு. சமய நெறிகளால் தான் நிம்மதியான வாழ்வினை ஏற்படுத்தித் தரமுடியும் என நம்புகின்ற மக்களின் தன்மையால், ஞானிகள் பலர் தோன்றி, பல்வேறு தத்துவங்களைப் பொழிந்த பெருமையும் நமது பாரத நாட்டிற்கு உண்டு. எனவே தான், நம் நாட்டினை 'ஞானத்தில்' உயர்ந்த நாடாகக் கண்டார் மகாகவி பாரதியார்.

தமிழ் இதழியல்துறை காலனிய ஆட்சியின் விளைவாகப் பிறந்தது எனலாம். தொடக்கக் காலத்தமிழ் இதழ்களில் பெரும்பாலும் சமயக் கருத்துக்களை வெளிப்படுத்துவனவாகக் காணப்படுகின்றன (திருச்சபை இதழ் 1815, **சத்தியதூதன் 1835, பாலதீபிகை 1840, நற்போதகம் 1840**).

1860-களில் தமிழ்ச் சமூகத்தில், மரபுவழிச் சமூகத்தில் அமைந்துள்ள பல குறைபாடுகளைப் பற்றி ஆங்கிலம் படித்தவர்கள் சிந்திக்கத் தொடங்கினர். மேலும் சாதியம் குறித்த மறுபார்வை வரலாற்றில் முதன்முதலாக இக்காலத்தில்தான் பேசப்பட்டது. கால்டுவெல், கேசவ சந்திரசேனார் போன்றோரின்

---

பேராசிரியர், தமிழியல் துறை, அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

கருத்துகள் தமிழ்ச் சமுதாய மக்களிடம் புதிய விழிப்புணர்வுச் சிந்தனைகளைத் தூண்டின. 1869-இல் மாயூரம் வேதநாயகம் பிள்ளை எழுதிய பெண்கல்வி என்ற நூல் பெண்களுக்கான கல்வியை வலியுறுத்தியது. 1882-இல் சுதேசிமித்திரன் என்ற இதழ் தொடங்கியது. 1885-இல் இந்தியத் தேசியக் காங்கிரசு இயக்கம் நம்நாட்டில் தோன்றியது. நாட்டு விடுதலைப் போராட்டத்தில் 1920 வரை திலகரும் அவருக்குப் பின்னர்க் காந்தியாரும் செயல்பட்டனர்.

இந்தப் பின்புலத்தில் தமிழ் இதழ்கள் தேசத் தலைவர் களின் கருத்துகளை மக்களிடம் எடுத்துக் கூறியவாறு இருந்தன.

தமிழ் இதழ்களில் விடுதலைச் சிந்தனை குறித்த விழிப்புணர்வுச் செய்திகள் வெளிவரத் தொடங்கின. தமிழ் இதழியல் துறையின் முன்னோடிகளாகவும் சாதனையாளர் களாகவும் ஜி. சுப்பிரமணிய ஐயர், மகாகவி பாரதியார், சுப்பிரமணிய சிவா, வ.உ.சி., திரு.வி.க., டாக்டர். பி. வரதராசுலு நாயுடு, பெரியார் ஈ.வே. ராமசாமி, டி.எஸ். சொக்கலிங்கம், சி.பா. ஆதித்தனார் ஆகியோர் கருதப்பட்டனர். இவர்களுடைய வழிகாட்டுதலில் தான் தமிழ் இதழியல் துறை நடந்துவந்தது.

விடுதலைப் போராட்டக் காலத்தில் இதழ்களை நடத்துவது எளியதான செயலன்று. அரசின் அடங்குமுறைச் சட்டங்கள், இதழியல் பதிவுச் சட்டங்கள், அவற்றின் நடைமுறை விதிகள் ஆகியன மிகவும் கடுமையானவையாக அமைந்திருந்தன. இச்சூழலில் இதழ்களைத் தொடங்கியவர்கள் நாட்டுப்பற்றும், விடுதலைப் போராட்டச்சிந்தனை உணர்வும் கொண்டவர்களாக இருந்தனர். அவர்களிடம் இதழ்களைத் தொடர்ந்து நடத்துவதற்கு (போதிய பணமும் பொருளாதார வசதியும் இல்லை. அவர்கள் சந்தாதாரர்களையும் சந்தாத்தொகையையும் நம்பியே இதழ்களைத் தொடங்கி நடத்தும் நிலை இருந்தது.) சந்தாதாரர்களைப் போலவே நன்கொடையாளர்களையும் இதழாளர்கள் நம்பியிருந்தனர். இந்நிலையினை அக்கால இதழ்களின் துணைக்கொண்டு அறியலாம்.

அக்காலத்தில் பத்திரிகைக் கடைகள் இப்போது இருப்பதைப் போன்று இருந்ததாகத் தெரியவில்லை. எனவே, எழுத்திலே முன் ஒப்புதல் தரும் வாசகர்களின் எண்ணிக்கைக்குத் தக இவ்விதழ்கள் அச்சடிக்கப் பட்டிருக்கலாம்.

அக்காலத்தில் பத்திராதிபர், இதழாளர், சந்தாதாரர் (கையொப்பக்காரர்கள்) என்ற சொற்களே இதழியல் துறையில் கையாளப்பட்டுள்ளன. சந்தாதாரர்களிடமிருந்து கறார்த்தன்மை யுடன் பணத்தைப் பெற இதழாசிரியர்களால் முடியவில்லை. எனவே, பெரும்பாலான இதழ்களில் சந்தாதாரர்களுக்கு நினைவூட்டுதல்களும் வேண்டுகோள்களும் தொடர்ந்து வெளியிடப்பட்டுள்ளதைக் காணமுடிகின்றது. பொது நல நோக்கம் உடையவர்களால் மட்டுமே இதழ் நடத்தப் பட்டதையும் உணர முடிகின்றது. புகழ் பெற்ற இதழாளராகக் கருதப்பெறும் ஈ.வெ.ரா. கூட மூன்று சந்தா சேர்த்துக் கொடுத்தவரின் பெயர் கூறி நன்றி அறிவிப்புச் செய்திருப்பதை எண்ணிப்பார்க்க வேண்டியுள்ளது. **முஸ்லீம் லீக்** என்ற இதழ் சந்தா செலுத்த இயலாதவர்களுக்கு இலவசமாக அனுப்பப் பெற்றுள்ளது இதழியல் வரலாற்றில் குறிப்பிடத்தக்கதாகும்.

இன்றைய சூழ்நிலையில், பல்வேறு சமுதாயக் காரணங்களால் மக்கள் மனச்சோர்வுற்றுத் தடுமாறித் திரியும் கோலத்தைக் காணநேரிடுகிறது. ''எத்தைத் தின்றால் பித்தம் தீரும்'' என்ற தன்மையில் எவ்வாறேனும் தங்கள் துன்பம் தீராதா என்ற மனவேட்கையில் பல தரப்பு மக்களும் தவிப்புக் கொண்டுள்ளனர். இத் தவிப்பினைத் தங்கள் முதலீட்டிற்கு ஆதாரமாக எடுத்துக் கொண்டு, பாரத மக்களின் நம்பிக்கை மிகுந்த சமயநெறிகளை இன்றைய இதழ்கள் தங்கள் சந்தைப் பொருளாக்கிக் கொண்டுள்ளதை அறியமுடிகிறது. வாசகர்களின் ஓய்வு நேரத்தை முற்றுகையிட்டு, அதற்காகப் பல விதமான உத்திகளைக் கையாண்டு, தங்கள் விற்பனையைப் பெருக்கிக் கொண்டு பல இதழ்கள் ஆதாயம் அடைகின்றன. அதில் ஓர் உத்தியாகத்தான் ஆன்மீகச் செய்திகளை வெளியிடுவதும் உள்ளது.

தமிழக இலக்கிய வரலாற்றில் இதழியல் வரலாற்றுக்கும் சிறப்பிடம் உண்டு. தமிழ் மொழியில் உரைநடையை வளர்த்தும், நாவல், சிறுகதை முதலான புதிய இலக்கிய வடிவங்களைப் பெருக்கியும், அகராதியை அறிமுகப்படுத்தியும், இவற்றுக்கு மிக உதவியாக அச்சுப் பொறியை வழக்கத் திற்குக் கொண்டு வந்தும் தொண்டு புரிந்தவர்கள் கிறித்துவ மிசனரிகளும் பாதிரிமார்களும். அவர்களே தமிழ் இதழ்கள் வெளியிடுவதிலும் முன்னின்றுள்ளனர். சமயப் பரப்புதலுக்கு ஏற்றவொரு கருவியாக இதழ்களைக் கருதிய அவர்கள் கி.பி.

1831-ஆம் ஆண்டு **தமிழ் மேகசீன்** என்னும் மாத இதழை வெளியிட்டனர். தொடர்ந்து பல்வேறு இதழ்களையும் வெளியிட்டனர். பின்னரே, இந்து, இசுலாம், சமணம் ஆகிய மதங்கள் தங்களுக்கு உதவியாக இதழ்களைக் கண்டன.

பாளையங்கோட்டையிலிருந்து கே. ஆறுமுகம் பிள்ளையை ஆசிரியராகக் கொண்டு கி.பி. 1883-இல் **இந்துமதச் சீர்திருத்தி** என்னும் இதழ் வெளிவரத் துவங்கியது. **தத்துவ போதினி, விவேக விளக்கம், அமிர்த வசனி** போன்ற இதழ்கள் சமயக் கட்டுரைகளை வெளியிட்டு மக்களைக் கவர்ந்தன. **இஸ்லாம் நேசன், தத்துவ இஸ்லாம்** முதலிய இதழ்கள் இசுலாம் சமயக் கருத்துகளை உள்ளடக்கி வெளிவந்தன. இவை துவக்கத்தில் வாசகர் நோக்கும், இதழியல் போக்கும் சமய இதழ்களாகவே விளங்கின எனலாம். பின்னர்ச் சமுதாயச் செய்திகளும் விடுதலை இயக்கச் செய்திகளும் தாக்கமும் விடுதலை இயக்கங்களின் தாக்கமும் இதழ்களில் அதிகமாகவே இருந்தன. சமுதாயம் சார்ந்த மறுமலர்ச்சிக் கருத்துகளைத் திராவிட இயக்கமும் இதழ் களின் மூலமாக மக்களிடம் பரப்பின. மூடநம்பிக்கையை முழு மூச்சோடு எதிர்க்கத் துவங்கிய அவ்வியக்கம் அதனோடு சமயக் கருத்துகளையும் சாடியது. இந்நெருக்கடியில் சமயம், இதழ்களில் பெரிதும் இடம்பெற வாய்ப்புகள் குறைந்து போயிற்று. திராவிடக் கட்சிகள் தமிழகத்தில் ஆட்சியுரிமையைப் பெற்றுப் பல ஆண்டுகள் வரையிலும் இந்நிலையே நீடித்தது. சில குறிப்பிட்ட இதழ்களன்றி (எ.கா. **கல்கி, ஆனந்தவிகடன்**) மற்ற இதழ்களில் சமயம் சார்ந்த செய்திகள் அருகி இடம் பெற்றன.

ஈ.வெ.ரா. பெரியாரின் மறைவிற்குப் பின்னர்ப் பகுத்தறிவு இயக்கத்தின் கூர்மை குறைய ஆரம்பித்தது எனலாம். மிகுதியான சமுதாய நெருக்கடிகளின் காரணமாக மக்களின் மனநிலையும் நிம்மதிப் போக்கினை நாடியது. அதற்கு ஆன்மீகம் வழியேற் படுத்தித் தருவதைக் கண்ட இதழ்கள் சமயம் சார்ந்த செய்தி களை வெளியிடத் துவங்கின. இன்று அளவிறந்த இதழ்கள் வெளிவருகின்ற சூழ்நிலையில் பல இதழ்களும் தங்களுக் கென்று தனி இடத்தைப் பெற்றதாக வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. எனவே, வாசகர்களைக் கவரும் விதமாக ஆன்மீகச் செய்திகளை இதழ்கள் வெளியிடுகின்றன. இப்போட்டியின் காரணமாகச் சமயச் செய்திகளுடன் மூடநம்பிக்கைக் கருத்து களும் கூட இடம்பெறுகின்ற நிலை ஏற்பட்டுள்ளது.

இன்று ஆன்மீகச் செய்திகளுக்கென்றே தனி இதழ்கள் பல உள்ளன. மாத இதழ், மாதமிருமுறை என இவை வெளி வருகின்றன. (எ.கா : ஞானபூமி, **குமுதம், பக்தி ஸ்பெஷல், ஞான ஆலயம், ஆலய தரிசனம்,** ராமகிருஷ்ண **விஜயம்)** இவையனைத்துமே இந்து சமயச் செய்திகளைத் தாங்கி வருபவை. சில நேரங்களில் பிற சமயச் செய்திகளும் இவற்றில் இடம் பெறுவதுண்டு. தமிழ் நாட்டின் பெரும்பான்மைச் சமயமான இந்து சமயத்திலுள்ள மக்களைக் குறிவைத்து நடத்தப்படுபவை இவ்விதழ்கள். இதழ்ப்பெருக்கத்தின் காரணமாகச் செய்திகள் அதிகமாகப் பெறுவதில் இடர்ப்பாடுகள் உள்ளன. இதன் விளைவாக மூலை முடுக்குகளில் உள்ள சிறு தெய்வக் கோவில்கள்கூட இவ்விதழ்களில் இடம் பெறுகின்றன. வணிகப் போட்டியின் காரணமாக இவ்விதழ்கள் வாசகர்களைக் கவரப் பல விதமான இலவசப் பொருட்களையும் வழங்கு கின்றன. தெய்வங்களின் வண்ணப்படங்கள், பக்திப் பனுவல்கள், தெய்வ உருவ டாலர்கள், பூஜை செய்யப்பட்ட தகடுகள், கயிறுகள், திருநீறு, குங்குமம், தீர்த்தம் என இலவசப் பொருட்களின் பட்டியல் நீண்டு கொண்டே செல்கிறது. ஆன்மீகச் செய்திகளுக்காக இல்லாவிடினும் இலவசப் பொருட் களுக்காக இதழ் வாங்குவோர் எண்ணிக்கையும் கணிசமானது தான். பிற சமய இதழ்களில் இப்போக்கு இருப்பதாகத் தெரிய வில்லை. பெண்கள் இதழ்களிலும் ஆன்மீகச் செய்திகள் குறிப்பிட்ட இடத்தைப் பெறுகின்றன. பெரும்பாலான பெண்கள் இதழ்கள், பெண்களைச் சிறந்த சமையற்காரிகளாக, சிறந்த பக்தைகளாக உருவாக்குவதில் கவனம் செலுத்துகின்றன. எனவே சமயம் சார்ந்த செய்திகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து வெளியிடுகின்றன. சமயப் போர்வையில் மூடநம்பிக்கைக் கருத்துகளும் கூட வெளியாகின்றன.

மனிதனது நடைமுறை வாழ்க்கைத் துன்பங்களை மறந்து இயல்பான வாழ்க்கைக்கு அவனைத் தயார் செய்வதில் சமயங்களுக்குப் பெரும்பங்கு உண்டு. இந்நிலையைத் தங்களுக்குச் சாதகமாக எடுத்துக்கொண்டு இதழ்கள் செயல் பட்டு, ஆன்மீகச் செய்திகளை வெளியிடுகின்றன. இன்றைய இதழ்களில் இடம்பெறும் ஆன்மீகச் செய்திகளையும் அவை இடம் பெறும் தன்மையினையும் நோக்குமிடத்து, வணிக நோக்கிற்காகவே இன்றைய இதழ்கள் ஆன்மீகச் செய்திகளைப் பெருமளவிற்குப் பயன்படுத்துகின்றன எனனும் உண்மை புலப்படுகின்றது.

## இதழ்களின் மொழி நடை

''இலக்கணமும் இலக்கியமும் தெரியாதான்
ஏடெழுதல் கேடு நல்கும்
தலைக் கணையில் நெருப்பிட்டுத் தலைவைத்துத்
துயில்வது போல் பகைவனைப் போய்
நிலைப்புற்ற தமிழ் ஏட்டில்
ஆசிரியனாக்குவது நீங்க வேண்டும்
கலைப்பண்பும் உயர்நினைப்பும் உடையவரே
ஏடெழுதும் கணக்காளர்கள்'' - பாரதிதாசன்

செய்திகளைத் தருவது இதழ்களின் தொழில். அச் செய்திகள் எல்லோர்பாலும் சென்று சேரும்படி செய்வது அவற்றின் திறன். இத்திறனை முழுமையுறச் செய்வது அவை கையாளும் மொழி நடை. எனவே அனைவரும் அறிந்திருக் கின்ற எளிய சொற்களில் தெளிவாகச் செய்திகளைத் தெரிவிப்பது தான் இதழ்களுக்குரிய மொழி நடையாகும். இம்மொறழி நடை ஆழ்ந்து கற்போர்க்கே புலப்படும்.

மொழியில் மாற்றங்கள் அரசியல், தொழில், பொருளாதாரம், பண்பாட்டு மாற்றம், வேற்றுமொழித் தாக்கம் போன்ற காரணங்களால் ஏற்படுகிறது. இத்துடன் சமுதாய அளவிலான இனம், மதம், சாதி, கல்வி, பொருளாதாராம், வயது, பால், தொழில், சூழல், பதவி நிலை முதலியனவும் மொழி மாற்றத்தைத் தோற்றுவிக்கின்றன.

பொதுவாக இதழ்களின் மொழிநடை காலச்சூழலுக்கும் மனிதனின் தனித்தன்மைக்கும் ஏற்ப அமைந்துள்ளது. விடுதலைக்கு முன்னுள்ள இதழ்கள் தேசிய ஒருமை, விடுதலை வேட்கை இவற்றை மையமாகக் கொண்டு மணிப்பிரவாள நடையிலும் ஆங்கிலம் கலந்த கலப்பு நடையிலும் எழுதின. **உதயதாரகை, சுதேசிமித்திரன்** மொழிநடை இவ்வகையைச் சாரும். விடுதலை உணர்வுக்குப் பின் ஒன்று வடமொழிக் கலபபினை ஏற்கும் போக்காகவும், மற்றொன்று முடிந்த வரை தமிழிலேயே எழுத வேணடும் என்ற போக்கோடும் அமைந்து காணபபடுகின்றன. **தினமணி** வடமொழிச் சொற்களை மிகுதியும் கையாண்டு வருவது இதற்கு நல்லதோர் எடுத்துக் காடடாகும். பாரதியின் **இந்தியா**, திரு.வி.க. வின் **தேசபக்தன், நவசக்தி,** டாக்டர் வரதராசுலு நாயுடுவின் **'தமிழ்நாடு'**

போன்றவை தமிழ்ப்பற்றைத் தம் ஏடுகள் மூலம் வளர்க்கப் பாடுபட்டன.

திரு.வி.க. வின் காலத்தை மொழிநடையின் புரட்சிக் காலம் எனலாம். வடமொழியும், ஆங்கிலமும் கலந்து எழுதி வந்த இதழியல் துறையில் பெரியதொரு மாற்றம் ஏற்பட்டது. தமிழ் உணர்வோடு, எளிய சொற்கள் இதயத்தில் தைக்கும் வண்ணம் மெல்ல உலாவந்து மக்களைக் கவர்ந்தன. இதனை அவரே தமது வாழ்க்கைக் குறிப்பில்,

"அந்நாளில் நாட்டுமொழி பத்திரிகைகளில் அயல்மொழி நாற்றம் வீசும், அரசியல் குறியீடுகள் அந்நியத்தில் அப்படியே குறிக்கப்படும். தேசபக்தன் பத்திரிகையுலகில் புரட்சி செய்தான். புரட்சி நிகழ்ந்ததென்று பத்திரிகையுலகிற்கே தெரியாது. புரட்சிகளைத் தேசபக்தனில் காணலாம். தேசபக்தன் தமிழாக்கிய அரசியல் சொற்களும், சொற்றொடர்களும் குறியீடுகளும் இப்பொழுது பத்திரிகையிலும் மேடையிலும் பிறவிடங்களிலும் ஏற்றம் பெற்று அரசு புரிதல் வைள்ளிடைமலை, தேசபக்தன் அந்நிய மேகத்தின்றும் விடுவித்தான் என்று சொல்வது மிகையாகாது" என்று குறிப்பிடுகிறார். மேலும் அவர் கையாண்ட மொழிநடை, அவருக்குக் கைவந்த நிலையை, "யான் தமிழ்ப் பத்திரிகை ஆசிரியனானேன். தேசபக்தனுக்கென்று தனிநடை கொண்டேன். சிறுசிறு வாக்கியங்கள் அமைக்கலானேன். எளிமையில் கருத்துக்கள் விளங்கும் முறையைப் பின்பற்றினேன். அந்நடைய்ய நாடோறும் எழுதி எழுதிப் பண்பட்டமையால் அதுவே எனக்குரிய இயற்கையாகிறது. பழைய தொடர் மொழிகளும் என்னுள்ளேயே ஒடுங்கின. சமயம் நேர்ந்துழி சில நேரங்களில் அவை தலைகாட்டும் என்று விளக்கியுள்ளார்.

உழைப்பால் உயர்ந்த உத்தமர் சி.பா. ஆதித்தனாரால் நாளிதழ்களின் மொழிநடை பற்றி எழுதப்பெற்ற ஒப்பற்ற கருவூலம், **நான்-தாள் எழுத்தாளர்** கையேடு ஆகும். இக் கையேடு சில சொற்களை எவ்வாறு மாற்றி எழுத வேண்டும் எனக் கூறுகிறது. வடமொழி எழுத்துகளை எவ்வகையில் பேச்சு வழக்கிற்கேற்ப எழுதலாம் என்பதையும், நீண்ட சொற்கள் சுருக்கப்படுவதையும், ஏற்றசொல்லை ஏற்றவிடத்துப் பயன் படுத்தும் முறையினையும் ஒரே சொல்லைத் திரும்பத் திரும்ப எழுதாமல் அப்பொருளைக் குறிக்கப் பல்வேறு சொற்களை எவ்வெவ்வாறு பயன்படுத்தலாம் என்பதையும், செய்திகள்

செய்வினை வாய்பாட்டாலேயே எழுதப்பட வேண்டும் என்பதையும் வாக்கியங்களை இலக்கணப் பிழை இல்லாமல் எவ்வாறு எழுத வேண்டும் என்பதையும், திணை, பால் வேற்றுமை, காலம் இவற்றை, எழுதுவோர் கவனத்தில் கொள்ள வேண்டுமென்பதையும் போன்ற கருத்துகளை வழங்கியுள்ளது.

இவ்வாறு காலச்சூழலுக்கும் மனிதனின் தனித்தன்மைக்கும் ஏற்ப இதழ்களின் நடை விடுதலைக்கு முன்னும், விடுதலைக்குப் பின்னும், தனித்தமிழ் இயக்கத்தின் தாக்குதலாலும், இலக்கிய, சமய, சமுதாய, அறிவியல், நாளிதழ்களின் தன்மைகளாலும் நடைபோட்டு வருவதை இனிது அறியலாம். இன்றைக்கு மொழிக்கெனத் தனிக்கழகங்களும், பல்கலைக்கழகமும் தோன்றிடினும் அவற்றை முழுமையாகச் செயல்படுத்தும் சாதனம் இதழியல்துறை ஒன்றேயாகும்.

# தென்னிந்திய இதழ்களின் வளர்ச்சியும் போக்கும்

**முனைவர் பெ. சுபாசு சந்திரபோசு**

இந்தியாவில் இதழ்கள் சுதந்திரத்திற்காகவும், சமுதாய வளர்ச்சிக்காகவும் ஆற்றிய பணிகள் குறிப்பிடத்தக்கன. விடுதலைக்குமுன் இதழ்கள் பல சோதனைகளை எதிர்கொண்டன. இருப்பினும் கொள்கைக்காகத் தொடர்ந்து போராடிய போக்கைக் காண முடிகிறது. அக்காலத்தில் இதழ்களின் வளர்ச்சியும், வாசிப்பும் ஒரு குறிப்பிட்ட அளவில் செயல்பட்டன.

இந்தியா விடுதலை பெற்றபிறகு இதழ்களுக்கு இருந்த சட்ட நெருக்கடிகள், அச்சுறுத்தல்கள் விலக்கப்பட்டன. அதே சமயத்தில் இதழ்களின் வளர்ச்சியைக் கருத்தில் கொண்டு 1954-ஆம் ஆண்டில் இந்திய அரசு ஒரு பிரஸ் கமிஷனை அமைத்தது. இதன் அறிக்கை இதழ்களின் வளர்ச்சி நிலை களைக் குறிப்பிட்டதோடு இதழ்களுக்கான ஒரு பதிவாளரை (Registrar of Newspapers of India) நிறுவப் பரிந்துரைத்தது. இப்பரிந்துரையின்படி 1956-ஆம் ஆண்டில் புதுதில்லியைத் தலைமையகமாகக் கொண்டு இதழ்களின் உரிமத்தை, செயல் பாட்டைப் பதிவாளர் (RNI) கண்காணித்து வருகிறார். முதல் பிரஸ் கமிஷன் அறிக்கையின்படி இந்தியாவில் 330 நாளிதழ்கள் மொத்தம் 25 லட்சம் பிரதிகளை விற்பனை செய்தன. அதாவது 2005-இல் நாளிதழ்களையும் பிற இதழ்களையும் கணக்கிட்டால் 70,000 இதழ்கள். மொத்த விற்பனைப் பிரதிகள் 70 மில்லியன் என்று கணக்கிடலாம் (1993-கணக்கின்படி 67.611).

ஆசியாவிலேயே அதிக நாளிதழ்களை வெளியிடும் இரண்டாவது நாடாகவும், அமெரிக்க ஐக்கிய நாடுகள், ஜெர்மனி, சீனா ஆகியவற்றுக்கு அடுத்தபடியாக உலகில் நான்காவது இடத்தையும் இந்தியா பெற்றுள்ளதை ஆர்.என்.ஐ. குறிப்பிட்டுள்ளது.

---

தமிழ்ப் பேராசிரியர், பிஷப் ஹீபர் கல்லூரி (தன்னாட்சி), திருச்சி - 620 017

இந்தியாவில் 1976-ஆம் ஆண்டுக்குப் பின் இதழ்களின் எண்ணிக்கையும், வாசகர் பெருக்கமும், புதிய தொழில் நுட்பமும் இதழியல் துறையில் ஏற்பட்டன. வளரும் நாடு களில் யுனெஸ்கோ மதிப்பீட்டின்படி 100 நபருக்கு 10 செய்தித் தாள் பிரதிகள் என்று கணக்கிட்டுள்ளது. இந்த இலக்கை இந்தியா இன்னும் எட்டவில்லை. தொலைக்காட்சிகளின் வரவுக்குப் பின்னும் நாளிதழ்களின் விற்பனை 40 சதவீதம் அதிகரித்துள்ளது.

மக்கள்தொகைப் பெருக்கம், பொருளாதார வளர்ச்சி, படித்தவர் எண்ணிக்கை விகித உயர்வு, செய்திகளின் வாசிப்புத் தேவை அதிகரித்தும் இன்னும் நாம் இலக்கை அடைய வேண்டியுள்ளது. இக்கட்டுரையில் தென்னிந்திய மொழிகளான தமிழ், மலையாளம், கன்னடம், தெலுங்கு ஆகியவற்றில் வெளிவரும் இதழ்களைப் பற்றிய வளர்ச்சியும், போக்கும் மதிபபிடப்பட்டுள்ளது.

**தமிழ்**

தமிழ்நாட்டில் விடுதலை இயக்கக் காலந்தொட்டு இதழ் களுக்குப் பலகோணங்களில் வரலாறு உண்டு. விடுதலை இயக்கம், இலக்கிய இயக்கம், சீர்திருத்த இயக்கம் முதலிய வற்றின் சாரபில் இதழ்கள் வெளிவந்து சமுதாய வளர்ச்சிக்குப் பங்காற்றியுள்ளன.

தமிழ்நாட்டில் **தினத்தந்தி, தினமணி, தினகரன், தினமலர்** போன்ற முன்னணி நாளிதழ்கள் வெளிவருகின்றன. **மாலை மலர், மாலைமுரசு, தமிழ்முரசு** போன்ற நாளிதழ்களும் வெளிவருகின்றன. இதழ்களின் மையம் சென்னையாக இருந்தாலும் திருச்சி, கோவை, சேலம், திருநெல்வேலி, மதுரை போன்ற இடங்களிலிருந்தும் அச்சிட்டு வெளியிடுகின்றனர்.

முதலில் வெளிவந்த நாளிதழான சுதேசமித்திரன் வரலாற்றுச் சிறப்பும், பழமையும் வாய்ந்தது. இதைத தொடங்கிய சுப்பிரமணிய ஐயர் என்றும் நினைக்கப்பட வேண்டியவர். இதில் பாரதியாரும் பணியாற்றியுள்ளார். இதை மூட வேண்டிய கட்டாயம் வந்து மூடிவிட்டது. பின்னர் இதை மீண்டும் தொடங்கி வெற்றி பெற முடியவில்லை. சுதேசமித்திரன் யுகம் வேறு, இன்றைய இதழியல் போக்கு வேறு என்பதே அதன் தோல்விக்குக் காரணம்.

வார இதழ்களில் குமுதம், ஆனந்த விகடன், கல்கி, குங்குமம், தேவி, ராணி, ஜுனியர் விகடன், ரிப்போர்ட்டர் போன்றவை குறிப்பிடத்தக்கவை. இவற்றில் வார இதழ்களில் பொழுதுபோக்கு அம்சம் நிறைந்த ஆனந்த விகடன், குமுதம், ஜுனியர் விகடன் போன்ற இதழ்களின் விற்பனை மேலோங்கி நிற்கிறது.

நாளிதழ் வாசிப்பில் பலரைப் படிக்கவைத்த பெருமை ஆதித்தனாருக்கு உண்டு. அவர் தொடங்கிய *தினத்தந்தி* இந்திய அளவில் 15-வது இடத்தை பெற்றிருப்பதோடு 1994-ஆம் ஆண்டின் கணக்குப்படி 3,46,000 பிரதிகள் விற்பனையாகி யுள்ளன. பெருநகர் முதல் கிராமம் வரை பரவியுள்ள நாளிதழ் *தினந்தந்தி*. இது புதிய தொழில்நுட்பத்திலும், செய்தி வெளியீட்டிலும் புதிய அணுகுமுறையில் செயல்பட்டு வருவதும் குறிப்பிடத் தக்கது.

**தெலுங்கு**

சென்னை மாகாணத்திலிருந்து (*Madras Presidency*) ஹைதராபாத் சமஸ்தானம் பிரிந்து ஆந்திரப் பிரதேசமாக 1956-இல் உருவாகியது. ஹைதராபாத் நகரைத் தலைநகர மாகக் கொண்ட ஆந்திர பிரதேசத்தில் சுதந்திரத்திற்கு முன் தோன்றிய **டெக்கான் கிரானிகிள்** குழுவின் ஆந்திர பூமி நாளேட்டைத் தவிர வேறு நாளிதழ்கள் தோன்றவில்லை.

1974-இல் முதலில் விசாகப்பட்டினத்திலும் பின்னர் ஓராண்டு கழித்து ஹைதராபாத் நகரிலும் **ஈநாடு** என்னும் நாளிதழ் தோன்றிய பின்னரே தெலுங்கு மொழி இதழ்கள் தோன்றும் உத்வேகம் பிறந்தது. இதற்கு முக்கியமான காரணம் எழுத்தறிவு வளர்ச்சியும், பொருளாதார வளர்ச்சியும் ஆகும். ஈநாடு மொழிநடையில் தனித்தன்மையுடன் செய்திகளை வாசகர்களுக்கு அளிக்கும் முறையில் புதிய உத்திகளைக் கையாண்டு வெற்றிப் பெற்றது. சேகரித்த செய்திகளை அப்படியே வெளியிடாமல் அவற்றின் உண்மைத் தன்மை களை ஆராய்ந்து வெளியிடுதல், புலனாய்வு முறையில் செய்திகளை வெளியிடுதல், மக்களின் உணர்வுகள், கருத்துகள், சம்பவங்கள் நடைபெற்ற விதம் ஆகியவற்றைச் செய்திப் பத்திகள் பிரதிபலித்தன. இவ்வாறு ஈநாடு நாளிதழ் தெலுங்கு வாசகர்களைத் தன் வசமாக்கியது. ஈநாடு இதழுக்கு உந்து சக்தியாக விளங்கியவர் ராமோஜி ராவ். திருப்பதியில் 1982-ஆம்

ஆண்டிலும், 1991-இல் ஆனந்த்பூர் மற்றும் கரீம்நகர் ஆகிய பகுதிகளிலும், 1992-இல் ராஜமுந்திரியிலும் ஈநாடு பதிப்புக் களைத் தோற்றுவிதது விரிவுப்படுத்தினார். இவ்வாறாக **ஈநாடு** நான்கு லட்சம் பிரதிகள் விற்பனையைத் தாண்டியுள்ளது. இதைத் தவிர மாநிலத்திலுள்ள 27 மாவட்டங்களிலும் அநேகமாக அனைத்திலும் ஒரு மாவட்டப் பதிப்பைக் கொண்டுள்ளது. இதற்கு முன்னதாக 1960-இல் விஜயவாடாவில் தொடங்கப்பட்ட எக்ஸ்பிரஸ் நிறுவனததுக்குச் சொந்தமான **ஆந்திர பிரபா,** ஈநாடு அளவுக்கு வளர்ச்சியடையவில்லை. விடுதலைப் போராட்டக் காலத்தின்போது முனைப்புடன் செயல்பட்டதற்காக நற்பெயர் பெற்ற இவ்விதழ் ஆந்திர மாநில எல்லைகளைத் தாண்டிச் சென்றும் அதன் விற்பனை எண்ணிக்கை அதிகரிக்கவில்லை.

1984-இல் தொடங்கப்பட்ட **உதயம்** இதழ் 1995-இல் மூடப்பட்டு விட்டது. இதேபோல் பழைமை வாய்ந்த தெலுங்கு நாளிதழான **ஆந்திர பத்திரிகாவை** உயிர்ப்பிக்கும் முயற்சியும் தோல்வி கண்டது. இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் **விசால ஆந்திராவும்** தோல்வியடைந்தது.

இதழியல் துறையில் ஒருபுறம் செய்தி இதழ்கள் (*News Magazines*) தோல்வியடைந்து கொண்டிருக்க, மற்றொருபுறம் பொழுதுபோக்கு அம்சங்கள் நிறைந்த வார இதழ்கள் மிகப் பெரும் வளர்ச்சியைப் பெற்றுள்ளன. 1984-இல் விஜயவாடாவில் நிறுவப்பட்ட **ஸ்வாதி சபரிவார் பத்திரிகா** ஒரு முன்னணி வார இதழாகத் திகழ்கிறது. இதனால் நாளேடுகள் வார இதழ்களை நடத்தும் முயற்சியில் ஈடுபட்டன. ஈநாடு நிறுவனம் **சிதாரா, சித்ரபூமி** ஆகிய இரண்டும் சினிமா இதழ்களை வெளி யிடுகின்றது. **ஆந்திர ஜோதி** என்னும் நாளிதழ் **மாலஜோதி** என்ற குழந்தைகள் மாத இதழ் ஒன்றையும் பிரசுரித்து வருகிறது. அதே போன்று **அன்ன தாதா** என்ற விவசாயிகள் மாத இதழ் ஒன்றை ஈநாடு வெளியிடுகிறது. இது தவிர, **சதுரா** என்ற இலக்கிய மாத இதழையும், **விபுலா** என்னும் சிறுகதை களுக்கான மாத இதழ் ஆகியவற்றையும் அது பிரசுரிக்கின்றது. விபுலாவில், பிற இந்திய மொழிகளின் மொழிபெயர்ப்புச் சிறுகதைகள் வெளிவருகின்றன. தொழில்துறை பற்றிய மாத இதழ்களுடன் உடல்நலச் சிறப்பிதழ்களும் வெளியாகின்றன.

ஆந்திர பூமியின் ஸசித்ர வார பத்திரிகா, ஆந்திரபூமி நாளேட்டைவிடச் சிறப்பாக இயங்கி வருகிறது. ஆந்திர ஜோதியின் (விஜயவாடா) வார ஏடும் நன்கு விற்பனையாகிறது.

ஆங்கில நாளிதழ்களில் தி ஹிண்டு, இந்தியன் எக்ஸ்பிரஸ், டெக்கான் கிரானிகல் போன்றவை வெளிவருகின்றன. ஈநாடு ஆதரவில் வெளியாகும் நியூஸ் டைம் குறிப்பிடும்படியான வெற்றியைப் பெறவில்லை.

சுமார் 46 தெலுங்கு மொழி இதழ்கள் தமிழ்நாடு, மகாராஷ்டிரா, கர்நாடகா, தில்லி ஆகிய பகுதிகளிலிருந்து வெளி வந்தன. உருது மொழி இதழ்களுக்கு ஊக்கம் அளிக்கும் மரபு ஆந்திராவில் உண்டு. ஆந்திராவைச் சேர்ந்த சி.ஒய். சிந்தாமணி, எம். சலபதிராவ் போன்றவர்கள் குறிப்பிடத்தக்க இந்திய இதழியல் முன்னோடிகள்.

**மலையாளம்**

இந்தியாவிலேயே அதிகப் பிரதிகள் விற்பனையாகும் நாளேடு மலையாள மனோரமா. கேரளாவிலிருந்து பிரசுரமாகும் மலையாள மனோரமா ஐந்து பதிப்புகள் மற்றும் நாள் ஒன்றிற்கு ஏழு லட்சம் பிரதிகள் விற்பனையாகின்றது. அதன் வார இதழ் பத்து லட்சம் பிரதிகளுக்கும் கூடுதலாக விற்கப் படும் ஒரே இந்திய வார இதழாகும். தொலைக்காட்சியைவிட அதிகம் வாசகரைச் சென்றடையும் ஒரே சாதனமாகக் கேரளாவில் இருப்பது இதழ்கள் (*Print Media*). இது இம்மாநிலத்தின் தனித் தன்மை. இம்மக்கள் மலையாள மொழி மீது கொண்டுள்ள பற்றும், படிப்பறிவும், பொருளாதார மேம்பாடும், வாசிக்கும் பொதுக் கலாச்சாரமும் காரணங்களாக உள்ளன. ஆங்கில இதழ் களுக்கு இணையாக வாசகர் தேவையை நிறைவு செய்யும் போக்கும் மலையாள மொழி இதழ்களுக்கும் உண்டு. கோட்டயத்தைத் தலைமையிடமாகக் கொண்டு இயங்கும் மலையாள மனோரமா செய்தி இதழ்களில் முன்னிலை வகிக்கிறது.

மாத்ருபூமி, கேரள காமுதி, தேசாபிமானி போன்ற நாளிதழ் களும் ஓரளவு நல்ல விற்பனை நிலையை எட்டியுள்ளன. 1987-இல் ஏற்படுத்தப்பட்ட "மத்யமம்" நல்ல முன்னேற்றத்தைக் கண்டுள்ளது. இது தவிர கேரள அரசியலில் ஒரு முக்கிய சக்தியாகத் திகழும் நாளிதழ் சந்திரிக்கா ஆல் இண்டியா முஸ்லீம் லீக் கட்சியின் அதிகாரப்பூர்வ நாளேடாகும். இதேபோல் கொச்சி பங்குச் சந்தையை மையமாகக் கொண்டு இயங்கும் 'தனம்' என்ற வாராந்தரியும், எக்ஸ்பிரஸ் நிறுவனத்தின் **இந்தியன் எக்ஸ்பிரஸ்**, டைம்ஸ் குரூப் நிறுவனத்தின் **எகனாமிக் டைம்ஸ்** போன்றவை ஆங்கில நாளிதழ்களாகும்.

இது தவிர *மலையாள மனோரமா*, 1982-இல் *தீ வீக்* என்ற ஆங்கில வார இதழையும் தொடங்கியது. மேலும் மங்களம் என்ற வார இதழும் நல்ல வளர்ச்சியைப் பெற்றுள்ளது. வார இதழ்கள நல்ல இலக்கியச் செய்திகளைச் சாதாரண நிலையிலும், நாட்டு நடப்புகள், சிறுகதைகள், சிறப்புக் கட்டுரைகள், இலவசத் திருமணத் திட்டங்கள் போன்ற கூடுதல் சிறப்பு அம்சங்களிலும் கவனம் செலுத்தி வெற்றி கண்டுள்ளன. ஆனால் நாளிதழ்களுக்கும், வார இதழ்களுக்கும் போதுமான அளவு விளம்பர வருவாய் இல்லை. அவை விற்பனை வருவாயை மட்டுமே பெற்று நடைபெற்று வருகின்றன. இருப்பினும் கேரளத்தில் இதழ்கள் பெருமளவில் விற்பனை யாவது இம்மாநிலத்தின் தனித்தன்மையாகும்.

**இந்தியா டுடே** மலையாளப் பதிப்பாகவும் வெளிவருகிறது. **மாத்ருபூமி**, ***கிருஹலக்ஷ்மி*** என்ற பெண்களுக்கான மாத இதழையும், ***சித்ரபூமி*** என்ற சினிமா வார இதழையும் வெளியிடுகிறது.

கேரளத்தில் வளர்ச்சியடைந்த இதழ்கள் விற்பனையை எவ்வளவு அதிகரிக்க முடியுமோ அந்த அளவிற்குச் செயல் படும் எண்ணம் இருப்பதே வெற்றிகரமாக நடத்தவும் மேலும் விரிவடையச் செய்யவும் சாத்தியங்கள் அதிக அளவில் உள்ளன.

**கன்னடம்**

கன்னடத்தில் ரிசர்வ் வங்கியின் ஓய்வுபெற்ற கவர்னர் பெனிகல் ராமாராவ் ***சுஹாசினி*** என்ற மாத் வெளியீட்டைத் தொடங்கினார். இதேபோல் பெங்களூர் நகரின் டெக்கான் ஹெரால்டு நிறுவனத்தால் 1948-இல் பிரசுரமாகத் துவங்கிய **பிரஜா வாணி** படிப்படியாகக் கன்னட மொழியின் முன்னணி நாளேடாக வளர்ச்சி அடைந்தது. கர்நாடகாவில் கன்னடம், ஆங்கிலம், மராத்தி ஆகிய மொழிகளில் இதழ்கள் வெளிவருகின்றன.

பெங்களூரிலிருந்து பேராசிரியர் பி. லங்கேஷ் என்பவர், ஆசிரியராக இருந்து வெளியிடும் **லங்கேஷ்** பத்திரிக்கா கடந்த 10 ஆண்டுகளாக அதன் சொந்த வலுவில் நீடிக்கிறது. இவ்விதழ் விளம்பரங்களை ஏற்றுக்கொள்வதில்லை. உண்மையில் பெரிய அளவில் லாபம் ஈட்டுவது ஒரு கொள்கை அல்ல என்றால் விளம்பரங்கள் தேவை இல்லை என்பதை மிகவும் வலுவான

கருத்தாகக் கொண்டு இயங்கி வரும் **லங்கேஷ் பத்திரிக்கா** அரசியல்வாதிகளை விமர்சித்து, நடுநிலையில் உறுதியோடு எழுதி வெற்றி பெறுகிறது.

இதுதவிரச் சிவராம் கரந்த் **வஸந்தா** என்ற இதழை நடத்தினார். இதில் விவாதிக்கப்பட்ட கருத்துகளில் சுற்றுச்சூழல் பற்றி எழுதியது குறிப்பிட வேண்டிய ஒன்றாகும். ஞானபீடப் பரிசு பெற்ற மாஸ்தி வெங்கடேச ஐயங்கார் **ஜீவனா** என்ற கன்னட மாத இலக்கிய இதழைத் தொடங்கினர். **ஜீவனா மாஸ்தி** வெங்கடேச ஐயங்கார் மறைவுக்குப் பின்னரும் கன்னடத்தில் பிரசுரமாகி வருகிறது. இது கன்னடத்தில் வெளி வரும் பல இலக்கிய இதழ்களில் முக்கியமான ஒன்றாகும். தென்னிந்திய மொழிகளின் வார இதழ்களை மதிப்பிடும்போது ஒருசில மாறுதல்களைத் தவிர அனைத்தும் பொழுதுபோக்குத் தன்மையில் வெளிவருகின்றன. சிறுகதைகள், தொடராக வெளிவரும் புதினங்கள், சினிமா, செக்ஸ், வண்ணப் படங்கள், இதர கவர்ச்சிகரமான செய்திகள், அரசியல், திரைப்படம், நாட்டுநடப்புக் கட்டுரைகள் போன்றவையே பெரும்பாலும் இடம் பெறுகின்றன. இவையே தொடர்ந்து வாசகர்களிடம் வரவேற்பைப் பெற்றுள்ளன. இப்போக்குச் சமூகமயமாதல் என்னும் நோக்கிலும், சமூகப் பொறுப்பிலும் விலகிச் செல்லுவதைக் காட்டுகிறது.

**மதிப்பீடு**

சுதந்திரத்திற்கு முந்தைய காலக்கட்டத்தில் இதழ்கள் இந்திய விடுதலைப் போராட்டத்திற்கு ஒரு சக்தி வாய்ந்த ஆயுதமாகச் செயல்பட்டு வந்தன. சுதந்திரத்திற்குப் பின் மெல்ல மெல்ல இதழ்களின் தொண்டு மனப்பாங்கும், சமூக நோக்கும் மாறி வணிகத் தொழிற்சாலையாக உருவாகிவிட்டது.

ஆங்கிலேயருக்குச் சொந்தமான பெரிய இதழ்களான **டைம்ஸ் ஆப் இந்தியா, பயோனியர், தி மெயில், ஸ்டேட்ஸ்மேன்** ஆகியவை இந்தியர்களுக்குக் கைமாறிய பிறகு இதழ்கள் ஒரு தொழிற்சாலை என்ற முறையில் ஒரு புதிய கண்ணோட்டம் பெற்றன. இதழ்கள் ஒரு புனித நோக்கத்திற்காகப் பணி செய்கின்றன என்ற பழைய சித்தாந்தம் மாறி அதற்குப் பதிலாக நாளேடுகள் தனியார் வியாபார நிறுவனங்களாக மாறி விற்பனையில் வெற்றிபெற வேண்டும் என்ற நடைமுறைக்கு வந்துள்ளன.

இதழியல் துறை மற்றெல்லாத் தொழிற்சாலைகளைப் போலவே செயல்பட்டாலும் நாட்டின் அன்றாட நிகழ்வுகளில் அதற்கென்று ஒரு பங்கு உண்டு. ஒரு புதிய தேசத்தைக் கட்டமைக்கும் கடமையும் பொறுப்பும் கொண்ட ஒரு முக்கிய அங்கமாக இதழ்கள் செயல்பட வேண்டும். ஆனால் இதற்குத் தடையாக இதழ்களுக்குப் போட்டியாகத் தொலைக்காட்சி நிறுவனங்கள் மக்களைக் கவர்ந்துவிட்டன. பாமரன் முதல் படித்தவன் வரை அனைவரையும் தன்வசம் ஈர்த்து வரும் தொலைக்காட்சிகளின் வளர்ச்சிப் போக்கு இதழ்களுக்குப் பெரும் சவாலாக விளங்கி வருகிறது. தமிழ், தெலுங்கு, கன்னடம் ஆகிய மொழிகளில் தொலைக்காட்சி நிறுவனங்கள் ஆதிக்கம் செலுத்தி வருகின்ற நிலையில் மலையாளத்தில் மட்டும் இதழ்களே (*Print media*) ஆதிக்கம் செலுத்தி வருகின்றன. இதற்குக் காரணம் கேரளத்தில் படித்த மக்கள் அதிகம் இருப்பதே. அங்குள்ள மக்கள் பொழுதுபோக்கு நிகழ்வுகளைக் காட்டிலும் அறிவுபூர்வமான நிகழ்வுகளுக்கு முக்கியத்துவம் தருவதால் இதழ்கள் தொலைக்காட்சியைத் தோற்கடித்து விட்டன. தமிழ்நாடு, கர்நாடகா, ஆந்திர மாநிலங்களில் படித்தவர்களின் எண்ணிக்கை குறைவு என்பதோடு படித்தவர்களிலும் பெரும்பாலானோர் பொழுதுபோக்கு நிகழ்வுகளை மட்டுமே விரும்புவதால் இம்மாநிலங்களில் இதழ்களைவிட, தொலைக் காட்சிகளே அதிகம் ஆதிக்கம் செலுத்துகின்றன. அதிலும் குறிப்பாகத் தனியார் தொலைக்காட்சிகளின் ஆக்கிரமிப்பே அதிகம்.

தாக்கம் ஏற்படுத்த வல்லதும், உடனுக்குடன் நேரடி யாகவும் செய்திகளை வழங்கும் திறனும், மாறுபட்ட நிகழ்ச்சி களைத் தரக்கூடியதும், வலுவான பொழுதுபோக்கு அம்சங்கள் நிறைந்ததுமான தொலைக்காட்சிகளை இதழ்களுடன் ஒப்பிட முடியாது. ஆனால் இதழ்கள் மக்களுடைய வாழ்விற்கு நெருக்கமாக இருக்க முடியும். தொலைக்காட்சி, நிகழ்ச்சி களில் போதுமான அளவிற்கு உள்ளூர்த் தன்மை மிகுந்து காணப்படவில்லை. சம்பவங்கள் நடைபெற்ற நிகழ்வைச் சில படங்களை மட்டும் செய்திகளில் காட்டிவிடுகின்றன. எனவே தொலைக்காட்சிகளின் இக்குறைபாடுகளைக் கருத்தில் கொண்டு மக்களுக்கு முனைப்பான செய்திகளை அளிக்கும் இதழ்கள் அனைத்திந்திய கண்ணோட்டத்துடன் கூடுதலாகச் சிறப்புக் கட்டுரைகள், விமர்சனங்கள், விளக்கி எழுதும் செய்திகள், புலனாய்வு செய்தி அறிக்கைகள், பேட்டி, விவாதங்கள்

ஆகியவற்றை விளக்கமாக அளிப்பதன்மூலம் வாசகர்களை அதிக அளவில் சரியான முறையில் வழிநடத்துகின்றன.

எந்த ஒரு தொலைக்காட்சி அலைவரிசையும் என்னதான் சுதந்திரமாக இயங்குபவையாக இருந்தாலும் உள்ளூர்ச் செய்திகளை அளிப்பதில் பின்தங்கி விடுகின்றன. எனவே உள்ளூரில் நிகழும் சம்பவங்களை முக்கியப்படுத்தி எழுதி மக்களிடையே பிரதிபலிக்க வைக்க விரும்பும் உள்ளூர் இதழ்கள் அதை எவ்வாறு செய்வது என்பதை அறிந்துகொண்டால் பொழுது போக்கு அம்சம் ஒன்றையே பிரதானமாகக் கொண்டிருக்கும் தொலைக்காட்சிக்கு ஒரு சவாலாக இருக்க முடியும்.

எனவே தமிழ்நாடு, ஆந்திரா, கர்நாடக மாநிலங்களில் வெளிவரும் நாளிதழ்கள், வார இதழ்கள், மாத இதழ்கள் எதிர்காலத்தில் தரத்துடன் விற்பனையிலும் வெற்றிகரமாக நீடிக்கப் பொழுதுபோக்கு அம்சங்களைத் தேவையான அளவு (ஆதிக்கம் செலுத்தாமல்) கேரள மாநிலத்தை ஒரு முன்னுதாரணமாகக் கொண்டு செயல்பட வேண்டும். பொழுதுபோக்கு அம்சத்தைப் பொறுத்தவரை தொலைக்காட்சிகளுடன் போட்டியிட முடியாது என்பதை உணர்ந்து சிறப்பான செய்திகளையும், உலகச் செய்திகளையும், உள்ளூர்ச் செய்திகளையும் நிபுணர்களின் கருத்துகளையும் மையமாக வைத்து வளர்ச்சி இதழியல் (*Developmental Journalism*) செயல்பட்டால் இதழ்கள் வெற்றி பெறுவதோடு ஆக்கப்பூர்வமான சமூக மாற்றத்திற்கும் வழி வகுக்க முடியும்.

**துணை நூல்கள்**


1. இந்தியப் பத்திரிகைகள் 1955 முதல், எஸ்.சி.பட், தமிழாக்கம். கே. கணேசன், பப்ளிகேஷன்ஸ் டிவிஷன், தகவல் மற்றும் ஒலிபரப்புத் துறை அமைச்சகம் இந்திய அரசு, புதுதில்லி, பதிப்பு - 2000.
2. பண்பாட்டு உருவாக்கத்தில் பத்திரிகைகளின் பங்கு, (பதி.) ச. சந்திரசேகரன், சரவணபாலு பதிப்பகம், விழுப்புரம், டிசம்பர் - 1989.
3. *Future of Print Media - Press Council of India, New Delhi - 110 001, Publication, 2001.*

# தமிழ் வளர்ச்சியில் இதழ்கள்

**ப. குணசேகரன்**

*தமிழ் வளர்ச்சியில் இதழ்கள் இன்று பெரும் பங்காற்றி வருகின்றன. இன்றையப் புதுமை இன்றையச் செய்தியாக உள்ளது. மக்களுக்கும் அரசுக்கும், ஓர் இணைப்புப் பாலம் இதழியலார் என்று ஆப்ரகாம் லிங்கன், ஜெபர்சன் கூறுவர். ஒவ்வொரு மொழியிலும் சில குறிப்பிட்ட இதழ்கள் வெற்றி நடை போடுவதே அதன் தனித்தன்மையாகும்.*

**இதழ்கள்**

நாள்-வார-இருவார-மாத இதழ்கள் மற்றும் கலை இலக்கியம், கல்வி, சமூகப் பொருளாதாரம், அறிவியல் தொழில்நுட்ப இதழ்கள் என்று பலவாக இதழ்கள் பல்கிப் பெருகிவிட்டன.

'சிறுமை கண்டு பொங்குவாய்' என்று பாரதி கூறியதற் கேற்பச் சமுதாயத்தில் மக்களுக்குத் தவறு இழைக்கப்படும் போதெல்லாம் தட்டிக் கேட்டும், குறைகள் பெருகாவண்ணம் இதழ்களின் வழியாக உணர்த்துவதும் அதன் கடமையாகும்.

**அச்சுவழிச் சாதனங்கள்**

அச்சுவழிச் சாதனம் இல்லாமல் இலக்கியம், அரசியல், அறிவியல், தொழில்நுட்ப அமைப்பு எதுவும் நீண்ட பதிவினைப் பெற இயலா என்று மூதறிஞர் இராசாசி, பேரறிஞர் அண்ணா, சர்.சி.வி. இராமன் ஆகியோர் குறிப்பிட்டுள்ளனர். காந்தியடிகள் போன்றோர் அச்சுவழியாகத் தங்கள் கருத்துகளைப் பேச முடிந்தது என்றனர். டன் கணக்கில் பேசப்படும் பேச்சுகள் காற்றோடு கலந்துவிடும் என்றனர். 'அவுன்சு அளவு' எழுதினாலும் அவை ஆவணமாகிவிடும் என்றார் டாக்டர் மு. வரதராசன். சமுதாயச் சீர்திருத்தத்தை மக்களுக்கு உணர்த்த நாளிதழ்கள் உதவுவதுபோல் வேறேதுவும் உதவுவதில்லை என்பது பெரியார் அவர்களின் கருத்து.

---

முனைவர் பட்ட ஆய்வாளர், அறிவியல் தமிழ் மற்றும் தமிழ் வளர்ச்சித்துறை, தமிழ்ப் பல்லைக்கழகம், தஞ்சாவூர் - 613 005.

தாய்மொழியில் அச்சிடப்படும் இதழ்களுக்கு ஈர்க்கும் ஆற்றல் மிகுதியாகிச் செய்திகள் பரவும் போதுதான் சமுதாயத்தில் மாற்றங்களைப் பற்றிச் சிந்திக்க முடிகிறது என்று 'குச்வந்த்சிங்' கருத்து அமைகிறது.

**இதழ்களின் தோற்றம் பற்றிய செய்திகள்**

உலகில் பல்வேறு முறைகளில் செய்திகள் தெரிவிக்கப் பட்டன. இந்தியாவில் மன்னர்கள் காலத்தில் புறாக்களின் கால்களில் செய்தி ஓலைகளைக் கட்டியும், ஆட்களை அனுப்பியும் செய்திகளைத் தெரிவித்தனர். இம்முறையன்றி முரசு கொட்டியும் பறையறைந்தும், மணியடித்தும், சீழ்க்கை ஒலித்தும் செய்திகளை மற்றவர்களுக்கு அறிவித்தனர். இம்முறைகள் தமிழகத்தில் இருந்தன என்பதைப் பண்டைத் தமிழிலக்கியங்கள் உறுதிப்படுத்துகின்றன.

இச்செய்திப் பரிமாற்ற முறை அறிவியல் வளர்ச்சியால் வளர்ந்து இன்று இதழியலாகக் கால்கொண்டது எனலாம். உலகின் முதல் நாள் இதழாக ஜெர்மன் இதழ் ஒன்று 1660-இல் வெளிவந்ததாகத் தெரிகிறது. இந்தியாவில் குறிப்பாக மொகலாயர் ஆட்சிக் காலத்தில் ஔரங்கசீப்பின் காலத்திலேயே தோன்றியதாகக் கூறப்படுகிறது. இந்தியாவில் முதன் முதல் 1780-ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 29-ஆம் நாள் 'பெங்கால் கெஜட்' என்ற செய்தித்தாள் வங்காளத்திலுள்ள செராம்பூரி லிருந்து வெளிவந்தது.

தமிழகத்தில் முதன் முதலாக 1785-ஆம் ஆண்டு 'மெட்ராஸ் கூரியர்' என்ற இதழ் வெளிவந்தது. இதனைத் தொடர்ந்து 1931-இல் இருந்து கிறித்துவப் பாதிரியார் வாயிலாகச் சில இதழ்கள் வெளியிடப்பட்டன. எனவே இதழ்கள் வளரப் பல காரணங்கள் உள. அந்த வகையில் விடுதலைப் போராட்டக் காலக்கட்டத்தில் ஆங்கிலேயரைச் சார்ந்தும் அவர்களை எதிர்த்தும் இதழ்கள் தோன்றின. ஆங்கிலேயர்களுக்குச் சாதகமாக அவர் களின் அன்பைப் பெறுவதற்கு அவர்களது செய்தியினை வெளியிடுவதற்கு மட்டுமே மெட்ராஸ் கூரியர், மெட்ராஸ் கெஜட், கவர்மெண்ட் கெஜட் போன்ற இதழ்கள் தமிழகத்தில் தோன்றின. இவ்விதழ்களில் பெரும்பாலும் ஆங்கிலேயர்கள் தொடர்பாகவே செய்திகள் அமைந்தன.

ஆங்கில எதிர்ப்புத் தேசிய இதழ்கள் தோன்றும்வகையில் இந்திய மக்களின் எண்ணங்களை எதிரொலிக்கவும் தனி இதழ்கள் தேவை என உணர்ந்தனர். இதன் எழுச்சியால் எழுந்தது தான்

'சிரஸெண்ட்' என்ற இதழ். இவ்வகையில் தமிழகத்தில் முதன் முதலில் வெளிவந்த இந்திய இதழ் இதுவேயாகும். இதனை ஏற்று நடத்தியவர் லெட்சுமி நாசு செட்டியார் ஆவார். இதனைத் தொடர்ந்து 'மெட்ராஸ் ஸ்டாண்டர்டு' என்ற நாளிதழ் தோன்றிற்று. இந்த இதழ் காங்கிரஸ் கட்சியோடு தொடர்புடையது. 1882-ஆம் ஆண்டு சுதேசமித்திரன் வார இதழ் தொடங்கப்பட்டது.

**திரு.வி.க கல்யாண சுந்தரனார்**

தேசபக்தன் நாளிதழில் ஆசியராக இருந்தார். தமிழாசிரியர் பணியைவிட்டுப் பத்திரிகை ஆசியராக ஆனார். அன்னிபெசண்ட் அம்மையாரின் ஹோம்ருல் இயக்கத்திற்கு உறுதுணையாக இருந்தார். 1920-இல் தொடங்கப்பட்ட நவசக்தி வார இதழ் ஆசிரியராக 20 ஆண்டுகள் பணியாற்றினார். பாரதியிடம் மிகுந்த அன்பைப் பெற்றவர். இவர் இதழ்களின் பார்வையில் சுதேசமித்திரன் நாட்டு மக்களுக்கு அரசியல் அறிவையும், சுதந்திர வேட்கையும் உண்டாக்கிய முதல் நாளிதழ். அது சமுதாய நலன் சமுதாய ஒற்றுமை தொடர்பான செய்திகளை அவ்வப்போது வெளியிட்டது. நாட்டு விடுதலை ஒன்றே அதன் சிறப்பு நோக்கமாக் இருந்தது.

**அறிஞர் அண்ணா**

திராவிட இதழ்களில் ஆசிரியராக இருந்து வந்தபோது கருத்துகள் பல இடம்பெற்றன. கோவை அய்யமுத்து, திருவாரூர் தங்கராசு, பட்டுக்கோட்டை அழகிரி, நடிப்பிசைப் புலவர் கே.ஆர். ராமசாமி, நடிகவேள் எம்.ஆர். ராதா ஆகியோருடைய பேச்சுகளும், சிந்தனைகளும் திராவிட இயக்க இதழ்களின் வழியாக மக்களைச் சென்றடைந்தன.

விதவை மறுமணமும், சீர்திருத்தத் திருமணம், சாதியொழிப்பு, இலவசக்கல்வி, மூடநம்பிக்கை ஒழிப்பு, தனித்தமிழ் இயக்கம், தமிழில் அர்ச்சனை, பெண்கல்வி, சமூக நீதி, தமிழ்நாடு பெயர் மாற்றம், எங்கும் தமிழ், எதிலும் தமிழ் என உணர்வோடு செயல்படல் உலகத்தமிழ் மாநாடு கூட்டுதல், இரு மொழிக் கொள்கை ஆகியனவெல்லாம் இவ்வியக்க இதழ்கள் வழி மக்களைச் சென்றடைந்தன.

**ந. பிச்சமூர்த்தி**

இவர்களைத் தொடர்ந்து இதழ்கள் வளர்ச்சியில் ந. பிச்சமூர்த்தி திகழ்ந்தார். மணிக்கொடி யுகத்தைச் சார்ந்தவர் கலைமகள் சிறுகதைக்கு முதல் பரிசு பெற்றவர், முன் படைப்புகளில் கலைத் திறமும், பின்படைப்புகளில் தத்துவமும் கொண்டவர்.

### கல்கி (கிருஷ்ணமூர்த்தி)

இவர் ஆனந்த விகடனின் ஆசிரியர்; கல்கி இதழைத் தானே நடத்தி வந்தார். இவர் சிறுகதையில் மதுவிலக்கு ஒழிப்பு, தீண்டாமை ஒழிப்பு போன்றவற்றை வலியுறுத்தினார். சிறந்த வரலாற்றுக் கதைகளை எழுதினார்.

### புதுமைப்பித்தன்

இவர் தமிழ்நாட்டில் சிறந்த எழுத்தாளர். இவர் மாப்பஸான் எனவும் போற்றப்படுபவர். இவர் கதையில் கேலியும் கிண்டலும் மிகுந்து இருக்கும், இவர் 200-க்கும் மேல் சிறுகதை எழுதி யுள்ளார். கடவுளும் கந்தசாமிப் பிள்ளையும் என்பது மிகச் சிறந்த சிறுகதையாகப் போற்றப்படுகின்றது.

### ஜெயகாந்தன்

விடுதலைக்கு முன் புதுமைப்பித்தன் என்றால் விடுதலைக்குப் பின் ஜெயகாந்தன் எனுமளவிற்குச் சிறுகதை எழுதுவதில் சாதனை புரிந்தவர்; மாப்பஸான் போல புதுமைப் படைப்பு களை மேற்கொண்டவர். சுமைதாங்கி, ஒரு பிடி சோறு, இனிப்பும் கரிப்பும் எனப் பல கதைகளை எழுதி வந்தார். சேரி மக்களின் நடப்பு வாழ்க்கையைச் சித்திரித்தார். சமுதாய அவலங்களை வெளிக்கொணர்ந்தார்.

தமிழ் வளர்ச்சியில் இதழ்களின் முன்னோடிகளாகக் கவிஞர் களும், புகழ் பெற்ற இதழ் ஆசிரியர்களும் அரசியல் நோக்கிலும், சமுதாய நோக்கிலும், தமிழ் வளர்ச்சிக்கும் குறிப்பிடத்தக்க வர்கள், சமுதாயத்தில் நடக்கும் நிகழ்வுகளையும் அரசியல் போக்கையும் படம்பிடித்துக் காட்டக்கூடியவர்கள் இவர்கள் என்றே கூறமுடியும்.

### விடுதலைப் போரில் தமிழ் இதழ்கள்

விடுதலைப் போரில் பங்கு கொண்ட பல இதழ்கள் உள்ளன. அவற்றில் ஒரு சில இதழ்கள் பின்வருமாறு.

### இந்தியா

வெள்ளையனை எதிர்த்து 'நெருப்பு மழை' பொழிந்த முதல் தமிழ் இதழ் இது. இதனைத் தொடங்கியவர் எஸ்.என். திருமலச்சாரியார் ஆவார். இந்த இதழின் ஆசிரியராகப் பணி யாற்றியவர் பாரதியார் ஆவார். இதன் முதல் இதழ் 1906-இல் வெளிவந்தது.

திலகர் தலைமையில் நேஷனல் பார்டிக்கு ஆதரவு தந்து எழுதினார் பாரதி. இவருடைய ஆவேச நடையும் ஆளுமையும் இந்தியா இதழுக்குப் பெருமை சேர்த்தன. 'ஞானரதத்தைப்' பாரதி இந்தியாவில் தான் எழுதினார். 'இந்தியா யானையும் ஸர்க்கர் பாகனும்' எனற கேலிச் சித்திரம் 1907-இல் வெளிவந்தது.

### திராவிட இயக்க இதழ்கள்

#### குடியரசு

பெரியார் ஈ.வெ. ராமசாமி அவர்களால் தொடங்கப்பட்டது. இது வார இதழாக ஈரோட்டிலிருந்து வெளிவந்தது.

#### திராவிட நாடு

காஞ்சியிலிருந்து வெளிவந்த இந்த வார இதழுக்கு அறிஞர் அண்ணா ஆசிரியர். அவர் சமூகச் சீர்திருத்தக் கட்டுரை களும், சமூகச் சீர்திருத்த மூடநம்பிக்கை ஒழிப்பையும், இளைஞர் சமுதாயத்தைச் சிந்திக்க வைத்த பெருமை அறிஞர் அண்ணாவையே சேரும்.

#### தினத்தந்தி

தந்தியென்ற பெயரில் 1942-இல் மதுரையைத் தலைமை யிடமாகக் கொண்டு சி.பா. ஆதித்தனாரால் தொடங்கப் பட்டது. மக்கள் பத்திரிகை என்னும் பெயரை நாளடைவில் பெற்றது. தமிழ் செய்திப் பத்திரிகை உலகில் தினந்தந்தி நிலையான இடம் பெற்றுவிட்டது. தனக்கென ஒரு பாதை வகுத்துக் கொண்டு அதில் முழு வெற்றியடைந்த பெருமை இந்த நாளிதழுக்கு உண்டு என்று அண்ணா பராட்டினார்.

### இதழியலுக்கான இலக்கணம்

இதழியலுக்கான இலக்கணம் பரந்துபட்டது எனலாம். மக்களின் எண்ணங்களை வாழ்வியல் செய்திகளை எதிரொலிப்பது இதழியல், பல்வேறு துறை நூல்கள் நாடகங்கள், மேடைப் பேச்சுக்கள், சுவரொட்டிகள், ஓவியங்கள், தொலைபேசிகள், பதிவு நாடாக்கள் எனப் பல்வேறு செய்தித் தொடர்புச் சாதனங்கள் உள எனினும் இவற்றிற்கெல்லாம் மேலாக இதழியல் விளங்குகிறது. இலக்கணம் வரையறுக்க இயலாத நுட்பமும் திட்பமும் கொண்டது.

### கால்முறை இதழ்களின் சிக்கல்கள்

நாளிதழ்களை நடத்துவதைக் காட்டிலும் பருவ இதழ் களை நடத்துவது கடினமானதாக உள்ளது. நாளிதழுக்கு

உள்ள சிறப்பு பருவ இதழுக்கு இல்லை. நாளிதழ்களால் படிப்பவர்களை எளிதில் கவர்ந்து விடமுடியும். கால நெருக்கடிக்குள் வெளிவந்தாலும் செய்திகள், செய்திகளுக்குத் தரப்படும் தலைப்பு இடம், அவற்றுக்குத் தரப்படும் தலைப்பு துணையாகும் நிழற்படங்கள், அவற்றை மேற்கொள்ளும் முறைகள், செய்திகள் காலத்திற்கேற்பச் சுருக்கியும் பெருக்கியும் தரும் பாங்கு, உள்ளூர்ச் செய்திகளுக்கு இடம் அளித்தல், பரபரப்பூட்டும் செய்திகளை வெளியில், செய்திகளை மொழி பெயர்த்து எழுதும்போது கையாளப்படும் நடை அமைப்பு முதலியனவற்றால் மக்களிடையே நற்பெயர் பெறுகின்றன. காலம் தவறாமல் செய்திகளைத் தருவதும் உலகச் செய்தி களைக் காட்டிலும் உள்ளூர்ச் செய்திகளைப் படிப்பவர்களை ஈர்க்கும். அதனால் உள்ளூர்ச் செய்திகளை மிகுதியாக வெளி யிட்டுப் படிப்பவர்களின் உள்ளங்களை ஈர்ப்பதும் அவர்களுடைய உள்ளங்களோடு நெருங்கிய உறவை உண்டாக்கிக் கொள்வதும் இதழின் நோக்கமாகும். அறிவியல் கண்டுபிடிப்புகள் புதுமையான போராட்டங்கள் நாட்டிலோ அல்லது உலகிலோ எங்கு நடந்தாலும் அவை புதிய செய்தி. ஆதலால் அவற்றுக்குச் சிறப்பிடம் தருதல் வேண்டும்.

**இதழ்களின் உருவமைப்பு**

ஒவ்வொரு பக்கமும் செய்திகள் சிறந்த வடிவமைப்பில் அமையவேண்டும் என்ற எண்ணம் ஆசிரியர்களுக்கு இருக்க வேண்டும். அப்பொழுதுதான் அச்செழுத்துகளை வீணாக்கி விடாமல், ஒவ்வொரு பக்கத்தையும் கவர்ச்சியுடையதாகச் செய்ய முடியும். ஒரு படமோ ஒரு மூலையில் துணுக்குச் செய்தியோ, இரண்டொரு பழமொழிகளோ அல்லது சான்றோர் வாக்கு என்னும் தலைப்பில் பொன்மொழிகளோ இடம்பெறச் செய்யலாம். கண்ணுக்கு இனிமையும் படிப்பதற்கு எளிமை நாளிதழ்கள் நிழற்படங்கள் பலவற்றைக் கொண்டு வெளி வருவதைக் காணலாம். இத்தகைய நிழற்படங்கள் பருவ இதழுக்கு இன்றியமையாதனவாகும். கட்டுரைகளுக்குரிய விளக்கப் படங்கள், கதைகளுக்குத் துணையாகும். ஓவியங்கள், இதழின் உள்ளடக்கப் பகுதிகளுள் ஏதேனும் ஒன்றிற்குரிய விளக்கமான அட்டைப் படம் முதலியன பருவ இதழுக்குத் தரத்தை உயர்த்துவனவாகும். எழுதத் தெரியாதவர்களும் படங்களைக் கண்டு அது தொடர்பான செய்திகள் யாவை எனக் கேட்டு அறியும் வேட்கையைக் கொள்ள, படித்தவர் களின் துணையை நாட இவை பயனாக அமையும்.

### இதழ்களில் உள்ளடக்கம்

சிறுகதைகள், நகைச்சுவைக் கட்டுரைகள் நிழற்படத் தொகுப்புகள், மேற்போக்காகப் படிக்கக்கூடிய பகுதிகள், ஆழ்ந்து படிக்க வேண்டுவன போன்ற பல பிரிவுகளைப் பருவ இதழ்கள் கொண்டுள்ளன. மனித சமுதாயக் குறைகளைச் சுட்டி அவை நீங்கும் வழிகளையும் அவை சுட்டும். சிறுகதைகள் வாசகர்களிடையே மிகுந்த வரவேற்பை ஏற்படுத்தும். ஆனால் அச்சிறுகதைகள் படிப்பவரின் ஒழுக்கத்தைப் பாதித்துவிடக் கூடாது என்பதில் எழுதுபவரும் படிப்பவரும் கருத்துடைய வராக இருத்தல் அவசியமாகும்.

### தமிழ் இதழ்களின் பணிகள்

தமிழ் இதழ்கள் பரந்துப்பட்டு இருந்தாலும் அவற்றில் ஒரு சில இதழ்கள் மக்கள் மனத்தில் பதிந்ததற்குக் காரணம் இதழின் சேவைதான். பாமர மக்கள் முதல் பெரிய சீமான்கள் வரை இதழ்கள் செய்தியைத் தாங்கிச் செல்கின்றன. குறிக்கோள் களை எதிர்நோக்கி நிற்கும் போது இதழ்களின் வழியாக எதிர்ப்பார்ப்பை அடைய முடிகிறது. வேளாண்மைச் செய்திகள், அவற்றின் சந்தை நிலவரம், காய் முதல் கனி வரை விலை ஏற்றம், இறக்கம், தங்கம் முதல் தகரம் வரை சந்தை நிலவரம், வானிலையறிக்கை, எச்சரிக்கை, மணப்பந்தல், கட்டுரைகள், சிறுகதைகள், விமர்சனம், கேலிச்சித்திரம், அரசியல் நிலவரம், விளம்பரம், கல்வி, வேலைவாய்ப்புச் செய்தி, துணுக்கு, சிரிப்பு, கவிதை, பொன்மொழிகள், உலகச்செய்திகள், மொழிநடை யமைப்பு, உள்ளூர் வெளியூர்ச் செய்திக்கு ஆதரவு என இவை யனைத்தும் இதழ்களின் பணிகளாக நாள்தோறும் இதழ்களின் வழி வெளிவருகின்றன.

### முடிவுரை

தமிழ் வளர்ச்சியில் 'இதழ்கள்' தொடர்ந்து பங்காற்றி வருகின்றன. இதழ்களின் பணிகளும் அதன் செயல்பாடுகளும் சமுதாயத்திற்குப் பல்வேறு நிலைகளில் உதவுகின்றன. பாமர மக்கள் முதல் பணக்காரர் வரை பொருளாதார வளர்ச்சி, அறிவியல் செய்திகள், உலகச்செய்தி, நாட்டின் அரசியல் நடைமுறை, ஆகிய வற்றையெல்லாம் அறிந்து கொள்ளும் வகையில் புதிய புதிய செய்திகளாக இதழ்களில் வெளிவருதைக் காணமுடிகிறது. அவ்வாறு வரும் இதழ்களில் ஒரு சில உலகளாவிய தமிழ் இதழ்களாகவும் வெளிவருகின்றன.

# தமிழ் வளர்ச்சியில் இதழ்களின் பங்கு

**முனைவர் ஏ. லாறன்ஸ் மேரி**

பண்டிதர் முதல் பாமரர் வரை பார்க்கவும், படிக்கவும், படிக்க பக்கம் நின்று கேட்கவும் விரும்பும் ஓர் இலக்கியமாகத் திகழ்வது செய்தித்தாள். உலக அரங்கைக் காட்டும் பலகணியாக, காலக்கண்ணாடியாக விளங்குவன 'செய்தி இதழ்கள்'. மக்களுடைய வாழ்க்கை, கலை, நாகரிகம், பண்பாடு இன்ன பிறவற்றைப் படம் பிடித்துக் காட்டும் கருவிகளுள் முதலிடம் பெறத் தக்கவை செய்தி இதழ்கள். இதனையே பாரதிதாசனாரும்,

''காரிருள் அகத்தில் நல்ல
கதிரொளி நீதான்; இந்தப்
பாரிடைத் துயில்வோர் கண்ணிற்
பாய்ந்திடும் எழுச்சி நீதான்
ஊரினை நாட்டை இந்த
உலகினை ஒன்று சேர்க்கப்
பேரறிவாளர் நெஞ்சிற்
பிறந்தபத் திரிகைப் பெண்ணே!''

என அக இருளகற்றும் கதிரொளியாகக் குறிப்பிட்டுள்ளார். இத்தகைய கதிரொளி தமிழ் வளர்ச்சியில் எத்தகைய சுவடு பதிந்துள்ளது என்பதைக் காண்போம்.

## இதழ்களின் வரலாறு

நமது முன்னோர்கள் தொலைதூரங்களுக்குச் செய்தியை, தகவல்களை ஆட்கள், விலங்குகள், ஓசைகள், குறியீடுகள் வழியாக அனுப்பி வநதுள்ளனர். பின்னர்ப் பட்டுத்துணிகளும், ஓலைச்சுவடிகளும், கல்வெட்டுகளும், செப்புத் தகடுகளும் செய்திகள் தெரிவிக்கப் பயன்பட்டுவந்தன. அரசு தொடர்பான செய்திகள் முரசு கொட்டி மக்களுக்குத் தெரிவிக்கப்பட்டன.

இந்தியாவை ஆண்ட மொகலாயப் பேரரசரான செர்சா குதிரையாட்கள் மூலமாக அஞ்சல் போக்குவரவு செய்து

---

தி.தெ.மா.நா.ச. கல்லூரி, தெ. கள்ளிகுளம் - 627 113.

செய்திகளைப் பரப்பினார். இவரது காலத்தில் (16-ஆம் நூற்றாண்டில்) தான் அஞ்சல் வண்டிகள் பயன்படுத்தப் பட்டன. முதலில் அரசர்களுக்காகவும், உயர்குடியினருக் காகவும் செயல்படுத்தப்பட்டது. பின்னர்க் காலப்போக்கில் தனியாருக்கும் பயன்படுத்தப்பட்டது.

1635-ஆம் ஆண்டில் பிரிட்டனில் பொதுமக்களுக்கு அஞ்சல்காரர்கள் மூலம் வெளியூர்களுக்குக் கடிதங்கள் அனுப்பப்பட்டன. 1946-இல் செய்தியைக் கடிதங்கள் மூலம் அனுப்பும் வசதி ஏற்பட்டது.

''ஆயுதம் செய்வோம், நல்ல காகிதம் செய்வோம்'' என்ற பாரதியாரின் விருப்பத்திற்கேற்பப் பத்திரிகைக் காகிதம் தயாரிக்கத் தொடங்கினர். 1970-71 டன் காகிதம் செய்தி இதழ் களுக்கு ஒதுக்கீடு செய்யப்பட்டது. இதில் 87.1% நாளிதழ் களுக்கும், 12.9% பிற இதழ்களுக்கும் ஒதுக்கப்பட்டது. இதில் தமிழ்நாட்டுக்கு 16.4% ஒதுக்கப்பட்டது.

செய்தி என்பது விரைவாக நிகழ்கின்ற வரலாறு. முதன் முதலில் செய்தித்தாள் வெளியிடப்பட்ட நாடு சீன நாடே யாகும். அமெரிக்காவில் முதன்முதல் தோன்றிய இதழ் 'பொது நிகழ்ச்சிகள்' (*Public Occurrences*) என்பதாகும். 'சிலோன் கெஸட்' (1802) இல் தமிழ்மொழி இடம்பெற்ற பத்திரிக்கையாகும். 1840-இல் நாகர்கோவிலிலிருந்து 'பால தீபிகை' என்னும் இதழ் வெளியானது குறிப்பிடத்தக்கது.

**இதழியல் சொல் விளக்கம்**

ஜெர்னலிசம் (*Journalism*) என்னும் ஆங்கிலச் சொல்லின் தமிழாக்கம் தான் இதழியல். 'சர்னல்' என்றால் 'அன்றாடம் நடந்ததை எழுதிவைக்கும் ஏடு' என்று பொருள்படும். முதலில் செய்தித்தாள்களுக்கும் பின்னர் இதழ்களுக்கும் எழுதும் தொழிலைத்தான் முதலில் இதழியல் என்ற சொல் மூலம் விளங்கவைக்கப்பட்டது. ஆனால் இன்று மிகப்பெரிய, முக்கியமான தகவல் தொடர்பு சாதனமாக அங்கம் வகிக்கிறது என ஆர். இராமச்சந்திர ஐயர் குறிப்பிட்டுள்ளார்.

முற்றுப்பெறாமல், தொடர்ச்சியாகத் தகவல்களை மக்களிடம் கொண்டு சேர்க்கப் பயன்படுவது இதழ்கள். குறிப்பிட்ட கால இடைவெளியில், பருவங்களில் மக்களைச் சென்று சேர்கிறது இவ்விதழ்கள். துறைவாரியாக, பாடவாரியாக, பொழுது

போக்கிற்காக, சமயத்திற்காக, சமுதாயத்திற்காக, மொழிக்காக, பெரியோர் சிறுவர்க்காக எனப் பலதரப்பட்ட இதழ்கள் பலதரப்பட்டோருக்காக இன்று பரிணாமம் அடைந்து வளர்ந்துள்ளன.

'இதழியல் சமுதாயத்தகவல் தொடர்புச் சாதனங்களில் ஒன்றாக அமைகிறது. செய்திகளை அறிவித்தல், எண்ணங் களை வெளியிடுதல், மகிழ்வு தரும் செய்திகளைத் தருதல் ஆகியவற்றைச் செய்கிறது' என ரோலண்ட் இ. உல்ஸ்லே என்ற அறிஞர் பெருமகனார் கூறியுள்ளார்.

'விரைவில் பிறந்த இலக்கியமே இதழியல்' என மத்யூ அர்னால்டு கூற, வியக்கதக்க வகையில் 'ஆக்கப்பணிகளை விளைவிக்க உதவும் சக்திவாய்ந்த கருவியே இதழியல்' என ஜி.எஃப்.மோட் கூறியுள்ளார்.

இதழியலின் முக்கியப் பணிகளை ஆறுவகையாக வகைப் படுத்தலாம். அவை :

1. அறிவித்தல்
2. அறிவுறுத்தல்
3. மகிழ்வித்தல்
4. எண்ணத்தை வளப்படுத்துதல்
5. உருவாக்கல்
6. வாணிபம் செய்தல்

பத்திரிகை நடப்பு நிகழ்ச்சிக் களஞ்சியங்களாகும். பத்திரிகைகள் நடப்பு நிகழ்ச்சிகளையும் கருத்துகளின் போக்குகளையும் மக்களுக்குத் தெரிவிக்கவும் விரிந்து செல்லும் பரப்பில் ஆர்வத்தை ஏற்படுத்தவும், கட்டிக்காக்கவும் பல்வேறு வகையான கருத்துகளையும் வெளிக்காட்டும் வகையில் நடைமுறைச் சிக்கல்களைப் பற்றிய விவாதத்தைத் தூண்டவும் முயல வேண்டும். இவற்றிற்கெல்லாம் செய்திகளையும், கண்ணோட்டங் களையும் துல்லியமாக நடுவுநிலையில் வெளியிடுவதும், மோதுகின்ற இலட்சியங்களைப் பற்றின்றி மதிப்பீடு செய்வதும் தேவையானதாகும்.

மக்களைச் சிந்திக்கச் செய்யவேண்டும். நல்ல பத்திரிகைகள் மக்களிடம் தொடர்கல்வியை வளர்க்கும் சாதனங்களாக விளங்கு கின்றன. வாசகர்களுக்கு அலுப்புத்தட்டிவிடாமல் இருக்கவும்

போட்டியுலகில் எதிர்நீச்சல் போட்டு வெற்றி பெறவும், மக்களை உற்சாகமூட்டி, உணர்வுகளுக்குத் தீனியளித்து மகிழ்விக்க வேண்டும்.

'மக்களின் உணர்வினை அறிந்து அதனை வெளியிடுவதாக பத்திரிகைகள் இருக்க வேண்டும்' என அண்ணல் காந்தியடிகள் குறிப்பிட்டுள்ளார். இதனையே ஆங்கில இதழியலின் தந்தை டேனியல் டிஃபோ என்ற அறிஞர் 'மனித சமூகத்திற்குச் சரியான ஊட்டச்சத்தும் ஆதாரமும் செய்திதான்' என விளக்கியுள்ளார்.

**தமிழ் இதழ்கள்**

மெட்ராஸ் கெஜட், கவர்மெண்ட் கெஜட், மெட்ராஸ் கூரியர் என்னும் இதழ்கள் ஆங்கிலேயர்களின் தேவைக்காக உருவானவை. சமயச் செய்திகளுக்காகப் பெர்சிவல் பாதிரியார் 1855-இல் தினவர்த்தமானி என்னும் இதழை வெளியிட்டார். தமிழில் முதன்முதலில் வெளிவந்த நாளிதழ் 'தினவர்த்தமானி'. 'ஜனவிநோதினி' (1870), லலிதா பிரசனோதயா (1877) போன்ற இதழ்கள் புகழ் பெற்றவையாகும்.

தமிழ் இதழியல் வரலாற்றில் தலையாய சிறப்பினை உடையது 'சுதேசமித்திரன்' இதழ் (1882). நாட்டுப்புறங்களில் பத்திரிகை படிக்கச்செய்து அவர்களை விவேகமாக்குவதற்குத் தொடங்கப்பட்டது 'விவேகசிந்தாமணி'. ஆங்கிலம் தெரியாத தமிழ் நட்டாருக்கு நவீன அறிவைப் பரப்புவதே தமிழர் நேசன் (1917) இதழின் நோக்கமாக இருந்தது.

விடுதலை உணர்வைத் தமிழர்க்கு ஊட்டுவதற்காக டாக்டர் வரதராசுலு நாயுடு (1919) 'தமிழ்நாடு' என்னும் இதழை வார இதழாகத் தொடங்கினார். 1926-இல் நாளிதழாக மலர்ந்தது. தமிழர்க்கு தனிவாழ்வு உண்டு என விடுதலை உணர்வை தட்டி எழுப்புவதற்காக திரு.வி.க. அவர்கள் ''நவசக்தி'' (1920) இதழைத் தொடங்கி இதழியல் மூலம் தமிழ்த் தொண்டாற்றினார். இவற்றினைத் தொடர்ந்து செந்தமிழ்ச்செல்வி, தமிழ்ப்பொழில், குடியரசு, விமோசனம், சுதந்திரச்சங்கு, காந்தி இதழ், மணிக்கொடி (1933-1950), தினமணி, ஹிந்துஸ்தான் போன்ற இதழ்கள் வெளிவரலாயின.

**தமிழ் வளர்ச்சி**

தன்னிகரில்லாத் தமிழ்மொழி தரணியில் தலைநிமிர்ந்து வாழவேண்டின், பல்வேறு துறைகள் பற்றிய நூல்கள் எளிய,

இனிய தமிழ்மொழியில் ஆயிரமாயிரமாய் எழுதப்பட வேண்டும். கல்வி உலகின் அனைத்து நிலைகளிலும் தாய்மொழி வழிக் கல்வி என்ற இயற்கைவிதி இடம்பெற வேண்டும் எனப் பல்வேறு அறிஞர்கள் அறைகூவல் விடுத்துள்ளனர். அச்சுப் பொறியின் கண்டுபிடிப்புக்குப் பின்னர்தான் மொழி வளர்ச்சி பன்மடங்காகியது.




அச்சுப்பொறியின் கண்டுபிடிப்பால் வளரத்துவங்கிய தமிழ்ப் பத்திரிகை மற்றும் இதழ்களை, கணிப்பொறியின் வரவால் மின்பருவ இதழ்களாக நாம் பெற்றுவருகிறோம். அனைத்திற்கும் மேலாகத் 'தமிழ் இணையப் பல்கலைக்கழகம்' சென்னையில் உருவாகியுள்ளது. தமிழ்மொழியை வீட்டிலிருந்தே கற்கவும், மின்பருவ இதழ்களைப் பெறவும் வழிவகைச் செய்துள்ளது. தமிழ்மொழியை இந்த இணையம் மூலம் உலகின் பல்வேறு பகுதிக்கும் எடுத்துச் சென்றுள்ளது கணிப்பொறி.

தனித்தமிழ் இயக்க இதழ்களாகத் தேன்மொழி (1962), தமிழ்ச்சிட்டு (1996), முல்லை (1970), முதன்மொழி, கைகாட்டி, தமிழ்ப்பணி, தமிழகம், பூஞ்சோலை, பாவை, தீச்சுடர் போன்றவை தமிழ்மொழி வளர்ச்சிக்காகவே இயங்கி வருகின்றன. மதங்கள், மதவெளியீடுகள் தான் அதிக அளவில் தமிழைப்

பரப்பி, வளரச்செய்து வருகின்றன. நாட்டுப்புறத்தகவல்களை மக்களுக்கு, நகரவாசிகளுக்கு எடுத்துச்செல்ல நாட்டுப்புறவியல் இதழ்கள் தோன்றியுள்ளன.

தமிழ்ப்பத்திரிகை உலகின் வரலாற்றை நோக்கின் ஆரம்பக்கால இதழ்கள் சமய இதழ்களாகவும், பின்னர்ச் சாதி இதழ்களாகவும், அரசியல் விழிப்புணர்ச்சியூட்டும் இதழ்களாகவும் அதற்குப் பின்னர்ப் பல்துறை இதழ்களாகவும் வெளிவந்தது குறிப்பிடத்தக்கது. தமிழ்ப்பத்திரிகை உலகில் இலக்கிய அறிஞர்கள், அரசியல்வாதிகள், மொழிப்பற்றுடையோர், பணம் படைத்தவர்களின் செல்வாக்கும் உண்டு. தாய்மொழிப் பத்திரிகைகளில் தமிழே முதலிடம் வகிக்கின்றது.

**தினத்தந்தியும் தமிழ் வளர்ச்சியும்**

'உடல் மண்ணுக்கு; உயிர் தமிழுக்கு' என்ற குறிக்கோளோடு வாழ்ந்தார் சி.பா. ஆதித்தனார். அவர்களைத் 'தமிழர் தந்தை' என அழைக்கிறோம்.

தமிழ்நாட்டில் 1812 முதல் தமிழ் இதழாக 'மாதத்தின சரிதை' வெளிவந்தது. 'எங்கள் வாழ்வும் எங்கள் வளமும் மங்காத தமிழென்று சங்கே முழங்கு', எனத் தாழ்ந்து கிடந்த தமிழகத்தைத் தட்டி எழுப்பி வீறு கொள்ளச் செய்ய 'தமிழன்' என்ற பத்திரிகையைத் தொடங்கி, நடத்திப் பின்னர்த் தந்தி, தினத்தந்தி, மாலைமுரசு, வாராந்திர ராணி, ராணி முத்து என்ற இதழ்களை வெற்றிகரமாக நடத்தி மங்காப்புகழைப் பெற்றார். சிங்கப்பூரில் 'தமிழ் முரசு' என்ற நாளிதழ் தோன்ற உறுதுணையாக இருந்தவர் இவர்.

'கோலத் தமிழ்மொழி வாழப்பிறந்தவன்' என ஈழக்கவிஞர் காசி. ஆனந்தம் அவர்களால் புகழ்ந்து பாடப்பட்டவர் தமிழர் தந்தை. 1.11.1942 அன்று முதல் 'தந்தி' நாளிதழ் மக்கள் கைகளில் தவழ்ந்தது. தந்திபோல் அன்றையச் செய்தியை அன்றே சுடச்சுட தந்து கொண்டிருக்கும் பத்திரிகையாக அது விளங்கியது. 1948-இல் 'தந்தி' தினத்தந்தி ஆனது. இதனை அவசர இலக்கியம் எனலாம்.

'மணிப்பிரவாள' நடையையோ, 'பண்டிதர்' நடையையோ அவர் தன் பத்திரிகையில் பயன்படுத்தவில்லை. சாதாரணக் கூலிவேலை செய்பவர்களைப் பத்திரிகை படிக்கச்செய்ய வேண்டும் என்ற நோக்கத்துடன் பத்திரிகையை நடத்தினார்.

'நாங்கள் ஒரு தினத்தந்தி நாளிதழ் நடத்துகிறோமே தவிர திருவள்ளுவரைப் போல் திருக்குறள் நடத்தவில்லை என அவர் கூறுவது வழக்கம்.

இலக்கியப் போட்டிகள் நடத்தியும், சிறந்த நூல்களுக்கான ஆசிரியரையும் பதிப்பகத்தாரையும் ஊக்குவிக்கப் பல இலட்சங்களைச் செலவிடும் இலட்சியப் பணியாற்றி வருகின்றனர் அவரது வழித்தோன்றல்கள். இந்தியாவின் இதயம் கிராமங்களில் என்ற மகாத்மாவின் அடிச்சுவட்டைப் பின்பற்றிக் கிராமப்புறங்களில் வாழ்பவர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த வேண்டும் என்ற மொழிப்பற்றுடன் செயலாற்றியவர் நம் தமிழர் தந்தை என்பது மிகையாகாது.

> ''அறிஞர் தம் இதய ஓடை
> ஆழநீர் தன்னை மொண்டு
> செறிதரும் மக்கள் எண்ணம்
> செழித்திட ஊற்றி ஊற்றிக்
> குறுகிய செயல்கள் தீர்த்துக்
> குவலயம் ஓங்கச் செய்வாய்!
> நறுமண இதழ்ப் பெண்ணே உன்
> நலம் காணோர் ஞானம் காணார்

என்றும்

> 'தெருப் பெருக்கிடு வோருக்கும்
> ஜெகம் காக்கும் பெரியோர்க்கும் கை
> இருப்பிற் பத்திரிகை நாளும்
> இருந்திடல் வேண்டும்''

எனப் பாரதிதாசனின் அவாவுக்குச் செயல்வடிவம் கொடுத்தவர் இப்பெருந்தகை.

**தமிழ் வளர்ச்சியில் இதழ்களின் பங்கு**

மாநில மொழிகளில் அதிக இதழ்களைக் கொண்டது நம் உயர்தனிச் செம்மொழியாகும். 'தமிழை மறந்தோன் தாயை மறந்தோன்' எனக் கூறுமளவுக்குத் தமிழ்பால், தாய்மொழியின் பால் ஆர்வங்கொண்டவர்கள் தமிழர்கள். அவர்களது ஆர்வத் திற்குத் தீனிபோட்டு வளர்ப்பது பத்திரிகைகளும் இதழ்களுமே. எந்தெந்தச் சொற்களைப் பயன்படுத்துவது, குறிப்பிட்ட சில ஆங்கிலச்சொற்களை எவ்வாறு தயாரிப்பது என்பது குறித்து, வழிகாட்டுக் குறிப்புகளை இதழியலார் வைத்துள்ளனர்.

சொற்பிழை, கடுமையான நடை, செய்திப்படிதிருத்தம் இவற்றில் மிகுந்த கவனம் செலுத்த வேண்டும். நீண்ட சொற்களுக்குப் பதில் சிறுசிறு சொற்களைப் பயன்படுத்துவதும், பிறமொழிச் சொற்களுக்குப் பதில் தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்துவதும் இதழியல் கலை. அந்தந்தப் பத்திரிகையின் பாணி, நடைக்கேற்பச் செய்தி எழுதுதல் முக்கியமானது. ஒரு பத்திரிகையில் ஒரு குறிப்பிட்ட பொருளை விளக்க என்ன சொல் பயன்படுத்தப்படுகிறதோ அதனையே இறுதிவரை அந்தப் பொருளுக்குப் பயன்படுத்துவதும், வேண்டாத அடைமொழிகளைத் தவிர்த்தலும் வேண்டும்.

இதழ்களின் மொழிநடையும் முக்கியமானதொன்றாகும். இதழியல் மொழிநடை மற்ற நடையினின்றும் வேறுபடுகின்றது. பொதுமக்கள் படித்துப் புரிந்துகொள்ளும்படியாக ‘மக்கள் மொழிநடை’யில் இருக்கவேண்டும். இதனைப் புரிந்துகொண்டுதான் தமிழர் தந்தை சி.பா. ஆதித்தனார் அவர்கள் இதழியல் நடைபற்றிக் கூறும்போது, ‘‘பேச்சு வழக்கில் இருக்கும் தமிழே உயிருள்ள தமிழ்; அதைக் கொச்சை நீக்கி எழுத வேண்டும் என்றும் புரிகிற தமிழில் எழுதினால் மட்டும் போதாது; பேசுகின்ற தமிழில் எழுத வேண்டும்’’ என்றும் கூறியுள்ளார்.

பத்திரிகைகள்தான் புதுச்சொல்லாக்கத்திற்கு அடிகோலுகின்றன. குடி + அரசு → குடியரசு, ஓட்டு + நர் → ஓட்டுநர் எனப் பத்திரிகைகளே தமிழ்மொழிக்கு மறுமலர்ச்சியை அளிக்கின்றன. பத்திரிகைகள் வளர வளர அவற்றின் தரத்திற்கேற்ப அறிவியல், தகவல் தொடர்பு, மருத்துவம், விண்வெளி ஆய்வு ஆகிய தகவல்களைத் தாய்மொழியில் வழங்குவதால் தகவலுக்காகப் பிறமொழி இதழ்களைத் தேடவேண்டிய அவசியம் இல்லாமல் போய்விட்டது. அதனால்தான் ‘செம்மொழி’த் தகுதி நம் தமிழ்மொழிக்குக் கிடைத்துள்ளது.

நூல்கள் தகவல்களைத் திரட்டி ஒரே நேரத்தில் நமக்கு வழங்குகின்றன. ஆனால் பருவ இதழ்கள் அவ்வப்போது கிடைக்கும் / நடைபெறும் நவீனங்களையும் உடனுக்குடன் தகுந்த காலஇடைவெளியில் வழங்கி வருகின்றன. ஆய்வாளர்கள், களப் பணியாளர்கள், மாணவர்கள், அறிவியலாளர்கள், மருத்துவர்கள் இதனால் பெரிதும் பயன்பெற்று வருகின்றனர்.

## முடிவுரை

இலக்கிய மறுமலர்ச்சிக்குப் பத்திரிகைகள் தான் முக்கிய அங்கம் வகிக்கின்றன. கவிதை, சிறுகதை, நாவல், கட்டுரை வளர்ச்சிக்குப் பத்திரிகைகளே அடிப்படைக் காரணம். இவை உரைநடை வளர்ச்சிக்கு உறுதுணையாகவும் ஊன்றுகோலாகவும் விளங்குகின்றன. புதுச்சொற்களும், சொற்றொடர்களும் தினம் தினம் பத்திரிகை உலகில் தோன்றிக்கொண்டே இருக்கின்றன. எழுத்துருவாக்கம், நிலைபேறாக்கம், புதுமையாக்கம் போன்றவற்றிற்குப் பத்திரிகைகள், இதழ்கள் பெருந்துணை புரிகின்றன. எழுத்துச் சீர்திருத்தத்திற்குப் பத்திரிகைகளே முன்னோடி எனலாம். மொழியும் இதழியலும் ஒட்டிப்பிறந்த இரட்டைக் குழந்தைகள் எனலாம்.

''ஏற்றமுறச் செய்வதும்
மாற்றமுறச் செய்வதும்
ஏடேயாகும்''

- பாரதிதாசன்

### துணை நூல்கள்


1. பி.வி. கிரி, செய்தி இதழ்களின் கதை, திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம், சென்னை, 1977.
2. எம். செலலையா, செய்திகள், பழனியப்பா பிரதர்ஸ், மதுரை, 1978.
3. சோ. கலைவாணி, பத்திரிகைக் கலை, பராசக்தி மகளிர் கல்லூரி, குற்றாலம், 1988.
4. சோ. கலைவாணி, பத்திரிகைக் கலை, சாரதா வெளியீடு, வேலூர், 1988.
5. வே. சிதம்பரநாதன், தமிழ் இதழியல், சுந்தரி புஷ்பா பதிப்பகம், பறகதை, 1989.
6. கே. நடராஜன், மக்கள் தொடர்புக்கலை, ஸ்ரீ இந்து பப்ளிகேஷன்ஸ், சென்னை, 1991.
7. வி. அநுசூயா, மக்கள் தொடர்புப் பிரச்சினைகளும் தீர்வுகளும், பாலமுருகன் பதிப்பகம், மதுரை, 1993.
8. ச. சிங்காரம், இதழியல், நர்மதா பதிப்பகம், சென்னை, 1995.
9. சோ. கலைவாணி, செய்தி சேகரித்தலும் எழுதுதலும், பராசக்தி மகளிர் கல்லூரி, குற்றாலம், 1997.
10. இ. சுந்தரமூர்த்தி, மா.ரா.அரசு, இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள், தொகுதி - I, உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1998.
11. மு.பி.பா., இதழியல் பதிவுகள், பூங்கொடி பதிப்பகம், சென்னை, 1999.

# தினத்தந்தி போற்றுதும் தினத்தந்தி போற்றுதும்

முனைவர் சு.தேவநாதன்

சி.பா. ஆதித்தனார் 1942-இல் தினத்தந்தியைத் தொடங்கினார். பாமர மக்களிடையே பத்திரிகை படிக்கும் பழக்கத்தினைப் படிப்படியாக வளர்த்தார். பலரும் புரிந்துகொள்ளும் எளிய நடை, தெளிவான அச்சுக்கோப்பு, பெரிய எழுத்துகளில் தலைப்பிடல் போன்ற உத்திகளைப் புகுத்தினார். இரவு பகல் பாராது இதழியல் பணி செய்து தினத்தந்தியை முதன்மையான நாளிதழாக உயர்த்தினார். இவரது அடிச்சுவட்டைப் பின்பற்றி இவரது மகன் சிவந்தி ஆதித்தனார் இன்றும் தினத்தந்தியைச் சிறப்பாக நடத்தி வருகின்றார்.

### தினத்தந்தி ஆற்றும் முக்கியப் பணிகள்

#### 1. அறிவித்தல்

தினத்தந்தி தன் வாசகர்களுக்கு நாட்டு நடப்பு, அரசியல் நடைமுறைகள், விபத்துகள், திருட்டு முதலிய குற்றங்கள், பிறப்பு - இறப்புகள், பொருட்களின் விலை விவரங்கள் முதலிய பல்வகைச் செய்திகளைச் சூடாகவும், சுவையாகவும், உடனுக்குடனும் வழங்குகிறது.

உதாரணம் : தினந்தந்தி 03.02.2005 - பக்கம் - 1
"மன்மோகன்சிங் பங்கு பெறாததால்
"சார்க்" மாநாடு ரத்து"

#### 2. அறிவுறுத்துதல்

இன்றைய உலகில் புதிய கண்டுபிடிப்புகளும் அறிவியல் முன்னேற்றங்களும் நாளுக்கு நாள் பெருகி வருகின்றன. இத்தகைய நிலையில் ஒரு நிகழ்ச்சியைச் செய்தியாக மட்டும் வெளியிட்டால் பொதுவான கல்வி அறிவுள்ளவர்கள் அதனை

இணைப்பேராசிரியர், கல்வி நுட்பவியல் துறை,
பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சிராப்பள்ளி - 620 023.

முழுவதுமாகப் புரிந்து கொள்ளுதல் இயலாது. இத்தகைய நிலையில் செய்தித்தாள்கள் சிக்கலான செய்திகளுக்கு விளக்கங்கள் அளிக்கக் கடமைப்பட்டுள்ளன. தினத்தந்தியில் வரும் தலையங்கம், கட்டுரைகள் முதலியன இப்பணியைச் செவ்வனே செய்கின்றன.

எ.டு. : தினம் ஒரு தகவல் : உமிழ்நீர்
தினத்தந்தி - 19.04.2005 - பக்கம் 8

இந்தக் கண்டுபிடிப்பின் மூலம் எதிர்காலத்தில் எளிய முறையில் உமிழ்நீரை ஆய்வு செய்து பல நோய்களை வரும் முன்னரே தெரிந்துகொண்டு வராமல் தடுத்துக் காத்துக் கொள்ள முடியும், தேவையான சிகிச்சைகளைப் பெற முடியும் என்று மேலும் மருத்துவ நிபுணர்கள் குழு தெரிவிக்கிறது.

**3. மகிழ்வித்தல்**

தினத்தந்தி சிரிப்புப் படங்கள், நகைச்சுவைத் துணுக்குகள் ஆகியவற்றைப் பிரசுரித்துத் தன் வாசகர்களை மகிழ்விக்கிறது.

எ.டு. : தினத்தந்தி - 18.04.2005 - பக்கம் 18

இணையதள சிரிப்பு : ''எனக்கு ரொம்ப வயதாகிவிட்டது. கண்பார்வை சுத்தமாக தெரியவில்லை. சர்க்கரை வியாதி, மூட்டுவலி, சிறுநீரகக் கோளாறு, இதயக் கோளாறு எல்லாம் இருக்கிறது. நடக்கக்கூட முடியவில்லை. ஆனாலும் இன்னும் நான் டிரைவிங் லைசென்சு வைத்திருக்கிறேன், வண்டி ஓட்டப் போகிறேன்'' என்று பெருமையாக கூறினார் ஒரு பெருசு.

**அப்துல்கலாமின் கருத்துப்படி உள்வளத்திறமைகள் என்றால் என்ன?**

உள்வளத்திறமை என்பது குறிப்பிட்ட சில வளத்துறைகளில் சிறந்த முடிவுகளையும் விளைவுகளையும் குறுகிய காலக்கட்டத்தினுள் அடைய இயலும் அளவுக்கு நமக்குள் இருக்கும், நமக்கே உரித்தான சில வலிமைகள் என்று கூறலாம். எந்த ஒரு குறிப்பிட்ட மக்கள் கூட்டமும் எந்தவொரு சூழலிலும் தாங்கள் விரும்பியதை விரும்பியவாறே நிறைவேற்ற இயலும் என்பதே இந்தப் பகுப்பாய்வின் இறுதி முடிவு. ஆயினும், அதே மனத்திட்பமும் முயற்சியும் இருக்குமானால், அதிகம் உகந்த சூழ்நிலையினாலோ அனுபவத்தினாலோ மேலும் சிறப்பாகச் செய்து முடிக்கக் கூடிய வேறு குறிப்பிட்ட சில விசயங்களும் உண்டு. அப்புறம் என்ன? இவையே ஒரு நாட்டின் உள்வளத்திறமைகள்.

**உள்வளத் திறமையின் நோக்கங்கள்**

உள்வளத் திறமையின் நோக்கங்கள் பின்வருமாறு :

1. திறமையற்றவனுக்குப் பயிற்சி வழங்கித் திறமையை வளர்த்தல்
2. திறமையுள்ளவனுக்கு மேலும் பயிற்சி கொடுத்து மேம் படுத்துதல்
3. மீத்திறனுள்ளவனுக்குச் சவால்மிக்க புதிய சூழ்நிலைகளை உருவாக்கிச் சவாலை வென்று உயர்வையும், உன்னதத்தை யும் அடையச் செய்தல்.

**தினத்தந்தியும் உள்வளத்திறமையும் மற்றும் தமிழ்மொழித்திறன்கள் வளர்ச்சியும்**

*தினத்தந்தி* என்பது விலைமதிக்க முடியாத தமிழ்மொழி ஆதார வளமாகும். மொழிப் பாடத்தில் மொழித்திறன்கள் வளர்ச்சியில் **தினத்தந்தி** முக்கியப் பங்கு வகிக்கிறது. **தினத்தந்தி** எளிதில் கிடைக்கக் கூடியது. மற்ற ஊடகங்களைக் காட்டிலும் தினத்தந்தி விலை குறைந்தது. **தினத்தந்தியைத்** துவக்க நிலை யிலிருந்து உயர்கல்வி வரையில் பயன்படுத்த முடியும். மீத்திறன் மாணாக்கர்களிலிருந்து சராசரிக்கும் குறைவாக உள்ள மாணாக்கர்களும் **தினத்தந்தி**யை படிக்கக் கொடுக்கலாம். **தினத்தந்தி**யில் மிகக் குறைந்த ஒரு பகுதியாக ஒரு சொல்லி லிருந்து அதிகப் பக்கங்கள் அடங்கிய கட்டுரைகள் வரை இருக்கின்றன. இவை அனைத்துமே உள்வளத் திறமைகள் பொதிந்து கிடக்கின்ற தமிழ் மொழித்திறன் ஆதார வளங்களாகும்.

இக்கட்டுரையில் திருச்சிப் பதிப்பில் வெளிவந்த செய்தித் தலைப்புகள் மட்டுமே எடுத்துக் கொள்ளப் படுகின்றன. சி.பா. ஆதித்தனார் செய்தித் தலைப்பை மிகமிகக் கவனமாக உருவாக்கினார். அவர் கொடுக்கும் செய்தித் தலைப்பிற்காகவே அக்காலத்தில் பலர் **தினத்தந்தி**யை வாங்கியிருக்கிறார்கள். இன்றும் செய்தித் தலைப்பிற்கு **தினத்தந்தி** மிகமிக முக்கியத் துவத்தைத் தருகிறது. **தினத்தந்தி**யில் திருச்சிப் பதிப்பில் சென்ற சில மாதங்களில் வெளியான சில செய்தித் தலைப்புகளை உபயோகித்து எவ்விதம் மாணவர்களுக்குத் தமிழ் மொழித் திறன் பயிற்சி கொடுக்கலாமென்பதை இனிவரும் பகுதியில் காண்போம்.

**பயிற்சி - 1**

பயிற்சியின் தலைப்பு

*பல செய்திகளின் தலைப்புகளில் அமைந்துள்ள சொற்களைப் பயன்படுத்தி வாக்கியங்களை அமைத்துக் காட்டுதல்.*

தயாரிப்பு

*தினத்தந்தி பத்திரிகையிலிருந்து மிகச் சிறந்த செய்தித் தலைப்புகளைக் கத்தரித்து எடுத்துக் கொள்ளவும். பிறகு அச்செய்தி தலைப்பில் அமைந்துள்ள சொற்களைத் தனித்தனியாக கத்தரித்து எடுத்துக் கொள்ளவும். அச்சொற்களை ஒரு கொள்கலத்தில் போடவும். மாணவர்கள் தனித்தனியாகவோ அல்லது குழுவாகவோ பிரிந்து கொள்கலத்தில் உள்ள சொற் களை எடுத்துப் புதிய வாக்கியங்களை அமைத்துக் காட்டலாம்.*

**வகுப்பறைச் செயல்கள்**

1. மாணவர்கள் தேவையான சொற்களை எடுத்துக் கொள்ளலாம். எல்லாச் சொற்களையும் எடுத்துக் கொள்ள வேண்டிய அவசியமில்லை.
2. வாக்கியங்கள் எவ்வளவு நீளமாக வேண்டுமானாலும் இருக்கலாம்.
3. வாக்கியங்கள் தனி வாக்கியமாகவோ, கூட்டு வாக்கிய மாகவோ அல்லது கலவை வாக்கியமாகவோ இருக்கலாம்.
4. வாக்கியங்கள் பொருள் உடையதாகவும், இலக்கணப் பிழையற்றதாகவும் இருக்க வேண்டும்.

வாக்கியங்களை மாணவர்கள் எழுதிய பிறகு மற்ற மாணவர்களுக்குப் படித்துக் காட்டலாம்.

எ.டு : **தினத்தந்தி** - 23.02.2005, பக்கம் 1

*பீகார், ஜார்கண்ட் மாநிலங்களில் இன்று இறுதிக்கட்ட ஓட்டுப்பதிவு - ஆட்சி அமைப்பது யார்? ஞாயிற்றுக் கிழமை தெரியும்.*

**தினத்தந்தி** - 23.02.2005, பக்கம் 2

*மாசி திருவிழா : திருச்செந்தூரில் பக்தர்கள் குவிந்தனர். இன்று காலை தேரோட்டம்.*

*தினத்தந்தி* - 02.03.2005, பக்கம் 5

மின்தடை நீக்க பணி மையங்கள்

சிறுசேமிப்புத் திட்டத்தில் முதலீடு செய்து உங்கள் வரிச்சுமையை குறையுங்கள்.

*தினத்தந்தி* - 02.03.2005, பக்கம் 8

மாணவ - மாணவிக்கான அறிவியல் போட்டிகள்

**பயிற்சி - 2**

பயிற்சியின் தலைப்பு

பத்தி அல்லது பகுதிகளுக்கு ஏற்றவாறு பொருத்தமான தலைப்பைத் தேர்ந்தெடுத்தல்.

தலைப்பு

சில தலைப்புகளுடன் கூடிய சிறு பத்தி / பகுதிகளைத் தினத்தந்தி பத்திரிகையிலிருந்து கத்தரித்து எடுத்துக் கொள்ளவும். தலைப்பையும், பகுதி / பத்தியையும் தனித்தனியாகக் கத்தரித்து எடுத்துக் கொள்ளவும்.

**வகுப்பறைச் செயல்கள்**

மாணவர்களுக்குத் தனித்தனியாகவோ / குழுவாகவோ கத்தரித்து எடுத்த பகுதி / பத்திகளையும் தலைப்பையும் தனித் தனியாகக் கொடுக்கவும். மாணவர்களிடம் பத்திக்கு ஏற்ற பொருத்தமான தலைப்பைத் தேர்ந்தெடுக்கச் சொல்லலாம்.

எ.டு : *தினத்தந்தி* - 01.03.2005 - பக்கம் 6

இங்கிலாந்தில் தயாரிக்கப்படும் நூற்றுக்கணக்கான உணவு வகைகளில் சூ-டாண்-ஜ என்ற நிறமிப் பொருள் சேர்க்கப்படுகிறது. சிவப்பு வண்ணத்தை அளிக்கக் கூடிய இந்த உணவுப் பொருள்களை உண்பவர் களுக்கு புற்றுநோய்வரும் சாத்தியக்கூறு உள்ளதாக கண்டறியப்பட்டுள்ளது. இதையொட்டி இங்கிலாந்தி லிருந்து வரும் இதுபோன்ற உணவுப் பொருள்களின் இறக்குமதிக்கு சீன அரசு தடை விதித்துள்ளது.

(தலைப்பு : இங்கிலாந்து உணவு இறக்குமதிக்கு சீன அரசு தடை)

பெடரல் வங்கி, உள்நாட்டில் செய்யப்படும் டெபாசிட்டுக் களுக்கான வட்டி விகிதத்தை மாற்றி அமைத்து உள்ளது.

ஏழு நாட்கள் முதல் 29 நாட்களுக்கு இடைப்பட்ட டெபாசிட்களுக்கு 4.25 சதவீத வட்டியும், 30 நாட்கள் முதல் 45 நாட்களுக்கு இடைப்பட்ட டெபாசிட்டு களுக்கு 5 சதவீத வட்டியும் வழங்கப்படும்.

*(தினத்தந்தி - 01.03.2005, பக்கம் 6. தலைப்பு : பெடரல் வங்கி வட்டி விகித மாற்றம்)*

**பயிற்சி - 3**

பயிற்சியின் தலைப்பு

ஒரு தலைப்பைக் கொண்டு இன்னொரு தலைப்பை விரிவு செய்தல்.

தயாரிப்பு

இரண்டிரண்டு செய்தித் தலைப்புகளை ஜோடி ஜோடியாக எடுத்துக் கொள்ளவும்.

**வகுப்பறைச் செயல்கள்**

மாணவர்களிடம் இந்த ஜோடிகளைக் கொடுக்க வேண்டும். இரண்டாவது தலைப்புச் செய்திகளின் சொற்களை வைத்துக் கொண்டு முதலாவது தலைப்புச் செய்தியினை விரிவாக்குதல். முதலாவது செய்தி தலைப்பின் சொற்களை வைத்துக் கொண்டு இரண்டாவது செய்தித் தலைப்பினை விரிவாக்குதல். அவ்வாறு உருவாக்கப்பட்ட புதிய தலைப்புகளுக்கு ஏற்றவாறு புதிய புதிய பத்திகளை உருவாக்கிக் காட்டுதல்.

*எ.டு :* ***தினத்தந்தி*** *- 16.02.2005 - பக்கம் 3*

தாயை சுமந்து கொண்டு புனித யாத்திரை செல்லும் மகன்.

***தினத்தந்தி*** *- 16.02.2005 - பக்கம் 9*

கலையே மனிதர்களை ஒன்றுபடுத்துகிறது.

புதிய வாக்கியங்கள்

புனித யாத்திரை மனிதர்களை ஒன்றுபடுத்துகிறது.

கலைப்பயணம் புனிதப் பயணத்தைப் போன்றது.

**பயிற்சி – 4**

பயிற்சியின் தலைப்பு

பத்தியில் கோடிட்ட சொற்களுக்குத் தகுந்த ஒரு பொருட் பன்மொழிச் சொற்களை எழுதுக.

தயாரிப்பு

தினத்தந்தி பத்திரிக்கையிலிருந்து சிறுசிறு பகுதிகளைக் கத்தரித்து எடுத்துக் கொள்ளவும். அந்தப் பகுதியில் சில சொற்களைத் தேர்ந்தெடுத்து அடிக்கோடிட்டுக் காட்டவும்.

**வகுப்பறை செயல்கள்**

அடிக்கோடிட்டுக் காட்டப்பட்டுள்ள சொற்களுக்குத் தகுந்த ஒருபொருட்பன்மொழிச் சொற்களை எழுதச் சொல்லவும்.

எ.டு. : ***தினத்தந்தி*** - 17.02.2005, பக்கம் 6.

ஆரோக்கிய பராமரிப்புக்காக இந்தியர்கள் செலவிடுவது அண்மைக்காலமாக அதிகரித்து வருகிறது.

பராமரிப்புக்காக = கவனித்துக் கொள்வதற்காக
பார்த்துக் கொள்வதற்காக

அண்மை = சமீபம்

**பயிற்சி - 5**

பயிற்சியின் தலைப்பு

கொடுக்கப்பட்ட தலைப்பைப் படித்த பின்னர்த் தனிப் பட்ட உணர்வை எழுதுதல்.

தயாரிப்பு

தினத்தந்தி பத்திரிகையிலிருந்து பல செய்தித் தலைப்பு களைக் கத்தரித்து எடுத்துக் கொள்ள வேண்டும்.

**வகுப்பறை செயல்கள்**

தலைப்புகளை மாணவர்களிடம் கொடுக்கவும், அவர் களுடைய தனிப்பட்ட, உணர்வுகளை எழுதச் சொல்லவும், மிக முக்கியமாக ஏன் அவ்வாறு உணருகிறார்கள் என்று காரண காரியத்தை எழுதச் சொல்லவும்.

உதாரணம் : ***தினத்தந்தி*** - 02.02.2005 - பக்கம் 2

தோல் ஆடை அலங்கார அணிவகுப்புகளுக்கு எதிர்ப்பு

**மாணவனின் உணர்வு**

தோல் ஆடைகள் விலங்குகளின் தோலால் செய்யப் படுகின்றன. இதற்காகப் பல விலங்குகளும் பாம்பு போன்ற

ஊர்வனவும் பெருமளவு கொல்லப்படுகின்றன. எனவே இத்தகைய அணிவகுப்பை எதிர்க்கிறோம்.

**விலங்குகளைக் கொல்லாதே**

விலங்குகள் சித்ரவதை செய்யப்படுவதைப் பார்த்துக் கொண்டு சும்மா இருக்காதீர்.

**முடிவுரை**

இக்கட்டுரையில் தினத்தந்தியின் சிறப்புகள் எடுத்துக் கூறப் பட்டுள்ளன. தினத்தந்தியில் வெளிவந்த பல செய்தித் தலைப்பு களை எடுத்துக் கொண்டு மாணவர்களுக்குப் பயிற்சிகள் கொடுத்து எப்படித் தமிழ்மொழித் திறன்களை வளர்க்கலாம் என்றும் ஆராயப் பட்டுள்ளது.

**துணை நூல்கள்**


1. அரங்கநாதன் (2001), தமிழ் இலக்கிய வரலாறு - ஒரு புதுப்பார்வை, திருச்சிராப்பள்ளி : தேவன் பதிப்பகம்
2. அந்தோனி இராசு (1998), இதழியல அடிப்படைகள், திருச்சிராப்பள்ளி : ஆரோக்கியம் பதிபபகம்.
3. தமிழ்ப் பாடநூல் (2003), சென்னை : தமிழ்நாட்டுப் பாடநூல் கழகம்.

# தமிழ்த் தினசரிகளின் பரிமாணங்கள் : 'தினத்தந்தி'யின் தனித்தன்மை

முனைவர் ந. வேலுசாமி

நடந்து கொண்டிருப்பது பத்திரிகையுகம். இது கல்வியுகம், அறிவியல்யுகம் என்பனவெல்லாம் இதற்குப் பிறகுதான்.

மக்களுக்குத் தகவலைக் கொண்டுசெல்ல எத்தனையோ ஊடகங்கள் (*Media*) இன்று உருவாகியுள்ளன, மின் அணு ஊடகங்கள் உட்பட. அவற்றைவிட எல்லாம் முன்னால் தோன்றியதும், நிலைத்து நிற்பதும், நீண்ட காலப் பயன் அளிக்கக் கூடியதுமாய்த் திகழ்வன அச்சு ஊடகங்களே (*Print Media*) என்று குன்றேறிக் கூறலாம்.

அச்சு ஊடகங்களிலும், நாளிதழ் எனப்படும் தினசரி களோடு வார, திங்கள், காலாண்டு, அரையாண்டு, ஆண்டு என்றவாறு பருவ இதழ்களும் (*Periodicals*) பல்கிப் பெருகி யுள்ளன.

இங்கு, முதன்முதலில் தோன்றிய தினசரி - அதுவும் தமிழ்த் தினசரிகளாகிய நாளிதழ்கள் காலவெள்ளத்தாலும், மக்களின் தேவைக்கு ஏற்பவும் ஏற்பட்ட மாற்றங்களைக் குறிப்பிடுவது இயல்கின்றது.

இந்தியாவில் தினசரி தோன்றியதை முதலில் எண்ணிப் பார்க்கிறோம். 1780-ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 29-ஆம் நாள் நமது இந்திய நாட்டின் முதல் செய்தித்தாள் **பெங்கால் கெசட் அல்லது கல்கத்தா அட்வர்டைசர்** என்ற பெயருடன் கல்கத்தாவில் வெளியிடப்பெற்றது.[1] இதன் ஆசிரியராக ஜேம்ஸ் அகஸ்டஸ் ஹக்ஸ்லி என்பவர் பணியாற்றினார். இதன் அளவு 12 அங்குல நீளமும், 8 அங்குல அகலமும், இரண்டு பக்கங்களும் கொண்டதாக இருந்தது என அறிகிறோம்.

---

தமிழத்துறை, ஈரோடு கலைக் கல்லூரி
ரங்கம்பாளையம் (அஞ்சல்), ஈரோடு - 638 009

இன்று, இருபத்து ஒன்றாம் நூற்றாண்டில் நாளிதழ்களின் வளர்ச்சியை - வண்ணத்தையும், வடிவத்தையும், எண்ணத்தையும் எண்ணிப் பார்க்கும்போது, அம்மா! இமாலய வளர்ச்சியை அல்லவா அவை பெற்றிருக்கின்றன!

தகவலை - செய்தியை மட்டும் அச்சிட்டு வழங்கிய செய்தித் தாள்கள் இன்று, பல்வேறு மலர்கள் (*Supplements*) வெளியிட்டு வருகின்றன.

ஞாயிறு மலர், பண்டிகைகளுக்கு ஏற்ற வண்ணம் பொங்கல் மலர், தீபாவளி மலர், தொழில் மலர் என்றவாறு வெளியிடு வதோடு அவற்றின் பொருளடக்கங்கள் வியக்கச் செய்கின்றன. இது, இன்றுள்ள ஒவ்வொரு தமிழ்ச் செய்தித் தாளுக்கும் பொருந்தும். ஒன்றையொன்று விஞ்சும் விதத்திலேயே வீறுநடை போடுகின்றன.

காலைப் பத்திரிகைகள் போலவே, மாலைப் பத்திரிகைகள் தோன்றி மேற்கூறிய பணிகளை ஆற்றுகின்றன. மாலைப் பத்திரிகைகள் தோன்றியதே முதல் பெரிய பரிமாணம் எனலாம்.

மாலைப் பத்திரிகைச் செய்தியிலிருந்துதான் காலைப் பத்திரிகை, தன் செய்தியைத் தொடங்க வேண்டும்.

மாலையில், மாலைப் பத்திரிகைகளில் என்ன எட்டுக்காலம் என்று பார்க்க வேண்டும். மாலைப் பத்திரிகைகளில் வெளிவந்த செய்தியாக இருந்தால், புது விவரங்களைச் சேர்த்து (*Develop* செய்து) போடவேண்டும். கூடியவரை புதிய வளர்ச்சியைத் தலைப்பில் கொண்டு வர வேண்டும்.

எடுத்துக்காட்டு

ஒரு தலைவர் இறந்த செய்தி மாலைப் பத்திரிகைகளில் வெளிவந்திருந்தால் காலைப் பத்திரிகையில் "உடல் தகனம்" அல்லது "இறுதி ஊர்வலம்" என்று செய்தி வெளியிட வேண்டும்[2] என்பது நோக்கற்குரியது.

காலைத் தமிழ்த் தினசரிகளில் **தினத்தந்தி, தினமணி, தினகரன், தினமலர், தினத்துாது** போன்றவைகளும் - மாலைத் தமிழ்த் தினசரிகளில் **மாலை முரசு, மாலை மலர், மாலை மணி** போன்றவையும் நம் கண்முன் காட்சியளிக்கின்றன. இவை போக அந்தந்த அரசியல் கட்சிகளிலும் காலை, மாலைத் தினசரிகள் கம்பீரமாக வெளிவருகின்றன. இவையெல்லாமே பரிமாணத் தன்மைகளுக்கு உட்பட்டு வெளிவருகின்றன.

காலைப் பதிப்பு என்பது ஓர் இடத்தில் அச்சாகி நாடு முழுவதும் காலையில் அனுப்பப்படும் செய்திப் பத்திரிகை யாகும். பொதுவாக 12 மணி வரையில் உள்ள செய்திகளை மட்டும் வெளியிடும். மாலைப் பதிப்பு என்பது மாலையில் வெளியிடப்படுவதாகும். பகல் 1 மணி வரை உள்ள செய்தி களைத் திரட்டி வெளியிடும். பிறகு அவசியம் ஏற்படும்போது மேலும் சில பதிப்புகளைக் கொண்டு வரும். பெரும்பாலும் மாலை ஏடுகள் வட்டாரச் செய்திகளை முன் நிறுத்திச் செய்தி களை வெளியிடும்[3] தன்மையதாகும்.

இந்த நாள் ஏடுகள் நகரப் பதிப்புகளையும் (*City Edition*) கொண்டுவரும். சென்னை, கோவை, திருச்சி, மதுரை போன்ற நகரங்களில் மட்டுமே கிடைக்கும் ஏடுகள், நகரப் பதிப்பு எனப்படும். அவை மிக அண்மைச் செய்திகளை மட்டும் கொண்டுவரும் என்பது குறிப்பிடத்தக்கது.

மாலைப் பத்திரிகைகளைப் பற்றிக் குறிப்பிடும்போது, இன்னொன்றையும் தவறாமல் குறிப்பிட வேண்டியுள்ளது.

அரசியல் மாற்றம், அன்றைய தேர்தல் முடிவுகள், தலைவர் திடீர் மறைவு என்று நிகழுமானால், அதற்காக அன்றே அடுத்தடுத்த பதிப்பை வெளியிடுவதுண்டு. பொதுவாக மாலை முரசு, தஞ்சை, திருச்சி நகருக்கு மட்டுமே மாலை 5 மணி அளவில் சிறப்புப் பதிப்பு வெளியிடுவதுண்டு. வெளியிடும் பதிப்பிற்கு ஏற்றாற்போல, முதல் பதிப்பென்றால் ஒரு நட்சத்திரக்குறி ★, இரு பதிப்பு, அதற்கு மேல் என்றால் எத்தனை பதிப்போ அத்தனை நட்சத்திரக் குறியீடுகளும் (எடுத்துக்காட்டாக ஆறாம் பதிப்பு எனில் ★★★★★★) இடம் பெற்றிருக்கும்[4] என்பது கருதத்தக்கது.

எழுத்தாளர்கள் - குறிப்பாகப் பத்திரிகை எழுத்தாளர்கள், வாசகர்களிடம் பரிவு காட்ட வேண்டும். ஏன்? வாசகர்கள் நாளேடுகள் வெளியிடும் கட்டுரைகளைப் படிக்கிறார்கள். அன்றாடச் செய்திகள், அறிவிப்புகள், விளம்பரங்கள் போன்று பல உபயோகங்களுக்காக மக்கள் நாளிதழ்களை வாங்கு கிறார்கள். முழுதும் படிக்காவிட்டாலும் தினமும் வாங்குகிறார்கள். எனவே, படிப்பவர் எந்தத் தொல்லையும் மேற்கொள்ளாமல், அகராதி, பண்டிதர் துணையின்றிக் கட்டுரையைப் புரிந்து கொள்ள வேண்டும்[5] என்ற நோக்கத்தில் தமிழ்த் தினசரிகள் இன்று நடத்தப்பட்டு வருகின்றன.

### தினத்தந்தியின் தனித்தன்மை

தமிழ்த் தினசரிகளில் இங்குத் தினத்தந்தியை மட்டும் தனியாகக் குறிப்பிடுவதற்குக் காரணம் மற்ற தினசரிகளைப் புறக்கணிக்கும் நோக்கத்தில் அல்ல. ஒவ்வொன்றும் ஒவ்வொரு நோக்கத்தில் வெற்றிகளை ஈட்டி வருவது நாம் அறியாததும் அல்ல.

ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் பார்ப்பது போல் அனைத்துத் தின இதழ்களையும் குறிப்பிட இயலாது. சில சொல்லிப் பல நினைக்கத் தூண்டுவதே நம் குறிக்கோள். இங்கு இயல்வதும் அதுவே.

மேலும், *தினத்தந்திக்கு* என்று தனித்தன்மையுண்டு என்பதை யாரும் (சக பத்திரிகைகளின் நிறுவனங்களே) மறுக்க மாட்டார்கள்.

1942-இல், சி.பா. ஆதித்தனார் அவர்கள் தினத்தந்தியைத் தொடங்கினார். இலண்டனில் தன் கல்விக்காலத்தில் அவரே நிருபராகப் பணியாற்றினார். சிங்கப்பூரில் பாரிஸ்டராகப் பணி யாற்றியபோது பத்திரிகை தொடங்க மூலதனம் தேடலானார்.

> ''இந்தியப் பத்திரிகைகளில் காணப்படும் மிகப் பெரிய குறைபாடு, பேசுகிற மொழியில் எழுதுவது இல்லை''[6]

என்பது பண்டித ஜவஹர்லால் நேரு குறிப்பு. இதை, சி.பா. ஆதித்தனார் அவர்களும் உணர்ந்து நடவடிக்கையில் ஈடுபட்டார்.

*தினத்தந்தி* இதழுக்குப் பல பெருமைகள் உண்டு.

இந்திய மொழிகளில் அதிகம் விற்பனையுள்ள பத்திரிகையை நிறுவிய - எழுத்துக்கூட்டிப் படிக்கும் எளிய மக்களையும் செய்திப் பத்திரிகை படிக்க வைத்த - ரிக்ஷா இழுக்கும் தொழிலாளிகூடக் காலையில் எழுந்ததும் ஒரு தினசரிப் பத்திரிகையைப் படிக்கும் பழக்கத்தை ஏற்படுத்தியவர் அமரர் சி.பா. ஆதித்தனார் அவர்கள். அவர் தனி மனிதரா? இல்லை. அவரே ஒரு நிறுவனம். அவரால் உருவானவை பல நிறுவனங்கள்.

### பொன் விதி (Golden Rule)

பண்டித நேரு அவர்களின் கருத்தை உள்வாங்கி ஆதித்தனார் அவர்கள் விதித்த விதிதான் பொன் விதி. ''பேச்சு வழக்கில் இருக்கும் தமிழே உயிருள்ள தமிழ். அதை கொச்சை நீக்கி எழுத வேண்டும்''. இதுவே பொன் விதி.

செந்தமிழில் எழுதுவது பெருமையாகக் கருதப்படுகிறது. அவ்வாறு நாளிதழில் எழுதினால் அது பலருக்குப் புரியாது. பேச்சுத் தமிழையே எழுத வேண்டும். இதுவே தமிழ் உரைநடை வளர்ச்சிக்கு ஒரு நாளிதழ் செய்ய வேண்டிய தொண்டு என்பது அவர் கருத்து.

தினத்தந்தியின் வெற்றிக்கு அடிப்படைக் காரணம் இந்த மொழிநடைதான் எனில் மிகையன்று.

நீண்ட காலத்தில் தனது பத்திரிகையில் கண்ட குறை களைச் சீர்திருத்த அவ்வப்போது ஊழியருக்குக் குறிப்புகளை (*Standing Instructions*) எழுதி அனுப்பிக் கொண்டே வந்தார் சி.பா. ஆதித்தனார். அது, **பத்திரிக்கை எழுத்தாளர் கையேடு** என்ற மூலநூல் ஆகியது. அந்த மூலநூல் **தினத்தந்தி** ஊழியர் களுக்கு மட்டும் உரித்தானதாக இல்லாமல், அனைத்துத் தினசரி களில் பணிபுரியும் ஊழியர்களுக்கும் ஒரு வழிகாட்டியாகத் திகழ்வது குறிப்பிடத்தக்கது.

196 பக்கங்கள் கொண்ட இந்த நூலின் வழிகாட்டுதலில் நடைபெற்று வருவதால்தான் இன்று **தினத்தந்தி** ''நம்பர் 1 நாளிதழாக'' நிலைத்து நிற்கிறது.

**கருத்துகளில் - தொடர்களில் எளிமை-புரிதல்**

அடிப்படைச் சம்பளம் (*Basic Salary*) உயர்த்தப்படும் பொழுது 'சம்பள உயர்வு' என்று எழுத வேண்டும். படி (*Allowance*) உயரும்போது ''ஊதிய உயர்வு'' என்று குறிப்பிட வேண்டும் என்றார்.

பெரிய மனிதர்களைக் குறிப்பிடும்போது 'அவர்கள்' என்று எழுதுவது வழக்கமாக இருக்கிறது. ஆனால் அது பேச்சு வழக்கில் இல்லை. எனவே, செய்தியில் எவர் பெயருக்குப் பின்பும் ''அவர்கள்'' என்று எழுதக்கூடாது என்றார்.

செய்தித்தாளில் 'பத்தி'யின் அளவு 2 அங்குலத்திற்கு மேல் (5 சென்டிமீட்டர்) போகாமல் இருக்க அறிவுரை பகன்றார்.

*'Arts College'* என்பதைக் கலைக் கல்லூரி என்று மொழி பெயர்க்கக்கூடாது. கல்லூரி என்றே மொழிபெயர்க்க வேண்டும். அவதூறு செய்திகள் (*Libel*) வெளியிட்டுக் குற்றப்படக்கூடாது. செய்திகளை எப்போதும் எதிர்காலத்தில் எழுதாமல், இறந்த காலத்தில்தான் எழுத வேண்டும். தலைப்புகள் துடிப்பாக

இருக்க வேண்டும். துடிப்பைக் குறைக்கும் சொற்களை (diluting words)ப் பயன்படுத்தக்கூடாது. பின்னே நடந்ததை முன்னே தள்ளி (Antichronological) எழுத வேண்டும்.

தமிழ்த் தினசரிகளுக்குச் 'சுவரொட்டி' (Poster) கொண்டு வந்ததும் ஒரு பரிமாணமேயாகும். இதிலும் தினத்தந்தியே முன்னிடம் வகிக்கிறது. கருத்துப்படமும் (Cartoon) அவ்வாறே. உயிர்ப்பகுதியாக விளம்பரம் இடம்பெறுகிறது. இவ்வளவு வளர்ந்துவிட்ட **தினத்தந்தியே** தொலைக்காட்சியில் 'செய்தி களை முந்தித் தருவது தினத்தந்தி' என்று தன்னை விளம்பரப் படுத்திக் கொள்கிறது என்றால், விளம்பரத்தின் வீச்சுத்தான் என்னே!

''பத்திரிகையையும் லாபகரமான தொழிலாக நடத்தி வெற்றிபெற முடியும் என்று சாதித்துக் காட்டிய பெருமை தினத்தந்தி, குமுதம் ஆகியவற்றின் அதிபர்களைச் சேரும்''[7] என்று குறிப்பிட்ட வல்லிக்கண்ணன், ஆதித்தனார் தான் ஒரு திறமையான பத்திரிக்கையாளர் என்பதை நிருபித்தார். பள்ளி யிறுதி வகுப்பு முடித்துவிட்டு வந்த இளைஞர்களையே அவர் தேர்ந்தெடுத்துப் பழக்கினார். தினத்தந்தி பாஷை என்றே தனியாக ஒன்று உருவாக்கப்பட்டது. தினத்தந்தி சர்வ. ஜனரஞ்சகமான பத்திரிகையாக வளர்ந்தது என்று குறிப்பிட்டது எவ்வளவு சிறந்த உண்மை!

தமிழ்த்தினசரிகள் எல்லாம் நாளும் நாளும் பல புதிய பரிமாணங்களைப் பெற்று வந்துள்ளன. பெற்று வருகின்றன. இவற்றில் வழக்கம்போல் முன்னோடியாக உள்ள தினத்தந்தி தன் சிறப்பிடத்தைத் தொடர்ந்து தக்க வைத்துக்கொள்ளும் என்பதில் ஐயமில்லை.

**அடிக்குறிப்புகள்**

1. இதழியல் ஓர் அறிமுகம் - டாக்டர் ஆ.பி. அந்தோணி இராசு, ப. 11.
2. பத்திரிகை எழுத்தாளர் கையேடு, சி.பா. ஆதித்தனார், ப. 136.
3. தமிழ் இதழியல், மு.அ. முகம்மது உசேன், ப. 40.
4. தமிழ் இதழியல், மு.அ. முகம்மது உசேன், ப. 95.
5. அறிவியல் தமிழ், டாக்டர் டி. பத்மநாபன், டாக்டர் க. மணி, கலைக்கதிர் வெளியீடு, பக். 36, 37.
6. பத்திரிகை எழுத்தாளர் கையேடு, சி.பா. ஆதித்தனார், அ.மா சாமி அவர்களின் முன்னுரை.
7. எழுத்தாளர்கள் பத்திரிகைகள் அன்றும் இன்றும் - வல்லிக்கண்ணன், பக். 18, 19.

# தினத்தந்தி - செய்தியும் நடையும்

**முனைவர் பெ. சுயம்பு**

### எழுத்தறிவித்த தந்தி

மக்களாட்சியில் இதழ்களின் பணி உயர்நாடியைப் போன்றது. அரசின் திட்டங்களை மக்களிடமும் மக்களின் வாழ்வியற் சிக்கல்களையும் தேவைகளையும் அரசிடமும் எடுத்துரைக்கும் பெரிய பணி இதழ்களுடையது. கல்வியறிவு ஓரளவு மேலோங்கிய சமூகத்தில் கட்டுரை, கவிதை, கதை என்னும் பல்வேறு வகை இலக்கியங்களை உருவாக்கி, மொழியின் வளத்தைப் பெருக்கும் பணியையும் இதழ்கள் செய்கின்றன. ஆனால் அமரர் ஆதித்தனார் இப்பணிகளோடு, பிறிதொரு பணியையும் தம் இதழ்களின் வாயிலாகச் செய்தார். அவரது இதழ்களுள் நாளிதழ்கள், குறிப்பாகத் தினத்தந்தி இந்த அருஞ்செயலை ஆற்றி வருகிறது. எழுத்தறிவு இல்லாத தமிழரையும் எழுத, படிக்க வைத்த ஒரு கல்வி இயக்கமாக அது தன் பணியைத் தொடங்கித் தொடர்கிறது.

### மக்கட் செய்தி

நகர நாகரிகத்தின் காற்று எளிதில் புகஇயலாத சிற்றூர் களிலுள்ள ஏழை, எளிய பாமரனும் தினத்தந்தியிலுள்ள எழுத்து களைக் கூட்டிக் கூட்டித் தமிழை அறிந்து கொள்ளும் வாய்ப்பு அமைந்தது. பெரிய அழுத்தமான கொட்டை எழுத்துகள், தினசரி வாழ்க்கையில் பயன்படுத்துகிற பழகு சொற்கள் ஆகியன பாமரனிடம் மலைப்பைத் தோற்றுவிக்காமல், மேலும் படிக்கிற ஆர்வத்தைத் தூண்டின. கற்றவர்களும் மேல்மாடி வீட்டுக் காரர்களும் மட்டுமே படித்து, கலந்துரையாடுகிற பன்னாட்டுச் செய்திகள், உள்நாட்டு அரசியல் கருத்துகள் ஆகியவற்றை விடவும், சிற்றூர்களையும் அவற்றின் சுற்று வட்டாரப் பகுதி களையும் சார்ந்த செய்திகளை வெளியிடுவதில் தந்தி முதலிடம் தருகிறது. இச்செய்திகள், இதழைப் படிப்பவரைச் சுற்றிலும்

---

தமிழ் இணைப் பேராசிரியர், ஆதித்தனார் கல்லூரி, திருச்செந்தூர் - 628 216.

நிகழ்கிற தினசரி நிகழ்வுகளாகும். அவர்களது வாழ்க்கையுடனோ உறவினர்களுடைய வாழ்க்கையுடனோ நெருக்கம் கொண்டவை.

மொழியமைப்பும் செய்திகளும் தங்களுடன் நெருங்கிய தொடர்புடையனவாக இருத்தலால், பாமரர்கள் தினத்தந்தியின் பால் பெரிய ஈர்ப்பு உடையவர்கள் ஆயினர்.

நடப்பிலுள்ள முதன்மையான நிகழ்ச்சிகளைத் தலைப்புச் செய்திகளாகத் தருதல் தந்தியின் மற்றொரு உத்தியாகும். கல்வியாளர், தொழிலாளர், பெரியோர், சிறியோர், ஆடவர் மகளிர் என எல்லா மக்களும் இதழ்களுள் தந்தியை முதலில் தெரிந்துதெடுத்துப் படிக்கின்றனர். அதற்கு இந்த உத்தியே முதன்மையானது எனலாம்.

ஒரு நாட்டின் வளத்தில் முதன்மையானது மக்கள் வளம். மக்கள் கல்வியறிவு பெற்ற நிலையிலேயே நாட்டு வளம் நிறைவான நிலையை எய்த இயலும். தங்கள் வாழ்க்கைத் தேவைகளையும் அரசின் திட்டங்களிலும் அவற்றின் செயலாக்கத்திலும் காணப்படுகிற குறைகளையும் கல்வியறிவு பெற்றோரால் மட்டுமே சுட்டிக் காட்டுதல் இயலும். இந்த உண்மையை மனத்திற் கொண்டே ஆதித்தனார் தந்தியை நிறுவி, அதன் பணிகளைச் செம்மையாக்கினார்.

**தலைப்புச் செய்திகள்**

மக்களின் கல்வி அறிவுத் தூண்டுதல், அவர்களின் புரிதிறன் தகுதி, தேவை ஆகியவற்றைக் கருத்திற் கொண்டு தந்தியின் செய்தி அமைப்பு உருவாக்கப்பட்டது; உருவாக்கப் படுகிறது. எனவே சில வடமொழிச் சொற்களும் ஆங்கிலச் சொற்களும் கலந்து வழங்குதல் தவிர்க்க இயலாதது ஆயிற்று. தமிழ் மொழியிலும் கூட, அதன் தொடரமைப்பு இலக்கண விதிகளுடன் முற்றிலும் பொருந்தியதாக அமைதலும் இல்லை. 'பத்து வீடுகள் தீப்பற்றி எரிந்தன' என்பது இலக்கணத் தொடர். இவ்வகைத் தொடர்கள் எழுத்து மொழியில் கற்றோரால் பயன்படுத்தப்படுவன.

தந்தி இத்தகைய மொழியமைப்பை ஏற்பது இல்லை. '10 வீடு எரிந்தது அல்லது '10 வீடு தீப்பற்றி எரிந்தது' என்ற அமைப்பையே அது பின்பற்றுகிறது. 'பத்து' என்னும் எழுத்தை விடவும் '10' என்ற எண் எளிதில் மனத்தில் பதியத் தக்கது. தினத்தந்தியின் தொடரமைப்பு மக்களின் மொழியமைப்பு.

பேச்சு மொழியைச் சார்ந்தது. பேச்சு மொழியில் எழுவாய் ஒருமையாகவோ பன்மையாகவோ இருக்கும்போது பயனிலை ஒருமையாகவே அமைகிறது. இந்த அமைப்பே இயற்கை யானது. பழங்காலந்தொட்டு இதனைத் தமிழில் காண முடிகிறது. இலக்கியங்களும் கல்வெட்டுகளும் இதற்கான சான்றுகளை நிறையக் கொண்டுள்ளன.

தலைப்புச் செய்திகள் பெயர்ப் பயனிலைகளைக் கொண்டே பெரும்பான்மையும் அமைகின்றன. 'மராட்டியத்தில்' கோர விபத்து. கோவிலில் திடீர் நெரிசல். 300 பக்தர்கள் நசுங்கிச் சாவு'. **'குடியரசு தினவிழா கொண்டாட்டம். வீரதீரச் செயல் புரிந்த 4 பேருக்கு அண்ணா விருது'. கோட்டை முன்பு உண்ணா விரதம் இருக்க முயற்சி.** அப்பாவு எம்.எல்.ஏ. கைதாகி விடுதலை (நெல்லை தினத்தந்தி, 13.1.2005, 26.1.2005). செய்திகள் அடிக்கோடிட்டு அவற்றின் சிறப்பினைச் சுட்டிக் காட்டும் முறையையும் தந்தியில் காணலாம்.

**'இன்று 'சுனாமி' அலை தாக்குதல் இருக்காது**

பீதி வேண்டாம் என்று அதிகாரிகள் அறிவிப்பு' - ஏறக்குறைய ¼ பக்கத்தில் பின்னால் விவரிக்கப்படும் செய்திகளை 'இருக்காது' 'பீதி வேண்டாம்' என்று அழுத்தமான பொருள் உடைய முற்றுப் பயனிலைகளால் முன்னரே தலைப்புகள் தெரிவித்து விடுகின்றன.

சதக் சதக் என்று குத்தினான்!

டமார் என்று மோதியது!

இவை முந்நாளைய தினத்தந்தியின் தலைப்புகள். உணர்ச்சி மழுங்காமல் செய்திகளை வெளிப்படுத்துகிற சிறந்த விவரிப்பாளர் ஒருவரின் பேச்சுமொழித் திறனை இதில் காணமுடிகிறது. கல்வியறிவு முன்னேற்றம் பேரளவில் இல்லாத தமிழகத்தில் இவை போன்ற நடையைத் தந்தி பின்பற்றியது. இந்த நடை பின்னாளில் மறைந்து, உணர்ச்சி மொழிகளான ஒலிக் குறிப்புச் சொற்களின் ஆதிக்கம் குறையலாயிற்று. காரணம் சாதாரணச் சொற்களைக் கொண்டே செய்திகளைப் புரிந்து கொள்ளும் திறன் மிகுந்த இனமாகத் தமிழர் கல்வியில் முன்னேறிவிட்டனர்.

வாணிகத்தைப் பொறுத்த வரையில் செட்டியாரும் சரக்கும் சிறப்பாக இருத்தல் வேண்டும். இவை இரண்டிலும் செட்டியாரின் திறமை பெரிதும் விரும்பப்படுகிறது. செட்டியாரின் பேச்சாற்றலும் விற்பனை, கொள்முதல் திறனுமே வாணிகத்தின் உயர்வுக்கும் தாழ்வுக்கும் பெரிதும் காரணமாகின்றன. 'செய்திகள் சரக்கு', தலைப்புகள் செட்டியார்' என்கிறார் முனைவர் அ.மா. சாமி.

**மக்கள் இதழ்**

தினத்தந்தியின் மொழிநடை குறித்து அ.மா. சாமி இதழாளர் ஆதித்தனார் என்ற நூலின் எழுதியுள்ள செய்தி ஒன்று

ஒருமுறை எம்.ஏ. பட்டதாரி ஒருவர் வேலை கேட்டு வந்தார். அவரை ''மரம்'' என்று எழுதச் சொன்னார். அவர் ''மறம்'' என்று எழுதினார். ''போய் வாருங்கள்'' என்று அய்யா அனுப்பி விட்டார்... துணைவேந்தர் சுப்பிரமணியம் கூறியது போன்ற இன்னொரு நிகழ்ச்சியைத் திருக்குறளார் தெரிவிக்கிறார். ''ஆதித்தனார் உங்கள் தலைவர் தானே! அவரது தினத்தந்தியில் கொச்சைத் தமிழில் எழுதுகிறார்கள். நல்ல தமிழில் எழுதச் சொல்லுங்கள்'' என்று அவரிடம் ஒரு பேராசிரியர் சொல்லி அனுப்பினாராம்'' ('நாம் தமிழர்' இயக்கத் துணைத் தலைவர் திருக்குறளார்).

அவர் வந்து அய்யாவிடம் சொல்ல, ''தினத்தந்தியை நான் பேராசிரியர்களுக்காக நடத்தவில்லை. அரைகுறைப் படிப்பாளிகளுக்காக நடத்துகிறேன். இதை அந்தப் பேராசிரியரிடம் போய்ச் சொல்லுங்கள்'' என்று பதில் அளித்தார்.

தமிழர்களின் மொழி, அரசியல் முன்னேற்றத்திற்காக உழைத்தவர்; அவர்களைக் கல்வி அறிவுள்ள உயர் மக்களாக மாற்றியவர்; உயர்கல்வி பெறுதற்காகக் கல்லூரி நிறுவியவர். உணர்வு முழுவதும் தமிழர் நலத்தையே கொண்டவர். அதனால் தமிழர் தந்தையாகப் போற்றப்படுகிறார் அமரர் ஆதித்தனார்.

# தமிழ் வளர்ச்சியில் தினத்தந்தி நாளிதழின் பங்கு

**முனைவர் ப. கண்ணதாசன்**

பழந்தமிழரின் நாகரிகம், பண்பாடு, பழக்கவழக்கங்கள், வாழ்க்கை நெறிமுறைகள் போன்றவற்றை உலகத்தினருக்கு அறிமுகப்படுத்தியது இதழ்களேயாகும். பழந்தமிழர் இயற்கையும், இயற்கையோடு இணைந்த வாழ்வினையும் வாழ்ந்தவர். தன் வாழ்க்கை நெறிமுறைகளை அகவாழ்வு, புறவாழ்வு எனப் பாகுபாடு செய்து அறவொழுக்கத்தோடு வாழ்ந்தவர். காதல், வீரம், கொடை போன்றவற்றிற்கு முக்கியத்துவம் கொடுத்து அறக்கோட்பாடுகளுடன் வாழ்க்கையை நடத்தியவர். பழந்தமிழர் தம்மை மட்டுமல்லாது தம்மைச் சுற்றியுள்ள உயிருள்ள, உயிரற்ற சடப்பொருள்களை அறிந்ததோடு, இயற்கையின் நிகழ்வுகளையும், அவற்றின் தன்மை, செயல்பாடுகளையும் அறிவியல் சிந்தனையோடு, ஆராயும் மனப்போக்கு அவர் களிடம் இருந்தது. இயற்கையில் ஏற்படும் மாற்றங்களைக் குறிப்பாகத் தட்ப, வெட்பச் சூழ்நிலைகள், விண்ணில் ஏற்படும் நிகழ்வுகள் புவியில் ஏற்படும் மாற்றங்களான புயல், வெள்ளம், கடலின் சீற்றம், கடல்கோள்கள் போன்றவற்றை அறிவியல் கண்டுபிடிப்புகள், அறிவியல் துணைப்பொருள்கள், ஊடகங்கள், இல்லாத காலக்கட்டத்திலும் தம் தமிழ் இலக்கண இலக்கியங்களில் பதிவு செய்து வைத்துள்ளதைப் பார்க்கும் பொழுது அன்றே தமிழனுக்கு அறிவியல் அறிவும், அறிவியல் சிந்தனையும் இருந்துள்ளதை அறிய முடிகின்றது. எழுது பொருள்கள், அச்சுப் பொருள்கள், காகிதம், இல்லாத பழங் காலத்திலும் பனை ஓலைகளிலும் கற்பாறைகளிலும், கல்வெட்டு களிலும் தமிழ் எழுத்துகளைப் பொறித்துள்ளான். பழங்காலத் தமிழரின் அறிவியல் திறம் இன்று உலகிற்கு அறிமுகம் செய்த பெருமை இதழ்களைச் சாரும். குறிப்பாகத் தொல்காப்பியர், திருவள்ளுவர் சங்கப்புலவர்களின் படைப்புகள் இன்றும் உலகம் முழுவதும் பரவி சிறப்புற்றதற்குக் காரணம் இதழ்களேயாகும்.

---

24-A/1290, நெல்லுமண்டித் தெரு, கீழ வாசல், தஞ்சாவூர் - 613 001.

ஆங்கிலயேர்களின் வருகையால் தான் இந்தியாவில் இதழ்கள் வளர்ச்சி நிலையை அடைந்தன. ஐரோப்பியக் கிருத்துவப் பாதிரிமார்கள் தமிழ்நாட்டிற்கு வந்து தம் மதக் கருத்துகளைத் தமிழ்மொழியிலேயே பரப்ப வேண்டும் என்ற நோக்கோடு, தமிழ் இலக்கண, இலக்கியங்களைக் கற்று, தமிழ் எழுத்துகளைச் சீர்திருத்தம் செய்து, பல அச்சுக்கூடங்களை நிறுவித் துண்டுச்சீட்டு களாக இதழ்களை வெளியிட்டுத் தமிழரின் தொன்மைகளையும் வீரத்தையும் அகில உலகத்திற்கு அறிமுகம் செய்த பெருமை கிருத்துவப் பாதிரிமார்களையே சாரும். இவ்வகையில் இன்று அறிவியலின் அசுர வளர்ச்சியினால் எண்ணிலடங்கா இதழ்கள் தமிழ் வளர்ச்சிக்காக அரும்பாடுபட்டு மொழியை வளர்த்து வருகின்றன.

‘‘மக்கள் சேவையே மகேசன் சேவை’’ என்ற கூற்றுக்கு ஏற்ப உலகத்தில் எண்ணற்றவர் வாழ்ந்து மறைந்தனர். அவர் களுள் பலதிறப்பட்ட அறிவும், திறமையும், பண்பும் பெற்ற மிகச் சிலரே என்றும் நின்று நிலவும் செயல்களைப் புரிந்துள்ளனர். அவர்களைத் ‘‘தம்புகழ் நிறீஇத் தாம் மாய்ந்தனரே’’ எனப் புறநானூறு போற்றுகின்றது. அவர்களது எண்ணங்களும், அறிவுரைகளும் என்றும் உலகுக்கு ஒளிவிளக்காகத் திகழ்கின்றன. அத்தகு கருத்துப்படையல்களை மனித குலத்துக்கு அளித்த பெரியோர்கள் காட்டியுள்ள வாழ்க்கை நெறிகளும், அறிவுரை களும், நமக்குப் பெரிதும் உதவுகின்றன. தந்தைபெரியார், இராஜாஜி, பேரறிஞர் அண்ணா, திரு.வி.க., கல்கி, தமிழர் தந்தை மாண்புமிகு சி.பா. ஆதித்தனார் போன்றோர் தமிழ்ப் பத்திரிகை வளர்ச்சிக்குச் செய்த தொண்டினை யாவரும் அறிவர். பண்டிதர்கள் மட்டுமே படிப்பதற்குரிய செய்தித் தாள்கள் இருந்த காலத்தில் கிராமத்தில் வாழும் பாமரர்களும் படித்துப் பயன்பெறும் வகையில் பத்திரிகையை நடத்தித் தனிப்பெரும்புகழ் பெற்றவர். சி.பா. ஆதித்தனார் ஆவார்.

மக்களாட்சியில் மக்கள் கல்வியை வழங்கி, அரசு மக்கள் நலம் பேணும் வகையில் நடுநிலை நின்று செயல்பட வேண்டியது செய்தித்தாள்களைப் பற்றிய அறிவை வளர்க்க வேண்டிய தேவையை அனைவரும் அறிவோம். அதனை முறைப்படுத்திப் பாடமாகப் பயிற்றுவிக்கின்ற பொழுது நல்ல சிறந்த பத்திரிகையாளர் களை உருவாக்க முடியும். அதற்குத் துணை புரிகின்ற இதழியல் கலையை வளர்ப்பது தேவையான ஒன்றாக அமைகின்றது.

இதழியல் அறிவியல் உலகில் வியக்கத்தக்க வகையில் விரைந்து வளர்ந்து வருகின்றது. அறிவியல் தொழில் நுட்பத்தின்

முன்னேற்றத்தின் விளைவாக இதழ்கள் (செய்தித்தாள்கள்) மக்கள் வாழ்க்கையில் சிறப்பான ஓர் இடத்தைப் பெற்றுத் திகழ்கின்றன. உலக நிகழ்வுகளை ஊடகங்களின் மூலமாகவும் செய்தித்தாள்கள் மூலமாகவும் தினம் எழுந்தவுடன் பார்ப்பதும் படிப்பதும் இன்றைய மனிதனின் பழக்கமாக மாறிவிட்டது. இதழ்கள் தாக்கத்திற்குட் படாத எந்தத் துறையும் இல்லை என்று குறிப்பிடும் அளவிற்கு இதழியலின் பங்கு சிறந்ததாக அமைகின்றது.

## இதழியலின் வளர்ச்சியும், இலக்கணமும்

மனிதன், அறிவு வளர்ச்சி பெற்ற காலத்திலிருந்து தன்னையும, மற்றவர்களைப்பற்றியும், அவர்களின் வாழ்க்கை நெறிப்பாடு களைப்பற்றியும், செயல்பாடுகள் பற்றியும், உற்று அறிந்து கொள்ளும் ஆர்வம் உடையவனாக இருந்திருக்கின்றான். மனிதன் முதலில் செய்கை மூலமாகவும், மொழிவளர்ச்சிப் பெற்ற பிறகு பேச்சுவழக்கின் துணையோடும், செய்திகளை அறிந்தும், பரப்பியும் வந்திருக்கின்றான். எழுதக் கற்றுக் கொண்டவன், அச்சுப் பொறியைக் கண்டுபிடித்தும், 'செய்தி களின் பரப்பளவு மிகுந்து போக்குவரத்து வளர்ச்சி, அறிவியல் தொழில்நுட்ப முன்னேற்றம் இவற்றின் விளைவாக மின்னணுக் கருவிகளின் துணையோடு இலக்கண வரம்புக்குள்ளடங்காத அளவிற்கு இதழியல் வளர்ச்சி பெற்றுள்ளது. மக்கள் தொடர்பும் (*Mass Communication*) இதழியலின் உட்பிரிவாகு மளவிற்கு இத்துறை விரிவடைந்துள்ளது.

இதழியல் பொதுமக்களின் கருத்துகளை உருவாக்கவோ, அழிக்கவோ வல்லதாக இருக்கின்றது. இதழ்கள் வாய்மை வழியில் சென்று பொறுப்புணர்ச்சியோடு செயல்படாவிட்டால் அதனால் ஏற்படும் கேடுகள் அளவிட முடியாதனவாக இருக்கும். ஆதலால்தான் தேரோ (*Thoreau*) செய்தித்தாள்களை எப்பொழுதுமே படிக்காதவர்கள் பாக்கியவான்கள், ஏனென்றால் அவர்கள் இயற்கையும், அதன்மூலம் இறைவனையும் காண்பார்கள் என்று கூறுகின்றார். இதழியலாளர்கள் மிகுந்த அறஉணர்வோடும் சமுதாயப் பொறுப்போடும் செயல்பட வேண்டும் என்பதையே உணர்த்துகின்றது.

ஜி.எப்.மோட் (*G.F Mott*) என்பவர் விரிவான விளக்கமாக, இதழியல் என்பது பொதுமக்கள் தொடர்புக்குரிய புதிய சாதனங்களைப் பயன்படுத்திப் பொதுச் செய்திகளையும், பொதுக்கருத்துகளையும், பொதுப் பொழுது போக்குகளையும்

முறையாக, நம்பிக்கைக்குரிய வகையில் பரப்புவதாகும் என்று இதழியலுக்கு இலக்கணம் குறிப்பிடுகின்றார்.

**இதழியலும், அறிவியலே**

அறிவியல் என்னும் சொல் காரண காரியம் ஆகியவற்றிற் குரிய தொடர்களைப் பற்றிய ஒழுங்குபடுத்தப் பெற்ற அறிவின் தொகுதியைக் குறிக்கின்றது. உண்மைகளை மொத்தமாகத் தொகுப்பது மட்டும் அறிவியலாகாது. அவற்றை முறைப்படி தொகுத்து வகைப்படுத்தி, பகுத்தாய்ந்து கூறுவதே அறிவியலாம். இவ்விளக்கத்தின்படி இதழியலும் ஓர் அறிவியலே. ஓர் இதழ் உருவாகும் நிலையைத் தொடக்க முதல் இறுதிவரை அறிவியல் நோக்கில் முறைப்படுத்தியுள்ளனர். செய்திகளைச் சேகரிப்பது, எழுதுவது, செப்பனிடுவது, அச்சிடுவது, வெளியிடுவது ஆகிய அனைத்தும் ஆய்வு முறையிலேயே அமைகின்றது. ஆதலால்தான் இன்று இதழியல் ஒரு சமுதாய அறிவியல்களில் (*Social Science*) ஒன்றாகச் சிறப்பிடம் பெற்று விளங்குகின்றது.

இதழ்கள் படிப்படியாக வளர்ந்து, இப்பொழுது எல்லாத் துறைகளையும் ஊடுருவி, மிகவும் ஆற்றலுடைய சமுதாய சக்தியாக உருவெடுத்திருக்கின்றன. பத்திரிகையைப் புறக்கணித்து விட்டு இன்று யாரும் அமைதியாக வாழ முடியாது.

ஜனநாயக நாட்டில் நாடாளுமன்றம் (*Parliament*) நிர்வாகத் துறை (*Executive*), நீதித்துறை (*Judiciary*) ஆகிய மூன்றும் அரசின் துறைகளோடு பத்திரிகைத் துறையை (*Press*) நான்காவது துறையாக அமைத்துள்ளன. இந்த நான்காம்துறை சுதந்திரமாக, நேர்மையாக, பொறுப்போடு செயல்படுகின்றவரை மக்களின் நலம் பாதுகாக்கப்படுமென்று கருதலாம்.

**தகவல் தொடர்பியல் (Mass Communication)**

மக்கள் தகவல் தொடர்பியல் இதழ்கள் தலையாய இடத்தைப் பெறுகின்றன. மக்கள் தகவல் தொடர்பு உண்மையான நடவடிக்கைகள், கொள்கைகள், திட்டங்கள் ஆகியவற்றினை ஒட்டியும் நாடு தனக்கு முன் வைத்திருக்கும் தேவைகள், கொள்கைகள் ஆகியவற்றினைச் சார்ந்தும் செயல் படுகின்றது. இது ஓர் உயிரோட்டமான இயல். எடுத்துக் காட்டாகப் பத்திரிகைத்துறை மக்களுக்குத் தெரிவிப்பதையோ, கற்பிப்பதையோ மட்டும் செய்யவில்லை. பொதுப்பணி

களின் கண்காணிப்பாளராகவும், மக்களின் உரிமைகளின் பொதுக்காவலராகவும் செயல்படுகின்றது.

வாளைவிடப் பேனா முனை வலுவுடையது என்பதை உலகெங்கும் இதழியலார்கள் உணர்த்தியுள்ளனர். நமது நாட்டின் சுதந்திரத்திற்காக இதழ்கள் செய்தபணி மறக்க இயலாது. அன்றைய இதழியலாளர்கள் உயர்ந்த நோக்கோடும், தியாக உணர்வோடும் நடத்திய இதழ்கள் நாட்டு மக்களைத் தட்டி எழுப்பின.

இதழ்கள் சிறந்த குறிக்கோளோடு செயல்பட வேண்டும். மக்களுக்குத் தொண்டு செய்யும் நோக்கமின்றி, வெறும் ஆதாய நோக்கத்தோடு செயல்படும் இதழ்களால் சமுதாயத்திற்கு கிடைக்கும் பயன்களைவிடக் கேடுகளே மிகுதியாக இருக்கும்.

**இதழ்களின் பணிகள்**

இதழ்களின் பணிகளை மரபு வழியில் அவை செய்கின்ற பொதுப்பணிகள் என்றும், மாறிவரும் சமுதாயத்தில் மேற் கொள்கின்ற வளர்ந்து வரும் பணிகள் என்றும் பகுத்துக் கூறலாம்.

பொதுபணிகளாக அறிவித்தல் (*To Inform*), அறிவுறுத்தல் (*To Instruct*), மகிழ்வித்தல் (*To entertain*), வாணிபம் செய்தல் (*To Merchandise*) ஆகிய நான்கு பணிகளை இதழ்கள் திறம்படச் செய்ய வேண்டும். இவற்றை இதழ்களின் பொதுப்பணிகள் என்று குறிப்பிடலாம்.

இதழ்களின் தலையாயபணி மக்களிடம் செய்திகளைப் பரப்புவதாகும். மக்களுக்கு எல்லா விபரங்களையும் உடனுக் குடன், உண்மையாக விருப்பு வெறுப்புமின்றிச் சிதைக்காமல் முழுமையாக வழங்க வேண்டும். நாட்டில் சமுதாயம், சமயம், அரசியல், பொருளாதாரம், கலை, பண்பாடு ஆகியவை தொடர்பாக நடைபெறும் எல்லா நடவடிக்கைகளும் விளக்கிக் கூறுகின்ற பொறுப்பான பணியை இதழ்கள் செய்கின்றன. மக்கள் அறியவிரும்புகின்ற விலைவாசிகள், விளையாட்டு முடிவுகள், நடைபெறப்போகும் நிகழ்ச்சிகள் ஆகிய அனைத்தையும் உள்ளடக்கியதாக இதழ்கள் திகழ வேண்டும்.

**நாளிதழ்கள்**

ஒவ்வொரு நாளும் வெளிவருவதைச் செய்தித்தாள்கள் (*News Papers*) தினசரிகள் (*Dailies*) என்று கூறலாம். இவற்றை

காலையில் வெளிவந்தால் காலை இதழ்கள் எனவும், மாலையில் வெளிவந்தால் மாலை இதழ்கள் எனவும் குறிப்பிடுகின்றோம். வாரம் இருமுறை, மும்முறை வெளிவரும் இதழ்களையும், உலக நாடுகளில் கல்வி, சமுதாயம், பண்பாட்டு அமைப்பு (UNESCO) நாளிதழாகக் கருதுகின்றது.

தமிழ் நாளிதழ்களில் காலை இதழுக்குத் தினத்தந்தி, தினமணி, தினகரன், தினமலர் போன்றவைகளையும் மாலை வெளிவரும் இதழ்களுக்கு மாலை முரசு, மாலை மலர், மாலைச்சுடர் ஆகியவற்றையும் எடுத்துக்காட்டுகளாகக் குறிப்பிடலாம்.

அறிவியல் தொழில்நுட்பக் கண்டுபிடிப்புகளின் தாக்கம் தாய்மொழியையும், சமுதாயத்தையும் பெரும் பாதிப்பிற்கு உள்ளாக்கியிருக்கின்றன என்பதை அறியலாம். இவ்வகையில் அறிவியல் தொழில்நுட்பத் துறைகளுக்குத் தன்னை முழுமையும் பொதுப்பணியில் அர்ப்பணித்துக்கொண்ட தமிழறிஞர்கள் ஏராளம். தமிழ்மொழியானது இன்றையக் காலக்கட்டத்தில் பயன்பாட்டு மொழியாக வளர்ந்திருக்கின்றது. அதற்கு இதழ் களின் பங்கு பேரளவில் அமைந்துள்ளது. தமிழ் இதழியல் வரலாற்றில் பாமர மக்களும் படித்தறியும் வகையில் எழுத்தறிவை யூட்டி, அரசியல் பொருளாதார அறிவியல் சிந்தனைகளை மக்களுக்குப் புகட்டிட்ட பெருமை அமரர் சி.பா. ஆத்தனாரைச் சாரும். அவர் ஆரம்பித்த பத்திரிகையான தினத்தந்தி நாளிதழின் பணி தமிழ் வளர்ச்சிக்குப் பெரிதும் பயனளித்துள்ளது.

இவ்வகையில் தமிழ் வளர்ச்சியில் தினத்தந்தியின் பங்கு எவ்வளவு முக்கியத்துவம் கொண்டுள்ளது என்பதே இக் கட்டுரையின் நோக்கமாக அமைகின்றது.

தமிழ் நாளிதழ்களில் தனக்கோர் வாசகர் வட்டங்களைக் கொண்ட நாளிதழ் தினத்தந்தியாகும். இந்நாளிதழ் தமிழ் நாளிதழ்களில் முதல் இடத்தைப் பெற்றுத் திகழ்கின்றது. இதற்குக் காரணம் கிராம மக்களையும் வீடுதேடிச் சென்றடைந்து எளிய தமிழ்சொற்களையும், எளிய நடைமுறைகளையும் புரிந்துகொள்ளும் வகையில் தூய தமிழில் வெளிவரும் சமுதாய இதழாகும். பல்வேறுபட்ட இதழ்கள் இருந்தாலும் அவற்றின் கருத்தாழமும், குறிக்கோளும் ஒன்றாகவே இருக்கின்றன.

தெய்வம், மதம், கலை, காதல், பெண்ணுரிமை, மதுவிலக்கு, சமூகச் சீர்திருத்தம் ஆகிய பல்வேறு விபரங்களைப்பற்றி உலகச்

சான்றோர்கள் கூறிய கருத்துகளை எடுத்துக்காட்டித் தம்முடைய கருத்துகளையும் வெளியிட்டிருக்கிறார்கள்.

தினத்தந்தியின் தலையங்கமே, மக்களையும் வாசகர் களையும் கவரும் வண்ணம் அமைந்துள்ளது. உட்தலைப்பு களின் மூலம் தமிழுக்குத் தொண்டு செய்யும் மனப்போக்குடன் செயல்படும் திறம் குறிப்பிடத்தக்கதாக அமைகின்றது. மக்கள் வாழ்க்கையில் ஒன்றிணைந்து சமூக, பொருளாதாரச் சிந்தனையோடு பல்வேறுபட்ட தலைப்புகளில் வெளிவருகின்றது. வரலாற்றுச் சுவடுகள் ஆன்மீகச் சிந்தனை, மணப்பந்தல், வர்த்தக விளம்பரம், வணிகப்பகுதி தெரிந்து கொள்ளுங்கள். தினம் ஒரு தகவல், இன்று நாள் எப்படி, தினப்பலன், கல்வி, வேலைவாய்ப்புகள், 10-ம் வகுப்பு, 12-ம் வகுப்பு அரசுத் தேர்வுகளுக்குப் பதிலுடன் கூடிய வினாக்கள், வாரந்தோறும், வெள்ளி, சனி, ஞாயிறு போன்ற தினங்களில் இலவச இணைப்பாக வெள்ளி மலர், இளைஞர் மலர், குடும்ப மலர் போன்றவைகளும், வருடப் பிறப்பு, தமிழ்மாதம் போன்றவைகளில் 12 ராசிகளுடன் கூடிய ஆன்மீக மலர், தொல்பொருள் ஆராய்ச்சிக்குரிய பல்வேறுபட்ட கோயில் களின் வரலாறு கட்டடக்கலை போன்ற அரிய செய்திகளைத் தமிழ் வளர்ச்சியின் பங்காகத் தினத்தந்தி வெளியிடுகின்றது.

**ஆன்மீகச் சிந்தனை**

இந்திய மக்கள் வேற்றுமையில் ஒற்றுமை காண்பார்கள். இந்தியாவில் பல்வேறுபட்ட மதத்தினர் இருந்தாலும் மதம், இனம், சமுதாயம் போன்ற எல்லைகளைக் கடந்து வாழும் நன்னெறியைப் பெற்றவர்கள் அதனால்தான் ஆன்மீகச் சிந்தனையாகத் திருக்குறள், திருவாசகம், தேவாரம், திருவாய்மொழி போன்ற இந்துமத ஆன்மீகச் சிந்தனைகளையும், கிருத்தவ நூலான புதிய ஏற்பாடு, பழைய ஏற்பாடு (பைபிள்) போன்ற வற்றில் உள்ள ஆன்மீக சிந்தனைகளையும், முஸ்லீம் மத நூலான திருக்குர்ஆன் போன்ற ஆன்மீக சிந்தனைக் கருத்து களையும் பொதுநோக்குடன் எல்லா மதத்தினரும் பின்பற்றும் வகையில் வெளிப்படுகின்றது. ஆன்மீக வள்ளலான வள்ளலார் அவர்கள், உலகில் மிக உயர்ந்த பிறப்பாகிய மனிதப் பிறவியைப் பெற்றுக்கொண்ட நாம் அனைவரும், அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நால்வகைப் பொருள்களின் அனுபவங்களையும் காலமுள்ள போதே அறிந்து அனுபவித்தல் வேண்டும் என் மக்களின் உறுதிப் பொருளை எடுத்துக்கூறும் வகையில் தினத்தந்தி பயனுள்ள இதழாக அமைந்துள்ளது.

வரலாற்றுச்சுவடுகள் மூலம் விடுதலைக்குப் பாடுபட்ட சுதந்திரப் போராட்ட வீரர்களை நினைவு கூரும் வகையிலும், அவர்களுக்குச் சிறப்புச் செய்யும் நோக்குடனும் தினத்தந்தி வெளிப்படுத்தி வருகின்றது.

**கல்வி, வேலைவாய்ப்புச் செய்திகள்**

மாணவர்கள் என்ன படிக்கலாம், எந்த வேலைக்குச் செல்லலாம் எதில் பயன் அடையலாம் என்ற இலக்கைக் குறிப்பிடும் நோக்கிலும், கணினி, மென்பொருள் போன்றவற்றின் தகவல்களையும் *I.A.S., I.P.S.* போன்ற தேர்வு களுக்குப் பொதுவினா, பதில்கள் வெளியிடுவதும், 10, +2 பொதுத்தேர்வு கேள்வியுடன் கூடிய பதில்களை மாணவர்களுக்கு வழங்கியும், சமுதாயக் கல்வி, அயல்நாட்டில் உள்ள வேலைவாய்ப்புகள் போன்றவற்றை வாரம் திங்கள் தோறும் வெளியிட்டுப் பயனடையச் செய்கிறது. தினத்தந்தி நாளிதழ் சிறந்த தமிழ் அறிஞர்களுக்குச் சிறப்புச் செய்யும் விதமாகப் பணமுடிப்பு வழங்கியும், மாநில, மாவட்ட அளவில் தமிழ் அரசு பொதுத் தேர்வில் வெற்றிபெற்ற மாணவர்களுக்குச் சிறப்புச் செய்கிறது.

**இன்று நாள் எப்படி?**

நல்ல நேரம், இராகுகாலம், எமகண்டம், குளிகை, வாரசூலை, சூரிய உதயம், அதிர்ஷ்ட எண்கள் போன்றவற்றையும், தினப்பலனில் 12 ராசிகளுக்கு உள்ள நன்மை, தீமைகளைத் தினத்தந்தி குறிப்பிடுகின்றது. இலவச இணைப்பாகக் குரு பெயர்ச்சிப் பலன்கள் 12 ராசிகளுக்கு உள்ள பலன்கள், தமிழ்மாத ஜோதிடத்தில் கிரகங்கள் ராசியில் தாங்கும் காலங்கள் மாதம் முழுவதும் மகிழ்ச்சிதரும் தெய்வ வழிபாடு, ஜாதகம் உங்களுக்குச் சாதகமா? பொருத்தம் பார்க்காமலே திருமணம் செய்ய உகந்த நட்சத்திரங்கள், வளம் தரும் வாஸ்து, வெற்றிக்கு வழிகாட்டும் வினோத எண்கள், ஓரை அறிந்து நடத்தல் இலாபம், தோஷம் பல்லி விழும் பலன்கள், ஆலய தரிசன விதிமுறை, விரதங்கள் பலவகை, தலையெழுத்தை மாற்றுவோம், குருவை வழிப்படுவோம், குதூகுலத்தை நாம் பெறுவோம் என்று ஜோதிடம் சகுனம் பார்க்கும் மக்களுக்குப் பயனுள்ளதைத் தினத்தந்தி வழங்கி வருகின்றது.

**சிறுவர் மலர், தங்க மலர், குடும்ப மலர்**

இவற்றில் உங்களுக்குத் தெரியுமா? அறிவுப்புதிர், விடுகதை, அறிஞர் வாழ்வில் சுவை, சிறுகதைகள், விளக்கப்

படத்துடன் சிறுகதைகள், அறிவியல் பெயர்கள், கண்டுபிடிப்புகள் கதை நேரம், கவிதை, அரும்புகளின் மடல்கள், ஓவியங்கள், வார்த்தை விளையாட்டில் தமிழ்க் கலைச்சொற்களைக் கண்டுப் பிடித்தல் போன்ற பயனுள்ளவற்றையும், புதுக்கவிதை சிறுகவிதை, தெரிந்து கொள்ளுங்கள் வீட்டுக்குள்ளே பியூட்டி பார்லர், அழகுக் குறிப்பு, சமையல்கலை, கோவில்கள் வரலாறு அந்தரங்கத்தில் ஆண், பெண் இருவருக்கும் உடல் கூறுகள் பற்றிய மருத்துவ ஆலோசனைகள் போன்றவற்றைக் குறிப்பிடும் வகையிலும் தினத்தந்தி பயனளிக்கின்றது.

**வணிகப்பகுதி (The Economic Times)**

இவற்றில் ஒவ்வொரு நிறுவனத்தின் பங்குக் குறியீட்டு எண், அன்னிய செலவாணி, தங்கம், வெள்ளி மார்க்கெட் நிலவரம், பணவீக்கம், பங்குகளின் நிகரலாபம் புதிய தொழில் முறை சாதனங்களின் விலைகள் போன்றவற்றை மக்கள் அறியும் வகையில் பயனுள்ளதை வெளியிடுகின்றது.

மனித சமுதாயம் முன்னேற்றமடையவும், உலக நிகழ்வு களை உடனுக்குடன் தெரிந்து கொள்ளவும், மறைந்துபோன செய்திகளையும், பல அரிய செய்திகளையும் வெளிப்படுத்துவதில் நாளிதழின் பங்கு இன்றியமையாததாக அமைந்துள்ளது. தினத்தந்தி போன்ற நாளிதழ்கள் தமிழ் வளர்ச்சிக்குப் பாலமாக அமைந்துள்ளன என்பதை யாரும் மறுக்க முடியாது.

தினத்தந்தி தமிழுக்குச் செய்த தொண்டு எண்ணிலடங்காது. இவ்விதழ் இன்று மக்களிடையே தமிழ் நாளிதழ்களில் முதன்மையான இடத்தைப் பெற்றுத் திகழ்கின்றது என்றால் அதன் பெருமை தமிழர் தந்தை சி.பா. ஆதித்தனாரையே சாரும்.

**துணை நூல்கள்**


1. டாக்டர் மா.பா. குருசாமி, இதழியல்கலை
2. டாக்டர் சி. சக்திவேல, இதழியல்
3. அ.மா.சாமி. தமிழ் இதழ்கள் தோற்றம் - வளர்ச்சி
4. நீதிபதி ச. மோகன், சிந்தனை மலர்கள்
5. நவீன் குமார், அறிவூட்டும் அறிவியல் செய்திகள்
6. இராஜேஸ்வரி, இரவீந்திரன், பள்ளி மாணவர்களுக்கு ஆரம்ப விஞ்ஞானம்
7. டி.எம்.எஸ் - உலக விஞ்ஞானிகள்

# தினத்தந்தியின் 'முத்துச்சரம்' - நோக்கும் அமைப்பும்

முனைவர் இரா. சுதமதி

மக்களைச் செம்மைப்படுத்துவன இலக்கியங்கள். இலக்கியங் களின் பணியை இன்று இதழ்கள் செய்து வருகின்றன. பாமர மக்களிடையேயும் படிக்கும் ஆர்வத்தைத் தூண்டி விழிப்புணர்வை ஏற்படுத்தும் நாள், வார, மாத இதழ்கள் இன்று ஏராளமாய் வெளிவந்த வண்ணம் உள்ளன. அவ்வகையில் இப்பணியைத் திறம்படச் செய்து வரும் இதழாகத் தினத்தந்தி நாளிதழைக் குறிப்பிடலாம். இந்நாளிதழின் இலவச இணைப்புகளுள் ஒன்றான முத்துச்சரம் பகுதியின் நோக்கமும் அமைப்பும் குறித்து இக்கட்டுரை ஆராய முற்படுகிறது.

### தினத்தந்தி - முத்துச்சரம்

படித்தோருக்கு மட்டுமே செய்திகளைச் சுமந்து பல இதழ்கள் வெளிவந்த காலக்கட்டத்தில் பாமர மக்களையும் கருத்தில் கொண்டு வெளிவந்த முதல் நாளிதழ் தினத்தந்தி. பத்திரிகை உலகில் தினத்தந்தி நாளிதழின் பணி மகத்தானது. இந்நாளிதழ் பட்டிதொட்டிகளிலும் நுழைந்து தன் செய்தி களைச் சுடச்சுடத் தருவதோடு பல்வேறு இலவச இணைப்பு களையும் வழங்கி மக்களின் அறியாமை இருளைப் போக்கி வருகிறது. இந்நாளிதழின் இலவச இணைப்புகளுள் ஒன்று முத்துச்சரம். இவ்விணைப்பு சனிக்கிழமைதோறும் தினத்தந்தி நாளிதழுடன் இணைந்து வெளியாகிறது. சுருக்கம் கருதி 2.4.2005 தேதியன்று வெளியான முத்துச்சரம் இதழ் மட்டும் இங்கு ஆய்வுக்கு உட்படுத்தப்படுகிறது.

### அமைப்பு

முத்துச்சரம் இலவச இணைப்பு தினத்தந்தி நாளிதழின் அரைப்பக்க அளவினைக் கொண்டது. எட்டுப் பக்கங்களை

---

தமிழ்த்துறை, கோவிந்தம்மாள் ஆதித்தனார் மகளிர் கல்லூரி
திருச்செந்தூர் - 628 215

உடையது. இவ்விணைப்பு பெரும்பாலும் கீழ்க்காணும் கட்டமைப்புடன் காணப்படுகிறது.

| | |
|---|---|
| முதல் பக்கம் | - சுற்றுலா அல்லது பிரபலங்களின் பேட்டி |
| இரண்டாம் பக்கம் | - விளையாட்டு விமர்சனம் அல்லது அரசியல் |
| மூன்றாம் பக்கம் | - ஆன்மீகம் அல்லது மருத்துவம் |
| நான்காம், ஐந்தாம் பக்கங்கள் | - டெலிவிஷன் விருந்து |
| ஆறாம் பக்கம் | - மருத்துவம் அல்லது ஆன்மீகம் |
| ஏழாம் பக்கம் | - அரசியல் |
| எட்டாம் பக்கம் | - விளையாட்டு வீரர்களின் வாழ்க்கைச் சம்பவங்கள் |

ஊடகங்களின் மூலம் அனைத்து மக்களையும் கவர்ந்த விளையாட்டுச் செய்திகள், தொலைக்காட்சித் தொடர்கள் மற்றும் அரசியல், ஆன்மீகம், மருத்துவம், உலகச் செய்திகள் ஆகியவற்றைச் சுவைபட வழங்கும் ஒரு பல்சுவைக் களஞ்சியமாக முத்துச்சரம் இணைப்பு வெளிவருகிறது.

**'போவோம் சுற்றுலா'**

2.4.2005 இதழில் திண்டுக்கல் மாவட்டத்தின் சுற்றுலாத் தலங்களும் படங்களும் வரலாற்றுக் குறிப்புகளுடன் காணப் படுகின்றன.

வாழ்க்கையின் பரபரப்பான சூழலிலிருந்து விடுபடச் சுற்றுலா செல்வதிலும் சுற்றுலா குறித்த செய்திகளை அறிந்து கொள்வதிலும் மக்கள் ஆர்வம் காட்டுவது இயல்பு. மக்களின் சுற்றுலா ஆர்வத்தைப் பூர்த்தி செய்யும் வகையில் 'போவோம் சுற்றுலா' என்ற தலைப்புடன் வாரந்தோறும் ஒவ்வொரு மாவட்டத்தைத் தேர்ந்தெடுத்து, அங்குள்ள சுற்றுலாத் தலங்கள் பற்றிய செய்திகளைப் படங்களுடன் முத்துச்சரம் இணைப்பு வெளியிட்டு வருகிறது.

பள்ளி, கல்லூரி மாணவர்கள் தாம் செல்லும் சுற்றுலா பற்றிய வரலாற்றுச் செய்திகளை அறிந்து கொள்ளவும் சுற்றுலா செல்லவும் இப்பகுதி துணை புரிகிறது. முதன்முறையாக இவ்விடங்களுக்குச் செல்ல நினைப்போருக்கு முக்கிய

இடங்களைச் சுட்டிக் காட்டும் ஒரு வழிகாட்டியாகவும் இப்பகுதி காணப்படுகிறது எனலாம்.

**அரசியல்**

இதழின் இரண்டாம் பக்கத்தில் இந்திய அரசியல், பொருளாதாரம் பற்றிய குறிப்புகளும் கட்டுரையும் இடம் பெற்றுள்ளன. திரிணாமுல் காங்கிரஸ் தலைவி மம்தா பானர்ஜி, ஐக்கிய ஜனதா தளம் கட்சித் தலைவர் ஜார்ஜ் பெர்னாண்டஸ் ஆகியோரின் அரசியல் வாழ்க்கை பற்றிய குறிப்புகளும் அதே பக்கத்தில் இந்தியாவில் ஆண்-பெண் விகிதாச்சார நிலை குறித்து 'கிடைக்கல, கிடைக்க பொண்ணு ஒண்ணு கிடைக்கல...' என்ற கட்டுரையும் இடம் பெற்றுள்ளன.

இச்செய்திகள் இந்திய அரசியல், இந்திய நடப்பு நிலை குறித்த அறிவை மக்களிடையே கொண்டு சேர்க்கின்றன எனலாம்.

**ஆன்மீகம்**

முத்துச்சரம் இதழின் மூன்றாம் பக்கத்தில் ஆன்மீகச் செய்திகள் இடம் பெற்றுள்ளன. 'உள்ளக் கடலில் ஆழ்ந்து மூழ்கு', 'உலகப்பற்று குறைந்தால்..', 'பக்தி நெறி' ஆகிய தலைப்பு களில் சிறு கட்டுரைகளும் 'தெரிந்த புராணம் தெரியாத கதை' என்னும் தலைப்பில் புராணக்கதை ஒன்றும் காணப்படுகின்றன.

ஆன்மீகத்தை வளரச் செய்யும் பணியில் ஈடுபட்டுள்ள பல்வேறு இதழ்கள் குறிப்பிட்ட இனத்தாரையும் குறிப்பிட்ட சமயத்தாரையும் மட்டுமே நோக்கமாகக் கொண்டு வெளி வருபவை. ஆனால் ஆன்மீகத்தை அறிந்து கொள்வதற்கு இனமும் மதமும் தேவையில்லை என்ற நோக்கோடு, படிப்போர் அனைவரும் ஏற்றுக்கொள்ளும் வண்ணம் ஆன்மீகக் கருத்துகளை எளிமைப்படுத்தி முத்துச்சரம் இணைப்பு வெளியிட்டு வருகிறது எனலாம்.

**டெலிவிஷன் விருந்து**

முத்துச்சரம் இணைப்பின் நடுப்பகுதி அதாவது நான்கு, ஐந்தாம் பக்கங்கள் முழுமையும் 'டெலிவிஷன் விருந்து' என்னும் தலைப்பில் தொலைக்காட்சிச் செய்திகளையும் படங் களையும் உள்ளடக்கிக் காணப்படுகிறது.

தொலைக்காட்சியில் வெளியாகிக் கொண்டிருக்கும் தொடர்கள், வெளிவர இருக்கும் தொடர்கள் பற்றிய

விமர்சனங்களும் சின்னத்திரை நடிகர், நடிகையர் பற்றிய குறிப்புகளும் தொலைக்காட்சி ரசிகர் கடிதங்களும் இப்பகுதியில் சுவையுடன் தரப்பட்டுள்ளன.

இன்று மக்களிடையே, குறிப்பாகப் பெண்களிடையே மிகுந்த வரவேற்பைப் பெற்றிருப்பவை தொலைக்காட்சித் தொடர்கள். எனவே அத்தொடர்கள் குறித்தோ அவற்றில் நடிப்போர் பற்றியோ அறிந்து கொள்வதில் மக்கள் அதிக ஆர்வம் காட்டுகின்றனர். பெண்களைக் கவரும் வகையில் தொலைக்காட்சி தொடர்பான செய்திகளைத் தொகுத்து முத்துச்சரம் இணைப்பு டெலிவிஷன் விருந்தை வழங்கி வருகிறது எனலாம்.

**மருத்துவம்**

2.4.05 முத்துச்சரம் இணைப்பின் ஆறாம் பக்கத்தில் மருத்துவப் பகுதி இடம் பெற்றுள்ளது.

1. ரத்தக்குறை அழுத்தத்தால் ஏற்படும் தலைவலி
2. நரம்புத் தளர்ச்சியிலிருந்து விடுபட
3. ஆஸ்துமா யாருக்கு வரும்?
4. சிறுநீரகக்கல் ஏற்படாமல் தடுக்க
5. வெயிற்கால வேனற்கட்டியைப் போக்க

ஆகிய ஐந்து குறிப்புகள் படங்களுடன் கொடுக்கப்பட்டுள்ளன.

பரபரப்பான சூழலில் எச்சரிக்கை அற்ற வாழ்க்கை முறையில் இத்தகைய நோய்கள் மக்களைப் பாதிக்கின்றன. அன்றாட நோய்களுக்கு மருத்துவம் செய்ய இயலாத, செய்ய விரும்பாத மக்கள் தம் நோய்க்கான காரணத்தைத் தாமே கண்டறிந்து கொள்வதோடு அவற்றிலிருந்து விடுபடவும் இம்மருத்துவப் பகுதி உதவுகிறது எனலாம்.

**விளையாட்டு விமர்சனம்**

2.4.2005 முத்துச்சரம் இணைப்பின் ஏழாம் பக்கத்தில் 'டெஸ்ட் தொடரை வெல்லாமல் போனதே நம் அணி' என்ற தலைப்பில் கிரிக்கெட் டெஸ்ட் தொடரில் விளையாடிய இந்திய அணி குறித்த செய்தி ஒரு கட்டுரையாகக் கொடுக்கப் பட்டுள்ளது. எட்டாம் பக்கத்தில் விளையாட்டு வீரர்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. கிரிக்கெட் வீரர் ஜாகீர்கானின் காதலும், 'விளையாட வயது தடை

யில்லை' என்ற தலைப்பில் இத்தாலி கால்பந்து வீரரின் ஆட்டச் சிறப்பும், சதுரங்க வீரர் காஸ்பரோவின் அரசியல் பிரவேசமும் ஒலிம்பிக்கில் பதக்கம் வென்ற ரத்தோரின் பேட்டியும் வண்ணப்படங்களுடன் தரப்பட்டுள்ளன.

தகவல் தொடர்பு சாதனங்களின் வரவுக்குப் பின் உலக விளையாட்டுகள் இன்று கிராமங்களிலும் நுழைந்துவிட்டன. ஆகவே, விளையாட்டுகளைப் பற்றியும் விளையாட்டு வீரர் களைப் பற்றியும் புதிய புதிய செய்திகளை மக்களுக்குத் தருவதில் தினத்தந்தியின் முத்துச்சரம் இணைப்பு பெரும் பங்கு வகிக்கிறது எனலாம்.

**முடிவுரை**

முத்துச்சரம் இணைப்பின் அமைப்பு தினத்தந்தி நாளிதழின் நோக்கத்தை உள்ளடக்கித் திகழ்வதைக் காண முடிகிறது. கோக்கப்பட்ட முத்துச்சரத்தைப் போலச் செய்திகள் வரையறை செய்யப்பட்டு எளிமையாகத் தரப்பட்டுள்ளன. மக்கள், அரக்கப்பரக்க ஓடும் அன்றாட அலுவல்களிலிருந்து விடுபட்டு ஆற அமரப் படிக்கவும் வாரச் செய்திகளை அலசி ஆராயவும் அறிந்து கொள்ளவும் வசதியாக வார இறுதிநாளில் இவ்விணைப்பு வெளி வருகிறது எனலாம். எனவே, தினத்தந்தி நாளிதழின் வெற்றிக்கான காரணங்களில் ஒன்றாக முத்துச்சரம் இணைப்பும் திகழ்வதைக் காண முடிகிறது.

# தமிழ்ப் படைப்பிலக்கிய வளர்ச்சியில் 'குடும்பமலர்' இதழின் பங்கு

**சி. அருள் மைக்கேல் செல்வி**

தமிழ்மொழி உலகில் உள்ள உயர்தனிச் செம்மொழி களுள் ஒன்று. கருத்தை உணர்த்தும் கருவி, மொழி. மொழி வளர்ச்சிக்கு வளம் சேர்க்கும் துறைகளுள் இதழியல் துறையும் ஒன்றாகும். தொடர்புச் சாதனங்களில் மிகவும் மூத்தவையாகத் திகழும் அச்சுவழிச் சாதனங்கள் உலக இருளகற்றும் ஒளி விளக்காகத் திகழ்ந்து, உரைநடை வளர்ச்சிக்கு உறுதுணையாக இருந்து, படைப்பிலக்கிய வளர்ச்சிக்கு அடிப்படையாக அமைந்து, மொழிவளர்ச்சிக்குத் துணை செய்கின்றன. அவ்வகையில் தமிழ்ப் படைப்பிலக்கிய வளர்ச்சியில் குடும்பமலர் இதழின் பங்கு பற்றி ஆய்வது இவ்வாய்வின் நோக்கம்.

### ஆய்வுக் களம்

*தினத்தந்தி* நாளிதழின் இலவச இணைப்பாக வாரந்தோறும் ஞாயிற்றுக்கிழமை அன்று வெளிவருகின்ற 'குடும்பமலர்' இதழ் இவ்வாய்விற்குரிய களமாக அமைகின்றது. இவ்விதழில் இடம் பெற்றுள்ள செய்திகள் உள்ளடக்கப் பகுப்பாய்வு முறையில் ஆய்வு செய்யப்படுகின்றன. 2005, பிப்ரவரி, மார்ச் ஆகிய இரு மாதங்களின் இலவச இணைப்புகள் மட்டுமே ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

### தினத்தந்தி நாளிதழ்

நாள்தோறும் வெளிவந்து, செய்திகளை உடனுக்குடன் வழங்கும் நாளிதழ்களுள் ஒன்று *தினத்தந்தி*. 1942-ஆம் ஆண்டு தமிழர் தந்தை சி.பா. ஆதித்தனாரால் தொடங்கப்பட்ட இவ்விதழ், 'வெல்க தமிழ்' என்பதைத் தன்னுடைய முத்திரை யாகக் கொண்டுள்ளது. பாமர மக்களும் படிப்பதற்கு ஏற்ற வகையில் செய்திகளை எளிமைப்படுத்தித் தருவதுடன் செய்தி

---

விரிவுரையாளர், தமிழ்த்துறை, எஸ்.எஃப்.ஆர். மகளிர் கல்லூரி, சிவகாசி - 626 123.

களை முந்தித் தருவதிலும் **தினத்தந்தி** முந்தி நிற்கிறது. நாளிதழில் தொடர் கதைகளை அறிமுகப்படுத்திய பெருமையையும் முழுக்க விளம்பரங்களை வெளியிட்ட புகழையும் பெற்றுள்ள இந் நாளிதழ், பெரியவர் முதல் சிறியவர் வரை அனைவரும் விரும்பிப் படிக்கும் வகையில் சிறுவர் தங்கமலர், இளைஞர் மலர், குடும்ப மலர் போன்ற இலவச இணைப்புகளை வாரந் தோறும் வெள்ளி, சனி, ஞாயிறு ஆகிய கிழமைகளில் வெளியிடுகின்றது.

### குடும்பமலர் இதழ்

முன் அட்டை முதல் பின் அட்டை வரை பல வண்ணச் செய்திகளைத் தாங்கி வரும் இவ்விதழானது அனைவரும் பாராட்டும் வகையில் சாதனை புரிந்தவர்களை, அவர்களின் நிழல் படங்களுடன் (பெண்களுக்கே முக்கியத்துவம்) முன் பக்க அட்டையில் வெளியிடுகிறது. புதிதாக அரங்கேறும் புதிய திரைப்படச் செய்திகளை வண்ணப்படங்களுடன் பின் பக்க அட்டையில் வெளியிடுகின்றது. நடுப்பக்கத்தில் 'சினி சிப்ஸ்' என்ற பெயரில் திரை உலகச் செய்திகளை வெளியிடு கின்றது. மேலும், சிறுகதைகள், தொடர் கதைகள்,. புதுக் கவிதைகள், கட்டுரைகள், கடிதங்கள், பொது அறிவு வினா விடைகள், நகைச்சுவைத் துணுக்குகள், செய்தித் துணுக்குகள் ஆகியவற்றை உள்ளடக்கமாகக் கொண்டு 24 பக்கங்களுடன் இவ்விதழ் வெளி வருகின்றது.

### கதைகள்

படைப்புச் சக்தியின் முழு ஆற்றலையும் வெளிப்படுத்தக் கூடிய வடிவம் கதை இலக்கியம்; குறிப்பாகச் சிறுகதை இலக்கியம் ஆகும். சிறுகதை, கவிதை போன்ற படைப்பிலக்கியங்களே இதழ்களின் பொருளடக்கமாக அமைகின்றன. எழுத்தாளர்கள் பலரை உருவாக்கும் வகையில், பரிசுப் போட்டிகளை நடத்தியும், புதியவர்களின் படைப்புகளை வெளியிட்டும் இதழ்கள் தமிழ்மொழிக்கு வளம் சேர்க்கின்றன.

குடும்பமலர் இதழில் சிறுகதைகளும் (குறைந்தது இரண்டு) தொடர்கதைகளும் இடம்பெறுகின்றன. இக்கதைகள் தனி மனிதச் சிந்தனை, மனிதாபிமானம், சமூக அரசியல் சீர்கேடுகள் போன்றவறறைக் கருவாகக் கொண்டு, நம் மண்வாசனைக்கு ஏற்பப் படைக்கப்படுகின்றன. புதிய எழுத்தாளர்களைத் தமிழ் இலக்கிய உலகிற்கு அறிமுகப்படுத்தி மொழி வளர்ச்சிக்கு உதவும்

இவ்விதழ்ச் சிறுகதைகள், சொற்செட்டு நிறைந்ததாய்க் குறிப்புப் பொருள் உணர வைப்பதாய், நினைக்கும்தோறும் புதுப்புதுப் பொருள்களைத் தரும் அனுபவம் உடையதாய், அனைவராலும் ஆர்வமாகப படிக்கக் கூடியதாய் அமைந்துள்ளன.

புகழ் பெற்ற மற்றும் வளர்ந்து வரும் எழுத்தாளர்களைக் கொண்டு, உணர்வுபூர்வமான, நெஞ்சை நெகிழ வைக்கக் கூடிய, யதார்த்தமான பிரதிபலிப்புகளைத் தாங்கிய தொடர் கதைகளையும் உள்ளடக்கியுள்ள இவ்விதழ் தாய்த் தமிழுக்குத் தனிப் பெரும் தொண்டாற்றுகின்றது. இக்கதைகளில் தமிழ் மொழிக்கே உரிய பழமொழிகள், மரபுத் தொடர்கள், உவமைகள், கற்பனைகள் பயன்படுத்தப்படுவதால் தமிழ் மொழி என்றும் நின்று நிலைத்திருக்கும்.

சான்றாக,

**உவமைகளைக் கையாளுதல்**

''மஞ்சள் பட்டை விரித்தது போல் பூத்து
குலுங்கி நிற்கும் கொன்றை மரம்''

மு.க. பரணி, தென்றல் புயலானது (சி.க.),
குடும்பமலர், ப. 5, 20.02.2005

''தியாகராசன் சொன்னது அருணாவின் இதயத்தில் குண்டு போல் பாய்ந்தது. அவள் கனவுகள் நொடிப் பொழுதில் கல் மேல் விழுந்த கண்ணாடி போல் உடைந்து நொறுங்கியது. வசந்த கால கனவுகள் இலையுதிர் காலமாயின.''

மு.க. பரணி, தென்றல் புயலானது (சி.க.),
குடும்பமலர், ப. 5, 20.02.2005

**அறக் கருத்துகளை வலியுறுத்தல்**

''எப்பவும் யாரையும் கண்களால் பார்க்காதே. மனசால் பாரு. மனசால் மட்டும்தான் போலி எது? நிஜம் எதுன்னு உணர முடியும். வர்ழ்க்கையோட அஸ்திவாரமே நம்பிக்கை தான். அதைத் தொலைச்சிடாதே....''

எஸ். மாயா, தப்புக்கணக்கு (சி.க.)
குடும்பமலர் ப. 16, 20.02.2005

மேலே இடம் பெற்றுள்ளவற்றைக் காணும்போது, சங்கத் தமிழில் உவமைகள் பெற்றிருந்த இடத்தையும், சங்கம் மருவிய காலத் தமிழில் அறக்கருத்துகள் பெற்றிருந்த இடத்தையும்

இன்றைய குடும்பமலர் இதழின் சிறுகதைகள் பெற்றுத் தமிழ் மொழிக்கு வளம் சேர்க்கின்றன.

**கட்டுரைகள்**

ஐரோப்பியர் வரவால் உரைநடை இலக்கியம் வளர்ச்சி பெற்றது என்றாலும், மக்கள் கல்விக்குத் துணை செய்து, மக்கள் எண்ணங்களைப் பிரதிபலித்து, ஜனநாயகக் காவலனாகத் திகழும் இதழ்கள், தமிழ்மொழிப் பெருமைக்கும், இனச் சிறப்பிற்கும், பண்பாட்டிற்கும் முக்கியத்துவம் கொடுக்கும் வகையில், தன்மானமுள்ள தமிழர்களின், தன்னேரில்லாச் சிறப்புக்களைத் தரணியெங்கும் பறைசாற்றும் வகையிலும், உள்ளத்தைப் பண்படுத்தி அறிவு வளர்ச்சிக்குத் துணைபுரியும் வகையிலும் கட்டுரைகளை வெளியிடுகின்றன. குடும்பமலர் இதழ் உரைநடைத் தமிழுக்கு வளம் சேர்க்கும் வகையில், ஆன்மிகக் கட்டுரைகளையும், சிறப்புக் கட்டுரைகளையும், தொடர் கட்டுரைகளையும் வெளியிடுகின்றது.

**ஆன்மிகக் கட்டுரைகள்**

'அறம் பொருள் இன்பம் வீடு அடைதல் நூற் பயன்' என்கிறது நம் தமிழ் இலக்கணம். உணவுக்கு உப்பைப் போல மனித வாழ்க்கைக்குப் பக்தி அவசியம். மத ஒற்றுமை, இன ஒற்றுமை, மொழி ஒற்றுமை ஆகியவற்றை மக்களிடையே மலரச் செய்து சமுதாய நல்லிணக்கத்திற்கு உதவும் வகையில் குடும்பமலர் இதழானது, அந்தந்த விழாக்காலங்களில், சிறப்பு வாய்ந்த கோயில்களின் மூர்த்தி, தலம், தீர்த்தம் பற்றிய தல வரலாறுகளையும் அத்தலத்திற்குச் செல்வதால் ஏற்படக்கூடிய பயன்கள் பற்றிய செய்திகளையும் வண்ணப் படங்களுடன் வெளியிடுகிறது. அன்றைய தல புராணத் தமிழ் பெற்ற இடத்தைக் குடும்பமலர் இதழில் ஆன்மிகக் கட்டுரைகள் பெற்று விட்டன.

சான்று,

''பக்தர்களுக்கு அருள் பாலிக்கும்
புனித லூர்து அன்னை''

மோ. நேவிஸ் விக்டோரியா,
குடும்பமலர், ப. 3, 13.02.2005

**சிறப்புக் கட்டுரைகள்**

தமிழ் உரைநடைக்கு ஏற்றம் தந்து புதிய சொல் உருவாக்கத்திற்குக் காரணமாக அமைபவை சிறப்புக் கட்டுரைகளே.

இவை அறிவியல், பொருளாதாரம், மருத்துவம், உளவியல், இலக்கிய விமர்சனம், இலக்கியச் சந்திப்பு, பயணக் கட்டுரை, பகுத்தறிவுக் கட்டுரை, புதிய துறைக் கட்டுரைகள் போன்ற பொருள்களில் அமைகின்றன.

பல்வேறு துறைகளில் சாதனை புரிந்தவர்களுடன் நேர்முகம் கண்டு அதன் மூலம் கிடைத்த செய்திகளையும் (தமிழக மாணவிக்குச் சிங்கப்பூர் பாராட்டு - ப. 6, 06.03.2005) உயிரினங்களைப் பாதுகாப்பது குறித்து, விழிப்புணர்வை ஏற்படுத்தும் வகையிலும் (பிராணிகளை நேசியுங்கள், ப. 6, 13.02.2005) பல்வேறு துறை சார்ந்ததாகவும் இச்சிறப்புக் கட்டுரைகள் அமைகின்றன. இவை பெரும்பாலும் ஆறாம் பக்கத்தில் இடம்பெற்றுள்ளன. இச்சிறப்புக் கட்டுரையில் இடம்பெறும் செய்திகளை ஒட்டிய படங்களே பெரும்பாலும் முன்பக்க அட்டையில் இடம்பெறுகின்றன.

> ''வெளியுலகில் சிந்தனையில் புதிது புதிதாக
> விளைந்துள்ள எவற்றினுக்கும் பெயர்கள் எல்லாம் கண்டு
> தெளிவுறுத்தும் படங்களொடு சுவடியெல்லாம் செய்து
> செந்தமிழைச் செழுந்தமிழாய்ச் செய்வதுவும் வேண்டும்''

என்ற பாரதிதாசனின் வரிகளுக்கேற்ற வகையில் இச்சிறப்புக் கட்டுரைகள் அமைந்துள்ளன.

**தன்னம்பிக்கைக் கட்டுரைகள்**

மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவரும் வாழ்க்கையில் முன்னேறத் தன்னம்பிக்கை அவசியம். மனிதனை நல்வழிப் படுத்திச் சீரிய வழியில் செம்மையுடன் வாழ வழிகாட்டும் வகையில் தன்னம்பிக்கைத் தொடர்கள் கட்டுரைகளாக இடம் பெறுகின்றன. இவை சமூகத்தில் புகழ்பெற்ற பெரிய மனிதர் களின் அனுபவ உண்மைகளாக அமைந்தவை. இக்கட்டுரை களைப் படிப்பதால் மனிதன் மனத் தெளிவும் தூய்மையும் பெற்று உயரிய நிலையை அடைவதற்கான முயற்சிகளை மேற்கொள்கிறான்.

தற்பொழுது கே.எஸ். இளமதி அவர்கள் எழுதும் 'ஆசையே முதல் வெற்றி' என்ற தன்னம்பிக்கைத் தொடர் இடம்பெறுகின்றது. அன்றைய ஆற்றுப்படை நூல்கள் செய்த நெறிப்படுத்தலை இன்றைய தன்னம்பிக்கைத் தொடரில் இடம்பெறும் கட்டுரைகள் செய்து கொண்டு இருக்கின்றன.

**கவிதைகள்**

இன்றைய உலகில் கவிதைக்கென்று தனி இடம் உண்டு. மரபுக் கவிதை, புதுக்கவிதை, மின்மினிக் கவிதை, ஹைகூ கவிதை என வெளிவரும் கவிதைகள் தமிழுக்கு வளம் சேர்ப்பவையாக உள்ளன.

குடும்ப மலர் இதழானது 'புதுக்கவிதை' என்னும் தலைப்பில் இளம் கவிஞர்களை உருவாக்கும் வகையில் கவிதைகளை வெளியிடுகின்றது. இக்கவிதைகள் சமுதாயத்தில் அன்றாடம் நிகழும் பிரச்சனைகளை மையமாகக் கொண்டவை. இன்றைய சமுதாயத்தில், பெண்களின் திருமணத்திற்குத் தடையாக இருக்கும் வரதட்சணையை மையமாக வைத்தும் கவிதைகள் எழுதப்படுகின்றன.

நல்ல மாப்பிள்ளை
விட மனசில்லை,
இருபத்தைந்து
பவுன் நகை...!
ஒரு லட்சம் பணம்
ஒரு டூ வீலர்
பண்ட பாத்திரம்!
கொடுத்து
வாங்கி விட்டோம்
அக்காவுக்கு...!

எஸ்.டி. பாணி, வியாபாரம் (பு.க)
குடும்பமலர், ப. 23, 13.02.2005

முதிர் கன்னியின் ஏக்கத்தை,
மாப்பிள்ளைதான் வரவில்லை
தூக்கமும் வராதா....
ஏக்கத்தில் முதிர் கன்னி...!

ஆ.ச. மாரியப்பன், தூக்கம் (பு.க.)
குடும்பமலர், ப. 23, 13.02.2005

இவ்வாறாகப் படைக்கப்படும் கவிதைகளுக்கு இடமளித்து இளங்கவிஞர்களை உருவாக்கிக் 'க்விதை மூலம் தமிழ்' வளர உதவுகிறது.

### கடிதங்கள்

வாசகர்களது எண்ணங்களைப் பகிர்ந்து கொள்ளவும், புரிந்து கொள்ளவும், மக்களது குறைகளை அறிந்து கொள்ளவும் மக்களது எண்ணத்தை வெளிபபடுத்தவும் கடிதங்கள் இதழ் களில் இன்றியமையா இடம்பெறுகின்றன. திராவிட நாடு இதழில்தான் கடித இலக்கியம் தோற்றம் பெற்றது. 'தம்பி'க்கு என்ற பெயரில் முரசொலியில் கடித இலக்கியம் இடம் பெற்றது. இதழ்களைத் தொடர்ந்து படித்து வரும் வாசகர்கள் அந்த இதழோடு ஏதாவது ஒரு வகையில் தொடர்பு வைத்துக் கொள்ளவே விரும்புவர். இவ்வாறு தொடர்புகொள்ள விரும்புகின்ற வாசகர்கள் கேள்வி-பதில் பகுதிக்கு எழுதுவது, ஆசிரியருக்குக் கடிதம் பகுதிக்கு எழுதுவது, இதழ்களில் வெளிவந்த சில படைப்புகளுக்கு மறுப்போ ஆதரவோ தெரிவித்து எழுதுவது எனப் பல வகைகளிலும் முயற்சியை மேற்கொள்வர்.

வாசகர் கடிதம்

அந்தரங்கம் இது அந்தரங்கம்

நெஞ்சைத் தொட்டவை

என்ற தலைப்புகளில் குடும்பமலர் இதழில் கடிதங்கள் இடம் பெறுகின்றன.

### வாசகர் கடிதம்

'வாசகர் கடிதம்' பகுதியில் குடும்பமலர் இதழில் வெளிவந்த படைப்புகளைப் பற்றிப் பல வாசகர்கள் எழுதிய கடிதங்கள் இடம்பெற்றுள்ளன. இவ்விதழின் படைப்புகளைப் பாராட்டியே பெரும்பான்மையான கடிதங்கள் எழுதப்படுகின்றன.

''குடும்பமலரில் இடம்பெற்ற தழும்பு,
நிறைகுடம் சிறுகதைகள் இரண்டும் மிகவும் அருமை''

அ. சாலமோன், (வா.க),
குடும்பமலர், ப. 11, 13.02.2005

### அந்தரங்கம் இது அந்தரங்கம்

'அந்தரங்கம் இது அந்தரங்கம்' பகுதியானது, பெண் களுக்கான அறிவுரைகளைக் கூறும் பகுதியாக அமைந்துள்ளது. வாழ்க்கையைச் செம்மையாக்கிக் கொள்ள உதவுகிறது. இன்ப மயமான வாழ்க்கைக்குத் தேவையான ஏற்றமிகு அறிவுரை களைத் தொடர்ந்து வழங்கி வருகின்றது. கணவன் மனைவி

பிரச்சனைகளுக்குத் தீர்வு கூறும் வகையிலும், மாமியார் மருமகள் சண்டையினைப் போக்கிச் சமாதானம் கூறும் வகையிலும், இளம் மாணவியர்களுக்குப் பருவ வயதில் ஏற்படக்கூடிய மாறுபாடுகளையும் பிரச்சனைகளையும் பக்குவமாக எடுத்துக்கூறும் வகையிலும் இப்பகுதி அமைந்துள்ளது.

சான்றாக,

"உள்ளத்தில் நிச்சயித்துக் கொண்டாலும், ஊறிய நிச்சயதார்த்தம் நடந்திருந்தாலும் பொறுத்திருப்பதும் தவிர்த்திருப்பதும் பெண்களின் பாதுகாப்பிற்கு மிக மிக அவசியம்! 'அந்தரங்கம் இது அந்தரங்கம்' தரும் அறிவுரையைப் பெண்கள் அலட்சியப்படுத்தினால் ஆபத்து அதிகம்".

செ. சத்தியசீலன், (அ.இ.அ.)
குடும்பமலர், ப. 23, 13.03.2005

**நெஞ்சைத் தொட்டவை**

'நெஞ்சைத் தொட்டவை' பகுதியில் தங்கள் வாழ்க்கையில் ஏற்பட்ட அனுபவங்களைக் குடும்பமலர் வாசகர்களுடன் பகிர்ந்து கொள்ளும் நோக்கில் எழுதப்பட்ட கடிதங்கள் இடம் பெற்றுள்ளன. அதைப் படிக்கும் வாசகர்கள் தங்கள் வாழ்க்கையில் ஏற்படும் சிக்கல்களை நன்றாக ஆராய்ந்து தீர்க்கும் வகையில் இப்பகுதி அமைந்துள்ளது.

சான்றாக,

"நெஞ்சைத் தொட்டவை பகுதியில் வெளிவந்த துன்பத்திலும் இன்பம் தந்த பண்பு கட்டுரை நெஞ்சை நெகிழ வைத்து விட்டது".

எஸ். ஜானகி, (நெ.தொ.),
குடும்பமலர், ப. 9, 20.02.2005.

**செய்திகள்**

இயற்கை செயற்கைக் காரணங்களால் உண்டாகும் சமுதாய மாற்றத்திற்கு ஏற்ப அச்சமுதாயத்தின் கருத்துப் பரிமாற்றக் கருவியாகிய மொழியும் மாறுதல் அடைகின்றது. மக்கள் செயற்கை விண்கோள்கள் மூலம் செய்திகளைப் பெற்று உடனுக்குடன் தெரிந்து கொள்கின்ற வளர்ச்சி இன்று நிலவுகிறது.

குடும்ப மலர் இதழும் உலகின் பல்வேறு பகுதிகளிலும் நடைபெறுகின்ற நிகழ்ச்சிகளை, வியக்கத் தகுந்த வெளிச் செய்திகளைத் 'திசைகள்' என்ற பகுதியில் வெளியிடுகின்றது. நம்மைச் சுற்றியுள்ள நாடுகளில் நடைபெறுகின்ற விஷயங் களை நாம் அறிந்து கொள்ள இவை துணை செய்கின்றன.

சான்றாக,

வயித்துக்காக இங்கே....
அங்கேயும் இப்படித்தான்
நோய்கள் ஒய்வதில்லை
ஓ போடு....

*திசைகள், குடும்பமலர், ப. 18, 13.02.2005*

என்பனவற்றைக் கூறலாம்.

**நகைச்சுவைத் துணுக்குகள்**

செய்திகளையே படித்துக் கொண்டிருக்கும் மனிதனுக்கு ஒரு மாற்றாகத், துணுக்குகள் இடம்பெற்றுள்ளன. துணுக்குகள் படங்களுடன் வெளிவருகின்றன. ஒன்பது வகையான மெய்ப்பாடுகளில் முதன்மையானது நகை. நகைச்சுவையை அனைவருமே விரும்புவர். நகை உடல் உள்ளத் துன்பம் போக்கி உரம் அளிப்பதோடு சிரித்த பிறகு சிந்திக்கவும் வைக்கின்றது. உணவிற்கு ஊறுகாய் சுவை கூட்டுவதைப் போல இதழ்களுக்கு நகைச்சுவைத் துணுக்குகள் சுவை கூட்டுகின்றன. குடும்ப மலர் இதழானது நகைச்சுவைத் துணுக்குகளை ஹா...ஹா...ஹா... என்ற தலைப்பில் வெளியிட்டு இன்பத் தமிழுக்கு வளம் சேர்க்கின்றது.

சான்றாக,

"நீங்கள் வாழ்க்கையில் எப்படி முன்னேறினீங்கன்னு கேட்டா,
வாசல் படியை காட்டுறீங்களே....
படிப்படியா, முன்னேறினேன்னு சிம்பாலிக்கா சொன்னேன்".

*சி. இருளபபசாமி, (ஹா...ஹா...ஹா...),*
*குடும்பமலர், ப. 17, 20.02.2005*

**திரைஉலகச் செய்திகள்**

திரை உலகச் செய்திகள் இல்லாத இதழ்களே இன்று இல்லை. திரை உலகச் செய்திகள் மக்களிடம் செல்வாக்குப் பெற்று இருப்பதால், பல வண்ணங்களில் நடிகர், நடிகையரின்

புகைப்படங்களும் அவர்களைப் பற்றிய செய்திகளும் இடம் பெற்றவண்ணம் இருக்கின்றன. இவை

*சினி சிப்ஸ்*

*சினி-மினி*

என்ற பெயர்களில் குடும்பமலர் இதழில் இடம் பெற்றுள்ளன.

நடிகர்கள் நடித்துக் கொண்டிருக்கும், நடிக்கவிருக்கும் படங்களைப் பற்றிய செய்திகளையும் அவர்களின் சொந்த விஷயங்களைப் பற்றிய செய்திகளையும் கூறும் வகையில் இப்பகுதி அமைகின்றது.

**பயன்படு தமிழ்**

இன்றைய போட்டி நிறைந்த உலகில், வாழ்க்கையில் எதிர் நீச்சல் போட்டு முன்னேற, இளைய சமுதாயத்திற்கு வழி காட்டும் வகையில் 10 பொது அறிவு வினா விடைகளைத் 'தெரிந்து கொள்ளுங்கள்' என்ற தலைப்பில் வெளியிடுகின்றது. வாசகர்களின் படிக்கும் ஆர்வத்தைத் தூண்டுவதோடு பொது அறிவு வளரவும் வழி வகுக்கிறது.

**நிறைவாக**

'ஏற்றமுறச் செய்வதுவும்
மாற்றமுற வைப்பதுவும்
ஏடே ஆகும்'

என்றார் பாரதிதாசன். தொடக்கக் கால இதழ்களில் ஆங்கிலம் மற்றும் வடமொழி கலந்து எழுதப்பட்டன. 1960-களில் வெளிவந்த இதழ்கள் அனைத்தும் தமிழ் மொழிக்கும், இனத்திற்கும், பண்பாட்டிற்கும் முக்கியத்துவம் கொடுத்து எழுதின. செந்தமிழ், செந்தமிழ்ச்செல்வி, தேன்மொழி, தமிழ்ச்சிட்டு, முல்லை போன்ற இதழ்கள் தமிழ் இலக்கியத் துறையை வளர்த்தன.

**''ஊரினை நாட்டை இந்த உலகினை ஒன்று சேர்க்கப்
பேரறிவாளர் நெஞ்சில் பிறந்த''**

அவ்விதழ்கள் செய்த அரும்பணிகளை இன்று தமிழர் தந்தை சி.பா. ஆதித்தனாரின் மக்கள் நாளிதழாகத் திகழும் தினத்தந்தி நாளிதழும் அதன் இலவச இணைப்புகளும் செய்து வருகின்றன.

**சுருக்கக் குறியீட்டு விளக்கம்**

சி.க. - சிறுகதை

பு.க. - புதுக்கவிதை

வா.க. - வாசகர் கடிதம்

அ.இ.அ. - அந்தரங்கம் இது அந்தரங்கம்

நெ.தொ. - நெஞ்சைத் தொட்டவை

**துணை நூல்கள்**


1. தங்க. மணியன், பத்திரிகைத் தமிழ்.
2. கு. முத்துராசன், இதழியலும மொழி பெயர்ப்பும்.
3. கி. இராசா, மக்கள் தகவல் தொடர்பியல்.
4. சு. சக்திவேல, இதழியல்.
5. அரு. சோமசுந்தரன், கட்டுரைப் பெட்டகம.

# தமிழர் தந்தை சி.பா. ஆதித்தனாரின் இதழியல் உத்திகள்

முனைவர் கு. கதிரேசன்

வளர்ந்து வரும் மக்கள் தகவல் தொடர்பியல் துறையில் இதழியலுக்கென ஒரு தனித்த, சிறந்த இடம் உண்டு. அதில் தமிழ் இதழியலுக்கென ஒரு பாரம்பரியமும் சிறப்பும், பெருமையும் உண்டு. இதற்குக் காரணம் தமிழ் இதழியலாளர்களில் முதன்மையான இடத்தைப் பெறுபவர் 'தமிழர் தந்தை' என எல்லோராலும் அழைக்கப்படும் அமரர் சி.பா. ஆதித்தனார் ஆவார். இதழியல் உலகில் அவர் நிகழ்த்திய சாதனைகள் அவரை உலக இதழியலாளர்கள் வரிசையில் கொண்டு சேர்த்தது. அதற்குக் காரணமாக அமைந்த பண்புகள் பல. அவரது திட்டமிட்ட நோக்கு, முயற்சி, கடின உழைப்பு, சவால்களை எதிர்கொள்ளும் உள்ள உறுதி, இலக்கினை அடையும் செயல் திறன், அறிவைப் பயன்படுத்தி நுணுகி ஆராய்ந்து செயல்படும் பாங்கு, காலத்திற்கேற்ற - இடத்திற்கேற்ற, வாசகர்களுக்கேற்ற இதழியல் இயல்பினை அமைத்துக் கொள்ளும் பான்மை முதலிய கூறுகள் தமிழர் தந்தையின் இதழியல் வெற்றிக்கு அடிப்படைக் காரணமாக அமைந்தன.

கல்வி அறிவுடையவர்களுக்கும் சமூகத்தில் மேல்தட்டு மரியாதையைப் பெறுபவர்களுக்கும் செல்வந்தர்களுக்குமாகவே இதழ்கள் வந்தன. இந்நிலையை மாற்றிப் பாமரர்களையும் படிக்க வைக்கும் நோக்கில் ஏழைத் தமிழர்கள், உழைப்பாளர்கள், உரிமைக்கும் உணர்வுக்கும் குரல் கொடுக்கும் நோக்கிலும் வாசகர்களை வசீகரிக்கும் வகையிலும் எளிமையான புதிய பல உத்திகளைக் கையாண்டார். அவற்றை இனம் கண்டு தெளிவது ஆதித்தனாரின் இதழியல் திறனைக் கண்டறியத் துணை செய்யும். அந்த வகையில் சி.பா. ஆதித்தனாரின் இதழியல் உத்திகளை விளக்கும் நோக்கில் இக்கட்டுரை அமைகிறது.

---

தமிழ்த்துறை, ஆதித்தனார் கல்லூரி, திருச்செந்தூர்.

எழுத்து, சொல், தொடர், பத்தி, நிறுத்தற்குறிகள் பயன்பாடு உள்ளிட்ட கூறுகளைக் கொண்டமையும் மொழி நடை, தலைப்பு உருவாக்கம், செய்தி அமைத்தல், பக்க வடிவமைப்பு அச்சு அமைத்தல், படம் எடுத்தாளல், சிறப்புப் பகுதிகள், கவனத்தில் கொள்ளவும் தள்ளவும் வேண்டியவை. பத்திரிகையாளர் பண்பு எனப் பல்வேறு இதழியல் கூறுகளில் அவரது உத்திகளை இனம் காணலாம்.

ஒவ்வொரு செய்தியாளருக்கும் ஒவ்வொரு பத்திரிகைக்கும் ஒரு மொழி நடை உண்டு. அந்த மொழி நடையை வைத்தே அது எந்தப் பத்திரிகை? என இனம் கண்டுவிடலாம். அந்த வகையில் தனக்கென ஒரு தனிமொழி நடையை உருவாக்கிக் கொண்டார் சி.பா. ஆதித்தனார். இம்மொழிநடையே அவரது இதழியல் பணியின் தனித்தன்மையை அடையாளம் காட்டியது.

பொதுவாகவே செய்தியாளர்கள் மிக எளிமையான, சிறிய, நேரடியாகக் கூறும் மொழி நடையைப் பின்பற்றுபவராக இருத்தல் வேண்டும். அலங்கார வார்த்தைகள் இன்றிக் கவிதை இயல்புகள் இன்றிக் கற்பனை கலக்காமல் உண்மையை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு நேரடியாக, சுருக்கமாக, உரிய வார்த்தைகளில் செய்தியை மட்டும் வெளிப்படுத்து வதாக இருக்க வேண்டும். செய்தியைத் தவிர வேறு எவ்வித உணர்வையும் ஏற்படுத்தாதவாறு இருத்தல் வேண்டும். மேலும் செய்தியாளர்கள் தங்கள் இதழின் வாசகர்கள் யார்? எத்தகையவர்? படித்தவரா? பாமரரா? கிராமத்தவரா? நகரத்தவரா? என்பதை இனம் கண்டு அதற்கேற்ற மொழி நடையை அமைத்துக் கொள்வதுண்டு. பட்டணத்திலும் வெளிநாட்டிலும் படித்துப் பாரிஸ்டர் பட்டம் பெற்று வெளிநாட்டில் (சிங்கப்பூர்) வழக்கறிஞர் தொழிலைச் செய்து வந்தாலும் சொந்த நாட்டிலும் கிராமப்புறப் பாமர மக்களின் வளர்ச்சியிலும் ஈடுபாடு கொண்டு, கிராமப்புறப் பாமர மக்களை வளர்க்கும் நோக்கில் அவர்களது பாமரத் தமிழ் மொழி நடையைத் தம் இதழின் மொழி நடையாக எடுத்துக் கொண்டார். இது அவர் கையாண்ட மிக அரிய உயரிய உத்தியாகும்.

மேலை நாட்டிலிருந்து இந்தியா வந்து சமயத்தைப் பரப்பத் துணிந்த பாதிரியார்கள், இந்திய மொழிகளைப் படித்து, இந்திய மக்களுடன் வாழ்ந்து அவர்கள் பண்பாட்டைப் பின்பற்றி அம்மக்களின் மனத்தில் இடம் பிடித்துக் கொண்டு அதன்

பின்பே தம் சமயத்தின் கருத்துகளைப் பரப்பினர். இது ஒருவகை உத்தி. அவ்வாறே தினத்தந்தி மக்களின் மனதில் இடம் பிடிப்பதற்கு அவ் அரிய உத்தியைக் கடைப்பிடித்தது. மக்களுடன் மக்களாகப் பழகி, அவர்கள் பேசும் பாமரத் தமிழையே கையில் எடுத்துக் கொண்டு, அவர்கள் வாழ்க்கை பற்றிய செய்தி களுக்கே முக்கியத்துவம் கொடுத்து, அவர்கள் எடுத்தாளும் வட்டார வழக்குச் சொற்களை அப்படியே எடுத்தாண்டு எளிய இனிய மொழி நடையைக் கையாண்டு இமாலய வெற்றி பெற்றது. இத்தகைய உத்தியை இனம் கண்டு பயன்படுத்திய பாங்கு சி.பா. ஆதித்தனாரின் நுண்மாண் நுழைபுலத்தையும் தீர்க்க தரிசனத்தையும் படிம்பிடித்துக் காட்டுவதாக அமைகிறது. ''செய்திப் பத்திரிகை படிப்பது மெத்தப் படித்தவர்கள் மட்டும் செய்கிற காரியம் என்பது போய் விட்டது. சற்றே தமிழ் தெரிந்தவர்களும் படிக்குமாறு தமிழை எளிமைப்படுத்தி கொஞ்சம் பரபரப்பு சேர்த்து, குழப்பம் இல்லாத வகையில் செய்தி தரும் உத்தியைத் தமிழ்நாட்டில் ஏன் இந்தியாவில் முதலில் கொண்டு வந்தவர் ஆதித்தனார்தான்'' என்னும் எழுத்தாளர் சுஜாதாவின் கருத்து (இதழாளர் கையேடு; முன்னுரை) மேற்கூறிய கருத்துக் களை மெய்ப்பிக்கும் வகையில் அமைந்திருப்பதை உணரலாம்.

மிக எளிதாகப் புரியத்தக்க கருத்து, சொல், தொடர் அமைப்புகளை எடுத்தாளல், கடினமானதும் பொருள் புலப்பாட்டில் குழப்பம் ஏற்படுத்துவதுமான எழுத்து, சொல், தொடர் அமைப்புகள் தவிர்க்கப்படுதல், பேச்சுத் தமிழ் சொற்கள் எடுத்தாளப்படுதல் உள்ளிட்ட பல கூறுகளை உடைய மொழி நடை எடுத்தாளப்படுவதை இனம் காண முடிகிறது. சான்றாகச் சிலவற்றைக் கூறலாம்.

அமரர் சி.பா. ஆதித்தனார் தம் இதழில் செய்தி எழுதும் பொழுது ஒள, ஃ முதலிய எழுத்து வடிவங்களைப் பயன் படுத்தாமல் மாற்று ஒலி வடிவங்களையும் எழுத்து வடிவங் களையும் பயன்படுத்தும் ஒருவகை மொழி நடை உத்தியைக் கையாண்டார். ஒள எனும் வரி வடிவத்திற்குப் பதிலாக 'அவ்' எனும் வரி வடிவத்தைப் பயன்படுத்தினார்.

ஆதித்தனார் பயன்படுத்திய எழுத்துத் தொடர்பான மொழி நடை, எழுத்துச் சீர்திருத்தக் கொள்கையுடன் தொடர்புடையதாகவே அமைந்துள்ளது. எழுத்துச் சீர்திருத்த வாதிகள் தமிழில் ஐ, ஒள, ஃ எனும் மூன்று எழுத்துக்களையும்

நீக்கிவிடலாம், அவற்றின் பயன்பாட்டிற்குப் பதிலாகத் தொடர்புடைய வேறு வரிவடிவத்தை அதாவது அதே ஒலி வடிவத்துடன் தொடர்புடைய வேறு வரி வடிவத்தைப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்றனர்.

ஐ → அ + ய் = அய்

ஔ → அ + வ் = அவ்

ஃ → அ + க் = அக்

என வரும் பகுதியினை ஆராய்ந்தால் அ என்னும் உயிர் ஒலியும் ய், வ், க் என்னும் மெய்யொலிகளும் இருப்பதால் இவற்றைப் பயன்படுத்தியே ஐ, ஔ, ஃ என்னும் ஒலிகளின் பயன்பாட்டை நிறைவு செய்து கொள்ளலாம். அதனால் தமிழில் உயிர் ஒலி மெய்யொலிகளின் எண்ணிக்கை குறையும். அந்த வகையில், உயிரொலி இரண்டும் பதினெட்டு மெய்யொலி களுடன் இணைந்து மொத்தம் முப்பத்தாறு ஒலிகள் உருவாகின்றன. அவற்றைக் குறிக்கும் வடிவங்களுடன் உயிரொலி வடிவங்கள் இரண்டையும் சேர்த்து மொத்தம் முப்பத்தெட்டு வடிவங்கள் தேவையற்ற வடிவங்களாகி விடுகின்றன. அதோடு ஃ எனும் ஆய்த எழுத்து வடிவமும் சேர்த்து மொத்தம் தமிழில் முப்பத்தொன்பது ஒலி வடிவங்கள் பயனற்றவைகளாகக் கருதப்படுகின்றன. அதனால் அவை குறைக்கப்படுவதற்கு வாய்ப்பு உள்ளது. இத்தன்மை மொழியின் கடினத்தையும் பளுவையும் குறைத்து எளிமைப்படுத்தப்படுவதை உணர்த்து கிறது. இக்கருத்தினை மனத்தில் கொண்டும் மொழி எளிமையைக் கருத்தில் கொண்டும் சி.பா. ஆதித்தனார் மேற்கூறப்பட்ட உத்தியைக் கடைப்பிடித்தார் எனலாம்.

மேலும் பேச்சு வழக்கிலுள்ள வடமொழி எழுத்துகள் பயன்பாட்டில் ஒரு தீர்க்கமான முடிவைக் கொண்டிருந்தார் ஆதித்தனார். ஸ, ஹ, க்ஷ, ஷ ஆகிய வடமொழி கிரந்த எழுத்துகளைப் பயன்படுத்துவதைத் தவிர்க்க வேண்டும் என்றார். சொல்லும் பொருளும் உச்சரிப்பும் மாறாதவாறு பேச்சு வழக்கில் உள்ள தமிழ் எழுத்துகளைப் பயன்படுத்த வேண்டும் என்றார். சான்றாக, 'பட்டாஸ்' என்பதைப் 'பட்டாசு' என்றும் 'ராஜேஸ்வரி' என்பதை 'ராஜேசுவரி' என்றும் எழுத வேண்டும். அதே சமயத்தில் பாகிஸ்தான் என்பதைப் பாகிசுதான் என்றோ மாஸ்கோ எனபதை மாசுகோ என்றோ எழுதுதல் கூடாது என்கிறார். ராமஸ்வாமி என்பதை ராமசாமி என்றும் ஜாதி என்பதை சாதி

என்றும் எழுதலாம். ஆனால் ராஜாஜி என்பதை ராசாசி என்றும் எம்.ஜி.ஆர். என்பதனை எம்.சி.ஆர். என்றும் எழுதுதல் கூடாது. கக்ஷி என்பதை கட்சி என்றும் ஹரியானாவை அரியானா என்றும் ஹிமாசலபிரதேசம் என்பதை இமாசலப்பிரதேசம் என்றும் எழுதலாம். ஆனால், ஹெலிகாப்டர் என்பதனை எலிகாப்டர் என்றும் ஹெரால்டு என்பதை எரால்டு என்றும் எழுதலாம். ஆனால் ஆங்கிலப் பெயர்களைப் பயன்படுத்தும்பொழுது மாற்றி எழுதக் கூடாது. ஹீத் என்றால் ஈத் என்று எழுதுதல் கூடாது. காரணம் உச்சரிப்பும் பொருளும் மாறி விடுவதுடன் குழப்பத்தையும் உருவாக்கி விடும். படிப்பதில் கடினத்தை ஏற்படுத்தும். இதனால் பெரும்பாலும் வடமொழி எழுத்து களைப் பயன்படுத்தும் நிலையைத் தவிர்ப்பது நல்லது. பயன்படுத்தினால் உச்சரிப்பும் பொருளும் மாறாதவாறு தமிழ்ப்படுத்தித் தமிழ் எழுத்துகளுடன் எழுதுவது நல்லது.

மேலும் வடமொழிச் சொற்களைப் பயன்படுத்துவதற்குப் பதிலாகத் தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்துவதே நல்லது என்பார் சி.பா. ஆதித்தனார். சில சமயங்களில் வடமொழி எழுத்துகளைத் தமிழ் எழுத்துகளுடன் இணைத்து அப்படியே பயன்படுத்துவதும் உண்டு. நஷ்டம் என்பதை நட்டம் என்றும் வருஷம் என்பதை வருடம் என்றும் எழுதலாம் என்கிறார். மேலும் 'ல்' எனும் எழுத்து புணர்ச்சி விதியின்படி 'ற்' என மாறும் ஆயினும் அதை ஏற்காமல் 'ல்' என்றே குறிப்பிடும் உத்தியைக் கையாண்டார். கல் சட்டி என்பது கற்சட்டி என வரும். ஆனால் கல்சட்டி என்றே எழுத வேண்டும் என்றார்.

''எழுதுவது என்பது ஒரு கலை, ஒரு திறமை. பழகப் பழக மெருகு பெறும். திறமை, கருத்து, கற்பனை, நடை போன்ற விஷயங்கள் பேருக்குப் பேர் மாறுபடலாம், மாறுபடும். இவையெல்லாம் ஒரு எழுத்தாளனின் தனித் தன்மையைக் காட்டட்டும். இதில் நமக்கு வழக்கில்லை. ஆனால், அடிப்படைத் தமிழில் எளிமையும் சொல்வதை மற்றப்பேர் புரிந்துகொள்ள வேண்டிய அவசியமும் எல்லோருக்கும் வேண்டும்'' என்னும் சுஜாதாவின் கருத்து சி.பா. ஆதித்தனாரின் எழுத்து மொழி நடை உத்தி பற்றி கொள்கைக்குக் கட்டியம் கூறுவதாக உள்ளது.

சொற்களின் பயன்பாடு என வருமிடத்துப் பல்வேறு வகையான உத்திகளைக் கருத்தில் கொண்டு சொற்களைப்

பயன்படுத்தியிருக்கும் பாங்கினை இனம் காண முடிகிறது. அந்த வகையில் பொருத்தமான சொற்களைப் பயன்படுத்துதல், பேச்சு வழக்கில் சொற்களைப் பயன்படுத்துதல், புதிய சொற்களை எழுத்தாக்குதல், வடமொழிச் சொற்களைத் தவிர்த்து எழுதுதல், பன்மைச் சொற்கள், கடினமான நீண்ட சொற்கள் தவிர்த்து எழுதுதல் பெயர்களை மாற்றாமல் அப்படியே எழுதுதல், வெளிநாட்டுப் பெயர்களையோ தெரியாத பெயர்களையோ குறிப்பிடும்பொழுது விளக்கமாகக் குறிப்பிடுதல் உள்ளிட்ட ஐம்பத்தெட்டு வகையான கருத்துகளைக் குறிப்பிடுகிறார் சி.பா. ஆதித்தனார்.

இதழியல் மொழி நடை பிற எழுத்துகளின் மொழி நடையிலிருந்து பெரிதும் மாறுபட்டது. படிக்கத் தெரிந்தவர்கள் அனைவரும் எளிதாகப் படித்துப் புரிந்து கொள்ளக்கூடிய மக்கள் மொழி நடையில் இதழியல் எழுத்துகள் இருக்க வேண்டும். அகராதியின் துணைக் கொண்டு புரிந்து கொள்ளும் நடையிலிருந்தால் பொதுமக்கள் அந்தச் செய்தித்தாளை வாங்கிப் படிக்க மாட்டார்கள். ஆதலால்தான் சி.பா. ஆதித்தனார் இதழியில் மொழி பற்றிக் கூறுகையில், "பேச்சு வழக்கில் இருக்கும் தமிழே உயிருள்ள தமிழ். அதைக் கொச்சை நீக்கி எழுத வேண்டும் என்றும் புரிகிற தமிழில் எழுத வேண்டும் என்றும் கூறுகின்றார்" என்பது மா.பா. குருசாமியின் இதழியல் கலை கூறும் செய்தி.

திரு.வி.க. தமக்கென ஒரு தனி நடையை உருவாக்கிக் கொண்டு இதழியல் மொழி நடையில் புதுமையைக் கையாண்டார். ஆயினும் தமிழில் இதழியல் மொழி நடை நூல் ஒன்றை உருவாக்கிய பெருமை பெற்றவர் சி.பா. ஆதித்தனார். அவர் தமது முப்பத்தைந்து ஆண்டுக் கால அனுபவ வெளிப்பாட்டினால் பத்திரிகை எழுத்தாளர் கையேடு என்ற நூல் வெளியாகக் காரணமாக இருந்தார். தமிழில் வெளிவந்த முதல் இதழியல் மொழிநடை நூல் இதுவே. நாற்பத்து நான்கு அத்தியாயங்களுடன் சுருக்கமாகவும் தெளிவாகவும் தக்க சான்று காட்டியும் தமிழ் இதழ்களின் மொழி நடையைப் படம் பிடித்து காட்டுகிறது.

பேச்சுத் தமிழைக் கொச்சை நீக்கி எழுதுவதே சி.பா. ஆதித்தனாரின் பத்திரிகை கையேடு வலியுறுத்தும் மந்திரம். "நான்மாடக் கூடலை நண்ணினோம்' எனக் கூறுவதற்குப்

பதிலாக 'மதுரைக்குப் போனோம்' எனக் கூறுவதே இதழியலுக்கு ஏற்றது. படிக்க எளிமையாகவும் புரிந்துகொள்ள இலகுவாகவும் அமைந்து விளங்குகிறது. புரிகிற தமிழில் எழுதுவதை விட பேசுகிற தமிழில் எழுதுவதே சிறப்புடையது. இதழியலுக்கு எது ஏற்றது, செய்தியை நேரடியாகக் கூறும் எளிமையான தெளிவான தொடரே ஏற்றது.

பொதுவாக உயிர் எழுத்துகளில் சொல் தொடங்கினால் அதற்கு முன் ஒரு என்பது வருதல் கூடாது. ஓர் என்றுதான் எழுத வேண்டும். இது தமிழ் இலக்கண விதி. ஓர் இரவு என்பது சரி. ஒரு இரவு என்பது தவறு. அதே போன்று ஓர் நாள் என்பது தவறு. ஒரு நாள் என்பதே சரியானது. இதையே சி.பா. ஆதித்தனாரும் தம்மொழி நடையாகக் கொள்கிறார். ஆனால் அவர் மிகவும் நுட்பமாக ஆராய்ந்து ஓர் அரிய உண்மையை இனம் கண்டு கூறுகிறார். இது அவரது இதழியல் அறிவு நுட்பத்தை உய்த்துணர்த்துகிறது. இதழியலில் ஒன்றை அழுத்த மாகக் கூறுமிடத்து, 'ஓர்' என வருமிடத்தை 'ஒரு' என மாற்றிப் பயன்படுத்த வேண்டும் என்கிறார் சி.பா. ஆதித்தானர்.

மேலும் எவ்வாறு சொற்களைக் கையாள வேண்டும் எனப் பல அரிய உதாரணங்களைக் கூறிச் செல்கிறார், சிவசேனா பற்றி எழுதும்பொழுது ஓர் இடத்தில் சிவசேனா (சிவாஜி சேனை) என்று எழுத வேண்டும் எனக் குறிப்பிடுகிறார். பள்ளிகள் பள்ளிப் பிள்ளைகள் என்று எழுதுதல் கூடாது. பள்ளிக் கூடங்கள், பள்ளிக்கூடப் பிள்ளைகள் என்று எழுத வேண்டும். (பள்ளிகள் என்ற சொல் தென் ஆற்காடு மாவட்டத்தில் வசைச் சொல்லாக உள்ளது). கள்ள ரூபாய் நோட்டுச் செய்தியை எழுதும்போது 'கத்தை கத்தையாக ரூபாய் நோட்டு அச்சடிப்பு' என்றும் அரசாங்கம் ரூபாய் நோட்டு அச்சடிக்கும் செய்தியை எழுதும்போது கோடிக் கணக்கில் ரூபாய் நோட்டு அச்சடிப்பு என்றும் எழுத வேண்டும். இவ்வாறு மொத்தம் ஐம்பத்தெட்டு சொல் ஆளுமைக் கருத்துகளைச் சுட்டிக் காட்டுவதை இனம் காணலாம். இச்செய்திகள் வாயிலாக சி.பா. ஆதித்தனாரின் சொற்கள் எடுத்தாளல் பற்றிய மொழி நடையை இனம் காண முடிகிறது.

தொடர் அமைப்பு உத்தியை ஆராயுமிடத்துப் பல புதிய செய்திகளும் தமிழ் இதழியல் தொடர் அமைப்பு எவ்வாறு அமைந்திருக்க வேண்டும்? எனும் நெறியையும் இனம் காணலாம்.

சிறு சிறு வாக்கியங்களாக அமைத்தல், ஒவ்வொரு வாக்கியத் திற்கும் தொடர்பு உடையதாக அமைத்தல், செயப்பாட்டு வினை வாக்கியமாக அமைக்காமல் செய்வினை வாக்கியமாக எழுதுதல் இரு பொருள் தரும் மயக்கமுடைய சொல்லையோ சொற்றொடரையோ பயன்படுத்தாமல் விடுதல், எதிர்மறைச் சொற்களையோ இரு எதிர்மறைச் சொற்களையோ பயன்படுத்தி தொடர் அமைப்பதைத் தவிர்த்தல், ஒரு வரியை இரண்டாகப் பிரித்து நேர்மறை, எதிர்மறையாக இருவரியாக எழுதுதல் கடின சொற்கள் அடங்கிய தொடரைத் தவிர்த்தல், இலக்கணப் பிழை இன்றி எழுதுதல், திணை, பால், எண், இடம் முதலிய கூறுகளைச் சரியாகப் பயன்படுத்துதல், வேற்றுமை உருபுகளை உரிய இடத்தில் பயன்படுத்தித் தொடர் அமைத்தல், தகுந்த இடத்தில் ஒற்று எழுத்துகள் நிறுத்தற்குறிகள் அமைத்தல் உள்ளிட்ட பல்வேறு கூறுகள் சி.பா. ஆதித்தனாரின் தொடர் அமைப்பு பற்றிய மொழி நடை உத்தியாக அமைந்திருப்பதை அறிய முடிகிறது.

மாஜி மந்திரி சேலம் ஜில்லாவுக்கு வருகை தந்தபோது 'இந்தப் பிரச்சனை சீக்கிரமே விவாதிக்கப்படும் என்றும் ஹர்த்தால் அனுஷ்டிக்கக் கூடாது என்றும் பாரபட்சமின்றி லெவி உத்தியோகஸ்தர்களுக்கு போலீஸ் பந்தோபஸ்து அளிக்கப்படும்' என்றும் சொன்னார். இதனையே சி.பா. ஆதித்தனார் உடைத்துச் சிறு சிறு வாக்கியங்களாகப் பிரித்துப் பயன்படுத்துவார். "முன்னாள் மந்திரி சேலம் மாவட்டத்துக்கு வந்தார். இந்த விவகாரம் சீக்கிரமே தீர்ந்துவிடும். கடை அடைப்பு செய்யக்கூடாது. ஓர வஞ்சம் இல்லாமல் கொள்முதல் அதிகாரிகளுக்கு காவல் பாதுகாப்புத் தரப்படும் என எழுதுகிறார். இது சி.பா. ஆதித்தனார் தொடர் அமைப்பு மொழி நடை உத்தியை விளங்கிக் கொள்ளத் துணை செய்கிறது.

"காரால் மோதப்பட்டு கிழவி சாவு" என்ற தொடர் "செயப்பாட்டுவினை வாக்கியம்" இவ்வாறு செயப்பாட்டு வினை வாக்கியமாக அமைக்காமல், "கார் மோதி கிழவி சாவு" என நேரடியாகச் செய்வினை வாக்கியமாக எடுத்தாள வேண்டும் என்பதும் ஆதித்தனாரின் தொடர் அமைப்பு மொழி நடை உத்தியை அடையாளம் காட்டுகிறது.

எண்களை எடுத்தாளும்பொழுது பெரிய எண்ணாக இருந்தால் உடைத்து எழுத வேண்டும். சான்றாக, 1,45,60,000 என்று எழுதாமல் 1 கோடியே 45 லட்சத்து 60 ஆயிரம்' என்று

எழுதினால் அதுவே சரியானதாகும். ஒரே சொற்றொடரை மீண்டும் மீண்டும் பயன்படுத்தக் கூடாது என்கிறார் ஆதித்தனார். இவை, ஆதித்தனாரின் தொடர் அமைப்பு மொழி நடை உத்தியின் இயல்புகளை அடையாளம் காட்டுகிறது.

செய்திகளின் பத்தி அமைப்பினைப் பற்றிய தெளிவான கருத்து இதழியலாளர்களுக்குப் பாடமாக அமைகிறது. இதனைப் 'பாரா' எனவும் பாரகிராப் (*Paragraph*) எனவும் பயன்படுத்து கிறார். காலம் (*Column*) எனவும் வழங்கப்படுகிறது. இப்பத்திகள் சிறிய சிறிய பத்திகளாக 2 அங்குலம் (5 செ.மீ.) நீளத்திற்கு மேல் போகாதவாறு அமைத்தல் வேண்டும். ஒரு பத்திக்கும் அடுத்த பத்திக்கும் தொடர்பு இருத்தல் வேண்டும். எழுதிக் கொண்டு வரும் செய்தி மாறும் பொழுது பத்திக்கு முன் துணைத் தலைப்புகள் அமைக்கலாம் என்பது சி.பா. ஆதித்தனாரின் கருத்தாகும்.

மொழிபெயர்ப்புச் செய்யுமிடத்து, ஆங்கிலத்திலுள்ள விதிகளின் கருத்துக்கள் சிதையாதிருத்தல் தெளிவாகத் தெரியும் வண்ணம் தன்னிறைவு பெற்றதாக இருத்தல் ஆகிய இரு பண்புகளையும் கருத்தில் கொண்டு மொழிபெயர்ப்பு செய்ய வேண்டும் என்பது ஆதித்தனாரின் மொழிபெயர்ப்புக் கொள்கையாக அமைகிறது.

செய்தி சேகரித்தல் எனும் பகுதியில் செய்தியைத் தேடிப் போக வேண்டும், கவனிக்க வேண்டும், நடக்க இருக்கும் நிகழ்ச்சிகளைப் பற்றிய விவரங்களை முன்பே தெரிந்து வைத்தல், பொதுக் கூட்டங்களில் அனைவர் பேச்சையும் எழுதிக் கொண்டு வந்து ஒருவர் பேச்சை மட்டும் போட்டு மற்றவற்றை இணைப்புச் செய்தியாகப் போடுதல், விபத்துகள் நடக்கும் பொழுது திரட்ட வேண்டிய விவரங்களை நீதிமன்றங்களின் மனதைத் தொடும் செய்திகளைச் சேகரித்தல், பேட்டிகள் எடுக்கும்பொழுது வருங்காலம் பற்றியே அதிகமாகக் கேட்டல், செய்தி சேகரிக்கும் பொழுது வினாக்களைக் கேட்டுச் சேகரித்தல், அறிக்கைகள் வரும்பொழுது நேரில் சந்தித்துப் புதிய தவகல்களைத் திரட்டுதல் உள்ளிட்ட பத்துப் பண்புகளைச் செய்தியாளரின் தகுதிகளாகக் குறிப்பிடுகிறார் சி.பா. ஆதித்தனார்.

பெரிய செய்திகளில், இடம்பெறுபவர்கள் உயர்ந்தவர்களாக இருத்தல் வேண்டும். 'ஆசாமி'களும் 'என்பவர்'களும் கூடாது என்கிறார் சி.பா. ஆதித்தனார். தலையங்கத்தில் பிறரை ஏசுதல்

கூடாது. அதனால் மற்றவர்களுக்கு வெறுப்புணர்வே ஏற்படும். மேலும் பத்திரிகை பற்றிப் புகழ்ந்து எழுதும் கடிதங்களை வெளியிடக் கூடாது. அது வாசகர்களின் மனதில் நல்லெண்ணத்தைக் குறைத்து விடும். போலியான விளம்பரத்தை வெளியிடக்கூடாது. ராசிபலன் எழுதும்பொழுது பெரும் பாலானவை பத்து எழுதினால் ஒன்பது நல்ல பலன்களாகவே எழுதுதல் வேண்டும். அறிவுரை கூறுவதுபோல் அமையலாம். கேள்விப் பதிலில் பிறரைத் தாக்குதல் கூடாது. கடினமான சொற்களைப் பயன்படுத்துதல் கூடாது. கவர்ச்சிப் படங்களை வெளியிடக்கூடாது. அப்படியே வெளியிட்டாலும் படத்தில் இருப்பவர் நடிகை நளினா என்று எழுத வேண்டுமே தவிர, நடிகை நளினாவின் எடுப்பான தோற்றத்தைக் கண்டு களியுங்கள் என்று எழுதுதல் கூடாது. செய்தியில் ஐயம் இருப்பது போன்று 'ஆம்' போட்டு 'குத்தினாராம்' கடத்தினாராம் என்பதாக எழுதுதல் கூடாது.

மேலும் செய்திகளைத் தெரிவு செய்வது எவ்வாறு? நீக்கப்பட வேண்டிய செய்திகள் எவை? செய்திகளை வெளியிடும் நடைமுறை என்ன? அதில் பின்பற்றவேண்டிய விதிமுறைகள் யாவை? வெளியிடக்கூடாத செய்திகள் எவை எவை? செய்திக்கு உருக்கொடுப்பது (*Rewriting*) எப்படி? என்பன போன்ற பல்வேறு நுட்பங்களை நுணுகி நுணுகி ஆராய்ந்து வெளிப்படுத்துகிறார்.

தலைப்பு வெளியிடுவதற்கு முன்பு செய்தியிலிருந்து சாரத்தை (*Theme*) எடுக்க வேண்டும் என்கிறார். சாரம் எப்படி இருக்கும்? எத்தனை முறை எப்படிச் சாரம் எடுக்கலாம்? என்பன போன்ற நுட்பங்களைத் தெளிவுப் படுத்துகிறார். ''சாரம் ஒழுக்கத்தை வலியுறுத்துவதாகவும் ஆதரிப்பதாகவும் இருக்க வேண்டும். 'தவறாக நடந்த பெண்ணை வெட்டியவருக்கு 2 ஆண்டு ஜெயில்' என்று தலைப்புப் போடுவது தவறு. தவறாக நடந்த பெண்ணுக்கு அரிவாள் வெட்டு, இது சரி. பத்திரிகையை வீடுகளிலும் படிக்கிறார்கள். எனவே சாரங்கள் ஒழுக்கத்தை வற்புறுத்துவதாக இருத்தல் வேண்டும். மணமான பெண் மற்றொருவருடன் தொடர்பு கொண்டிருந்தால் அது செய்தியில்லை. அந்தப் பெண் ஏதாவது தண்டனை அடைந் திருந்தால் அதைச் செய்தியாக வெளியிடலாம். ஒழுக்கம் கெட்ட பெண் தண்டனை அடைவாள் என்கிற நீதி அந்தச் செய்தியில்

இருக்கிறது'' என்ற கருத்தில் ஆதித்தனாரின் சாரம் பற்றிய உத்தியை இனம் காண முடிகிறது.

மேலும் செய்தி முழுவதையும் உள்ளடக்கியதாகத் தலைப்படுதல், தேதியைச் சரியாக இடுதல், முதல் பாராவில் செய்தியின் சாரத்தை எழுதுதல், உள்நாட்டுச்செய்திகள், உள்ளத்தைத் தொடும் செய்திகளை எட்டுப் பத்திச் செய்தியாக வெளியிடுதல், செய்தி ஆசிரியரின் தகுதிகள், அவர் செய்ய வேண்டுவன, பக்க அமைப்பைத் தீர்மானித்தல், சுவரொட்டி தலைப்புகளை விறுவிறுப்பாக அமைத்தல், அச்சு அமையும் விதம், சிறப்புப் பகுதி அமைத்தல், அதில் மக்கள் குரல், ராசிபலன், விளையாட்டுச் செய்திகள், கேள்வி - பதில், மதிப்புரை, கவர்ச்சிப்படம், ஆண்டிப் பண்டாரம், மலர்கள், அறிவிப்புகள், ஆட்களின் படம், செய்திப் படங்கள், கருத்துப் படம் முதலியவற்றைக் கையாளுதல், படம் வரைதல், பிளாக்குதல் தயாரித்தல், விளம்பரம் வடிவமைத்தல் உள்ளிட்ட இருபத்தெட்டு வகையான தலைப்புகளில் பல்வேறு நூற்றுக் கணக்கான நுட்பங்களை நுணுகி ஆராய்ந்து கூறியிருக்கிறார் சி.பா. ஆதித்தனார்.

தமிழ் இதழியல் துறைக்கு இவர் தந்திருக்கும் நுட்பங் களுக்காக டாக்டர் பட்டமே வழங்கலாம். அவரது கருத்துகள் ஒவ்வொன்றும் அவரது இதழியல் உத்தியை வெளிப்படுத்து வதுடன் இதழியலாளனுக்குப் பாடமாகவும் அமைகின்றன.

# சிறுவர் இதழ்கள் மூலம் மாணவர்களது தமிழ் மொழித்திறன் வளர்ச்சி மற்றும் கல்வி முழுமை அடைவு - ஒரு பார்வை

**சி. பாலையா**

மனித சமுதாய வளர்ச்சியில் இதழ்களின் பங்கு மிகவும் குறிப்பிடத் தகுந்தது எனில் அது மிகையன்று. "இதழியல் என்பது சமுதாய உயர்வுக்குரிய கருவி" - என்பது காந்தியடி களது கருத்து. படிப்பறிவு உடைய ஒவ்வொருவரும் இதழ்கள் படிக்கும் நாட்டம் உடையவராக இருத்தல் மிகவும் அவசியமாகிவிட்ட இக்காலச் சூழலில், மனித நாகரிகமும், கல்வியறிவும் வளர வளர, இதழ்களின் எண்ணிக்கையும் பல்கிப் பெருகியுள்ளன. 'இதழ்கள் மற்றும் புத்தகங்கள் படிப்போரது எண்ணிக்கையை வைத்தே ஒரு நாட்டின் தரத்தை நிர்ணயித்துவிடலாம்' - என்ற சமூக விற்பன்னர்களது கூற்று ஆழ்ந்த சிந்தனைக்குரியது. இதழ்களைப் படிப்பதால் நாட்டு நடப்பினைத் தெரிந்து கொள்வது, பொது அறிவு வளர்ச்சி மற்றும் பொழுதுபோக்கு ஆகியனவே என்று கருதப் பட்டாலும் எழுதப் படிக்க இயலாத மக்கள் மத்தியில் வாசிக்கும் திறனை வளர்ப்பதற்கான ஆர்வத்தினைத் தூண்டக்கூடிய அரிய நன்மையும் இதழ்களினால் உண்டாவதே ஆகும். குறிப்பாக, தமிழகத்தில் இத்தகைய பேரார்வத்தினைக் கிராமத்து மக்கள், விவசாயிகள், தொழிலாளர்கள், சிறுவர்கள் ஆகியோர் மத்தியில் தூண்டியதில் **தினத்தந்தி** நாளிதழின் தொண்டு மிகவும் தலையாயது ஆகும். தேநீர் கடைகள், பொது இடங்கள், வீடுகள் மற்றும் உழவர் மையங்களில் பெரியவர்களும், சிறியவர் களும், விவசாயிகளும் **தினத்தந்தி** நாளிதழை எழுத்துக்கூட்டி ஆர்வத்துடன் தினமும் படித்த காட்சிகள் ஒருகாலத்தில் காண்போரது கவனத்தை ஈர்த்தன என்பது வரலாற்று உண்மை.

---

முதுநிலை விரிவுரையாளர், மாவட்ட ஆசிரியர் கல்வி மற்றும் பயிற்சி நிறுவனம்
புதுக்கோட்டை - 622 004

இன்றையச் சூழலில், நாளிதழ்களைவிட வார, மாத, பருவ இதழ்களின் எண்ணிக்கை பெருகியுள்ளது. இது மனித சமுதாயத்தின் ஒட்டுமொத்த வளர்ச்சிக்குக் கிடைத்துள்ள சீரிய சான்றாகும். இத்துடன், இன்றைய இதழ்கள் உலகம், சிறுவர் களுக்கான இதழ்களை வெளியிடுவதில் பேரார்வம் காட்டி வருகிறது. இன்றையச் சிறுவர்கள், நாளைய நல்ல தலைவர் களாக, அறிவியல் அறிஞர்களாக, ஆராய்ச்சி மேதைகளாக ஆவர் என்ற கனவு நனவாக்கப்படுவதில், சிறுவர்களுக்கான இதழ்கள் அரிய பணியாற்ற வேண்டும். இந்த அடிப்படையில், தொடக்க - உயர்தொடக்கப்பள்ளி மாணவர்களது சீரிய தமிழ் மொழித்திறன் வளர்ச்சிக்கு இத்தகைய இதழ்கள் பெரிதும் பங்காற்றுகின்றனவா என்றும், பாடப்புத்தகங்கள் மூலம் இன்று இவர்கள் பெறும் கல்விசார் திறன்கள், இவர்களது எதிர்கால முழுவளர்ச்சிக்குரிய செம்மையான கல்வி அடைவுகளாக ஆக்கப்படுவதில் இவ்விதழ்களின் பணி எத்தகையது என்றும் பகுப்பாய்வு செய்திடல் சாலச்சிறந்தது.

**இவ்வாய்வுக் கட்டுரையின் நோக்கங்கள்**

1. சிறுவர்களுக்கான இதழ்கள் மூலம் தொடக்க - உயர் தொடக்கப்பள்ளி மாணவர்களது தமிழ் மொழித்திறன் வளர்ச்சிக்குரிய வாய்ப்புகள் பற்றி ஆய்தல்.
2. தெரிவு செய்த இதழ்கள் சிலவற்றின் சிறப்பியல்புகளை மொழித்திறன் மற்றும் கல்வி அடைவுத்திறன் அடிப்படையில் எடுத்துரைத்தல்.
3. இன்றைய மாணாக்கரது பாடத்திறன்கள் எதிர்காலத்தில் இவர்களது முழு வளர்ச்சிக்கான வாழ்க்கைத்திறன் அடைவு களாக மாற்றப்படுவதற்கு இதழ்கள் படிப்பதின் முக்கியத் துவத்தை வலியுறுத்தல்.
4. இதழ்களைப் படிக்கத் தூண்டுவதில் பெற்றோர் மற்றும் ஆசிரியர்களின் பங்கினைச் சுட்டிக்காட்டுதல்.

**இதழ்கள் படித்தலும் தொடக்க - உயர்தொடக்கப்பள்ளி மாணவர்களும்**

இது அறிவாற்றல் கோலோச்சும் புதியதோர் உலகம். மனிதரின் அறிவாற்றல் எல்லையற்று விரிந்த வண்ணம் உள்ளது. இதற்கு இணையாக மக்களது மொழித்திறன் வளர்ச்சி அமைய வேண்டும். இவ்வாறான பல்வேறு திறன்களைப் பாடப்புத்தகங் களே மாணவர்களிடம் முற்றிலும் வளர்த்துவிடும் என்று எதிர்பார்க்க

இயலாது. பள்ளிப்பாடப் புத்தகங்கள் மாணவர்கள் அடைய வேண்டிய அறிவுத்திறன் வளர்ச்சிக்கென்றே இயற்றப்படு கின்றன எனினும, வேகமாகவும் விவேகமாகவும் நாளுக்கு நாள் வளர்நதுவரும மக்களது அறிவார்ந்த இதர வளர்ச்சிகளுக் கேற்ப, இன்றைய மாணவர்கள் தம்மைத் தயார்படுத்திக் கொள்ள வேண்டுமெனில், பாடப்புத்தகங்கள் தவிர, இவர்கள் வெவ்வேறு வகைகளிலும் நிறையப் படிக்க வேண்டியது மிக மிகத் தேவையாகிவிட்டது. ஒரு குழந்தையின் முழு வளர்ச்சி என்பதில், அக்குழந்தையின் சரியான மொழித்திறன் வளர்ச்சியும் உள்ளடங்கியது. பாடம் சார்ந்த திறன்களுடன், பல்வகைப் பொது அறிவிலும், சுயசிந்தனை, படைப்பாற்றல், எதையும் கூர்த்த மதிநுட்பத்துடன் ஆய்ந்து தெளியும் உள்ளாற்றல் ஆகிய திறன்களிலும் சிறந்து விளங்குவது இன்றைய மாணவருல கிற்குப பெரிதும் தேவையாகிவிட்டது. இவ்வகையிலான அனைத்துத் திறன்களும், பல்வேறு இதழ்களைப் படிப்பதால் நன்கு வளர்க்கபபடுகின்றன அல்லது மேலும் மேம்பாடு அடைகின்றன எனபது மிகத் தெளிவான உண்மையாகும்.

இதழ்களின் பண்பு நலன்களான 'அறிவித்தல்', 'அறிவுறுத்தல்', 'மகிழ்வித்தல்' மற்றும் 'வழிகாட்டுதல்' ஆகியவை, மாணவர் களை அறிவார்ந்த வகையில் செழுமைப்படுத்தவும், நன்னெறிப் படுத்தவும பெரிதும் பயன்படுகின்றன. 'புத்தகப்படிபபே ஒரு முழுமனிதனை உருவாக்குகிறது' (*Reading Maketh a Man*) என்பதும் 'கண்டது கற்றவன் பண்டிதனாவான்' என்பதும் 'படி படி நல்ல தமிழ் நூலைப்படி, காலை படி, மாலை படி கடும்பகல் படி' - என்ற பாவேந்தரது கருத்தும் இதழ்கள் படித்தல் என்ற திறன் வளர் செயலுககு மேலும் மெருகூட்டி நிற்கின்றன. இத்துடன், மொழிதொடர்பான பேச்சு, எழுத்து, உரையாடும் திறன், வர்ணனை, வினா எழுப்புதல், தொடர்ந்து பிழையின்றிச் சொந்தமாகப் பேசுதல் ஆகிய அடிப்படை ஆற்றல்கள் மாணவர்களிடம் மிகச்சிறப்பாக வளர வேண்டும். இதறகுக குறிப்பாகச் சிறுவர்களுககான இதழ்கள் நன்கு பயனபட வேண்டும். வரையறுக்கப்பட்ட பாடப்புத்தகத் திறன்களானவை, மாணவர்கள் மேற்கொள்ளும் பிறவகைப் படிப்புகள் (*Extra Reading*) மூலமே முழுமையும் செம்மையும அடைகின்றன. இத்துடன் சிறுவர் இதழ்களில் வெளியாகும் பல்வேறு அறிவியல் தொடர்பான செயதிகள், ஆய்வு மனப் பான்மையைத் தூண்டும் புதிர் படைப்புகள், விடுகதைகள், அறிவார்ந்த போட்டிகள், பாட்டுக்கட்டுதல், கடிதம் எழுதுதல்

ஆகிய பகுதிகள் மாணவர்களது சுறுசுறுப்பான மூளைக்கு ஆக்க ரீதியான வேலையாகவும், பிஞ்சு உள்ளங்களின் சிந்தனை களுக்கு அரிய விருந்தாகவும் அமைகின்றன. இளந்தலைமுறை யினரின் உயிர்மூச்சாக இருக்க வேண்டிய நாட்டுப்பற்று, அரிய பல சுதந்திரப் போராட்ட உண்மைகள் ஆகியன சிறுவர் இதழ்களில் இடம் பெறுகின்றன. இப்பகுதிகள் பாடப் புத்தகங்களிலும் இடம் பெற்றிருப்பினும், இக்கருத்துகளை இதழ்கள் மூலம் படிக்கும் பொழுது, மேலும் ஆக்கம் பெற்று மாணவர்களது உள்ளங்களில் கல்வி முழுமை அடைவாக (*Attainment of Totality of Education*) பரிணமிக்கின்றன. விளையாட்டு ஒரு 'பொழுதுபோக்கு' மற்றும் 'உடற்பயிற்சி' என்பதைக் கடந்து, இது ஒரு சிறப்புமிக்க துறையாக உருவெடுத்து வருகிறது. இத்துறை பற்றிய பல நல்ல தகவல்களை சிறுவர்களுக்கான இதழ்கள் மாணவர்களுக்கு அள்ளி வழங்குகின்றன. இதனடிப் படையில், புகழ்மிக்க சிறுவர்கள் இதழ்களான **சுட்டிவிகடன், சிறுவர் மலர், சிறுவர் மணி, கசடறக் கற்க** மற்றும் **துளிர்** ஆகியவற்றினை இரத்தினச் சுருக்கமாக இக்கட்டுரை ஆய்வு செய்கிறது.

**சுட்டிவிகடன்**

இது தமிழகத்தின் வார இதழ் வரலாற்றில் நீண்ட பின்னணி உள்ள **ஆனந்த விகடனின்** சிறுவர்களுக்கான தயாரிப்பாக வெளிவரும் வார இதழாகும். பல சிறுவர்களது இயற்கைக் குணமான 'சுட்டித்தனத்தையே' தலைப்பாகக் கொண்டு வெளிவரும் பல்சுவை வண்ண விருந்தாக இவ்விதழ் வெளிவருகிறது. இதன் முகப்பிலேயே 'அழகு தமிழில் அறிவுப்பெட்டகம்' என்ற அடைமொழியைத் தாங்கியுள்ளது. இவ்விதழின் தமிழ் நடை பெரும்பகுதி சிறுவர்களது 'பேச்சு வழக்கிலேயே' அமைந்துள்ளது. மாந்தரது இயற்கை இயல்பு களையும், அன்றாட நிகழ்வுகளையும் அப்படியே மன வெளிப்பாடாகக் கொண்டு வரும் பொருட்டு, இன்றைய இதழ்களின் எழுத்துப்படைப்புகள் பெரிதும் பேச்சு வழக்கிலேயே வெளியிடுவது காலமாற்றத்தின் தேவையென இதுபோன்ற இதழ்கள் கருதுகின்றன. இதில் வெளியாகும் 'சுட்டி கிரியேசன்ஸ்' பகுதி, சிறுவர்களது உள்ளார்ந்த படைப்பாற்றல்களை நன்கு ஊக்குவித்து வளர்க்கவல்லது என்பதில் ஐயமேதுமில்லை எனினும், இப்பகுதியின் தலைப்பினை, சிறுவர்களை ஈர்க்கும் படியான நல்ல எளிய தமிழ்ச் சொற்களால் மாற்ற இயலாதா?

என்பது சிந்தனைக்குரியது. இதேபோன்று, 'குறள் காமிக்ஸ்' என்ற தலைப்பு. இப்பகுதி சிறுவர்களுக்கு நன்னெறிப் பண்புகளைத் திருக்குறள் மூலம் சித்திர உரையாடல் யுக்தியைப் பயன்படுத்தி விளக்குவதும், மொழியில் உரையாடல் திறன் இதனால் வளர்க்கப்படும் என்பதும் சிறப்புடையதே. ஆனால், குறள் விளக்கத்தை 'காமிக்ஸ்' என்ற வார்த்தையால்தான் சிறுவர்களுக்கு விளக்கமுடியுமா என்பதை உய்த்துணர வேண்டும். மேலும் 'விடுகதை விவரமான கதை', 'மூளைக்கு வேலை கொடுப்போமா' 'வரைந்து பழகுங்கள்' மற்றும் 'புதிர் பயணம்' ஆகிய பகுதிகள் ஆய்வு மனப்பான்மையுடன் படைப்பாற்றலை வளர்க்க வல்லவை. உலகம் புகழும் அணு விஞ்ஞானியும் நமது குடியரசுத் தலைவருமான அப்துல் கலாம் அவர்களது 'அக்னிச் சிறகுகள்' என்ற புத்தகச் செய்திகளை, அவர் தம் அறிவியல் ஆராய்ச்சி வரலாறாகக் 'கனவு நாயகன்' என்ற தலைப்பில் மேலும் ஒரு சித்திரத் தொடராக வெளியிடுவது இவ்விதழின் தனிச்சிறப்பாக அமைந்துள்ளது. இப்பகுதி, மாணவர்கள் மத்தியில் தமிழில் அறிவியல் ஆய்வு உணர்வினைக் கிளர்த்திட உதவிடும். விளையாட்டுத் துறைச் செய்திகள் மற்றும் விலங்குகள், பறவைகள் பற்றிய பல்வேறு தகவல்களும் இவ்விதழில் இடம்பெறுகின்றன. சிறுவர்களுக் காகவே எழுதாமல், சிறுவர்களையும் எழுதவிட்டால் மொழித் திறன் மேலும் வளரும். சுட்டிவிகடன் மாணவர்களது அறிவுல கிற்குத் திறவுகோலாக இருப்பினும், தலைப்புகளை எளிய நல்ல தமிழில் மாற்றி அமைத்தால், மாணவர்களுக்கு மொழி ஆற்றலை வளர்க்கும் பெருமையும் கிட்டும். ஆங்கில மொழித் திறனும் வளர வேண்டும் என்பது முற்றிலும் தேவையான ஒன்றே. ஆனால், தமிழ் இதழ்களில் தமிழ்ச் சொற்களுக்கு மாற்றாக ஆங்கிலச் சொற்களைப் புகுத்தித் தமிழ்ச் சொற்களைப் புறந்தள்ளுவது என்பது, மாணவர்களது மொழித்திறன் வளர்ச்சிக்கு ஊறு விளைவித்தலே ஆகும்.

**சிறுவர் மலர்**

தமிழகத்தில் அதிக எண்ணிக்கையில் வெளிவரும் நாளிதழ் களில் ஒன்றான தினமலர் நாளிதழின் இணைப்பாக வாரந் தோறும் வெளியாகும் இவ்விதழ், சிறுவர்களுக்கான பல செய்திகளையும், பொழுது போக்குப் படைப்புகளையும், மாணவர்களது தமிழ் மொழித்திறனை வளர்க்கும் 'உங்கள்

பக்கம்' மற்றும் 'குட்டீஸ் லெட்டர்ஸ்' எனப்படும் மாணவர்களது கடிதப்பகுதி ஆகியவற்றையும் தாங்கிவருகிறது. மேலும் சிறுவர் மலரில் வெளியாகும் 'சதாவதாரக் கதைகள்' மற்றும் 'பாரசீகக் கதைகள்' ஆகிய இரண்டு சித்திரத் தொடர்களும் முற்றிலும் பொழுதுபோக்குப் பகுதிகளாக மட்டும் அல்லாமல் சிறுவர்களுக்கான நன்னெறிக்கல்வியையும் புகட்டுகிறது. இதே போன்று, குறிப்பிட்ட சூழ்நிலையில் சில வரைபடங்களைக் கொடுத்து அவற்றிற்குரிய உரையாடல்களை எழுதத் தூண்டினால் மாணவர்களது சிந்தனை ஆற்றலும் மொழியாக்கமும் வலுப் பெறும். மாறாக, வளர்ந்து வரும் மாணவர்களது அறிவியல் ஆய்வுத் திறன்களை வளர்க்கும்படியான படைப்பாற்றலுக்கு இக்கதைகள் தூண்டுகோலாக அமையா. ஆனால், 'அதிமேதாவி அங்குராசா', 'நம்பமுடியாத உண்மைகள்', 'க்விஸ் டைம்', 'ஆராய்ச்சியாளர்கள் பற்றிய குறிப்புகள்' மற்றும் 'புதிர்' பகுதிகள் மாணவர்களது சுயசிந்தனையையும், கற்பனை வளத்தையும், பொது அறிவையும் நன்கு வளப்படுத்தும். இத்தகைய அறிவுப் பணியோடு, 'க்விஸ் டைம்', 'குட்டீஸ் லெட்டர்ஸ்' போன்ற சொற்களுக்குத் தமிழ் சொற்களைப் பயன் படுத்தும் மொழிப்பணியையும் இதழ்கள் மேற்கொண்டால் நன்மை பயக்கும்.

**சிறுவர் மணி**

தரமான செய்தி வெளியீடு, தலையங்கம், நடுபக்கக் கட்டுரை ஆகிய சிறப்புமிக்க பகுதிகளோடு நல்ல இதழ் பணியாற்றிவரும் **தினமணி** நாளிதழின் இணைப்பாக வெளிவரும் சிறுவர்களுக்கான வார இதழ் **சிறுவர் மணி** ஆகும். இதன் தெளிவான எளிய தமிழ் நடை இளம் வயதுப்பிரிவினரைப் பெரிதும் ஈர்க்கும் தன்மையது. பல்வேறு குழப்பங்களில் தத்தளிக்கும் இன்றையச் சமூகச் சூழலில், சிறுவர்களைச் சரியான பாதையில் இட்டுச் செல்வது சீரியதோர் 'இதழ்' தர்மமாகும். இவ்வகையில், இவ்விதழில் வெளியாகும் 'தமிழில் ஒரு சொல் இரு பொருள்', 'எழுத்து மாறினால் பொருள் மாறும்', 'உங்கள் பக்கம்' மற்றும் 'எளிய குழந்தைப் பாடல்கள்' ஆகிய பகுதிகள் மாணவர்களது மொழி சார்ந்த படைப்பாற்றலைப் பெரிதும் வளர்க்கின்றன. 'பிஞ்சுக் கை வண்ணம்' 'வாசக சாலை' மற்றும் சிறுவர்களுக்காக அவ்வப் போது வெளியாகும் நேர்த்தியான கதைகள் ஆகியன மாணவர்களது அறிவுத்தேடலுக்கு அரிய அறிவு விருந்தாக

அமைகின்றன. மக்கள் மத்தியில் நிலவும் பிறமொழிச் சொற்களுக்கான நல்ல தமிழ்ப்பெயர்களை வெளியிடும் **சிறுவர் மணி** 'கடிஜோக்ஸ்', 'சிண்டு பிண்டு' போன்ற தலைப்புக்களில் பொருத்தமான தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்தலாம்.

**கசடறக் கற்க**

தொடக்க, நடுநிலை மற்றும் உயர்நிலைப்பள்ளி மாணாக்கரது சிறப்பு மிக்க படைப்புகளை அதிக அளவில் தாங்கி வெளிவரும் 'படைப்பாக்கச் சிறுவர் மாத இதழ்' 'கசடறக் கற்க' என்பது. மாணவர்களது மொழி ஆற்றலை வெளிக்கொணரும்படியான அவர்களது படைப்புகளை அதிகமாக வெளியிடுவது இவ்விதழின் தனிச் சிறப்பாகும். மேலும் சிறுவர்களது மனங்களை நன்கு சிந்திக்கத் தூண்டும் 'கேள்வி கேட்பது அறிவின் முதல் படி, அதனை எட்டிப்பிடிக்கப் புத்தகம் படிப்பீர்', தாய்மொழிக் கல்வி தனிப்பெருங்கல்வி', 'அம்மா முதல் ஆசிரியை, ஆசிரியை இரண்டாவது அம்மா', 'இயற்கை நம் வழிகாட்டி, நம் பாதுகாப்பு அரண், நம் அனைவரின் தாய்' போன்ற நல்ல வாசகங்களை முகப்பு அட்டைகளிலேயே தாங்கிவருவது கசடறக் கற்க இதழின் மணிமுடியில் உள்ள இன்னும் ஒரு பொன் சிறகாகும். இதன் எளிய தமிழ் நடையும், பிறமொழிக் கலப்பும் பேச்சு வழக்கும் அதிகம் சேர்க்காமல் நல்ல தமிழ் சொற்களாலேயே படைப்புக்களுக்குத் தலைப்பிடக்கூடிய இதழியலின் நல்ல மொழித்தொண்டும் **கசடறக் கற்க** இதழின் முத்தாய்ப்பான சிறப்பியல்புகளாகும். இச்சிறப்பு, வளர்ந்து வரும் மாணவர்களின் தமிழ் எழுத்தாற்றலைப் பெரிதும் ஊக்குவிக்கும். மேலும், மாணவர்களுக்கான இனிய தலையங்கம், 'ஆசிரியர்களுக்கு' என்ற தனிப் பகுதி, 'யுரேகா மாமா' போன்ற அறிவியல் பற்றிய எளிய செய்திக்கட்டுரை, மாணவர்களது சொல்லாக்கத் திறனை வளர்க்கும் கவிதை மற்றும் கடிதங்கள், ஓவியப்படைப்புகள், பொது அறிவுப் புதிர்கள் ஆகிய அனைத்தும் இவ்விதழில் இடம்பெற்றுள்ள சிறந்த பகுதிகளாகும். எனவே, **கசடறக் கற்க** இளம்படைப்பாளிகளின் இனிய தமிழ் மாத இதழ் என்பதில் ஐயமேதுமில்லை.

**துளிர்**

இவ்விதழ், தமிழ்நாடு மற்றும் புதுவை அறிவியல் இயக்கம் வெளியிடும் சிறுவர்களுக்கான அறிவியல் மாத இதழ். அறிவியல் சார்ந்த படைப்புகளை மட்டுமே தாங்கி

வெளிவருவதே **துளிர்** இதழுக்கும் மற்ற சிறுவர்களுக்கான இதழ்களுக்கும் உள்ள குறிப்பிடத்தக்க வேறுபாடாகும். 'கால மாற்றம்' என்ற போர்வைக்குள் 'வியாபார நோக்கம்' என்ற உள்ளீட்டைக் கொண்டு தற்காலப் பேச்சுவழக்கில் பிற மொழிக்கலப்போடு அமைந்த 'ஒருவிதமான' நடையைப் பயன்படுத்துவதில்லை என்பது **துளிரின்** தனிச்சிறப்பாகும். சிறுவர்களுக்கான அனைத்துக் கருத்துகளையும் தமிழ் மொழியிலேயே சிறப்பாக எழுத முடியும் - எழுத வேண்டும் என்பதைத் **துளிர்** மெய்ப்பிக்கிறது. அறிவியல் சிந்தனைகளையும், செய்திகளையும் மாணவர்களுக்கு அள்ளித்தருவதில் இவ்விதழுக்கு இணையேதும் இல்லை என்பதே உண்மை. 'என்பக்கம்' என்ற பகுதியில் சிறுவர்களது எண்ணங்களை எழுதத் தூண்டி மொழித்திறன் வளர்ச்சிக்கு வாய்ப்பளிக்கப்படுகிறது. இதில் வெளியாகும் 'குறுக்கெழுத்துப் போட்டியில்' கலந்து கொள்ளும் நூற்றுக்கணக்கான குழந்தைகளது சொல்வளம் பெருகுவதோடு சிந்தனை ஆற்றலும் வளர்க்கப்படுகிறது. இவ்விதழில் வெளியாகும் பறவைகளைப் பற்றிய தொடர் கட்டுரையும், 'வரைந்து பழகுவோம்' மற்றும் 'யுரேகா' பகுதிகளும் இளம் உள்ளங்களின் அறிவியல் ஆய்வு நாட்டத்தினைச் செழுமைப்படுத்தி, தமது பாடப்புத்தகத் திறன்களுக்கு முழுமையான மெருகூட்டும் தன்மை பெற்றுள்ளன என்பது தெளிவு.

**இதழ்கள் மதிப்பீடு**

நம் ஆய்விற்கு எடுத்துக் கொண்ட ஐந்து இதழ்களில் **சுட்டி விகடனில்** எளிய நல்ல தமிழ்த் தலைப்புகளைத் தருவது பற்றிச் சிந்திப்பதோடு மாணவர்களது சொந்தப் படைப்புகளுக்கு வாய்ப்புக் கொடுப்பது பற்றியும் சிந்திக்கலாம். பாடப் பகுதிகளுக்கு இணையான பல்வேறு அறிவாற்றல்சார் கருத்துகளை இவ்விதழும், 'சிறுவர் மலர்' மற்றும் 'சிறுவர் மணி' இதழ்களும் வெளியிடுகின்றன. ஆனால், மாணவர்களது மொழி ஆற்றலை மேலும் வளப்படுத்துவதற்குரிய படைப்பாற்றல் போட்டிகளுக்கு இவ்விதழ்கள் அதிக வாய்ப்பளிக்கலாம். தன்னலமற்ற தியாகங்களுக்குப் பெயர்பெற்ற தலைவர்களைப் பற்றிய பகுதிகள் இடம் பெற்றால், இன்றைய இளைஞர்களுக்கு நல்ல வழி காட்டுதல் கிடைக்கும். முதல் மூன்று இதழ்களோடு, **கசடறக் கற்க** மற்றும் **துளிர்** ஆகிய இதழ்களை ஒப்பிடுகையில், இவ்விரு இதழ்களும் மாணவர்களுக்குக் காலத்தே தேவைப்படும் அறிவார்ந்த நோக்கங்களைப் பெரிதும்

வலுப்பெற வைக்கின்றன. குறிப்பாக 'தேசப்பற்று' என்ற உயிர்த் துடிப்பு, சிறுவர்களது உணர்வோடு கலந்து இயங்கு வதற்கு ஐந்து இதழ்களுமே சீரிய வாய்ப்புக்களை உருவாக்கலாம்.

## முடிவுரை

இதழ்கள் படிப்பது மாணவர்களது அன்றாட முக்கியச் செயல்களில் தலையாயதாய் இருக்க வேண்டும். இவ்வழி உருவானவர்களே இன்று பல்லாற்றானும் சிறந்தோங்கித் திகழ்கின்றனர். இதில் மாணவர்களது பெற்றோர் மற்றும் ஆசிரியர்களது பங்கு அளப்பரியதாகும். இவர்கள் இதழ்கள் படிக்கும் பழக்கத்தைத் தாம் பின்பற்றுவதோடு, குழந்தை களுக்கும் வழிகாட்டுதல், அவர்களது எதிர்காலத்திற்குச் சிறந்த ஒளி பாய்ச்சுவதாய் அமையும். பாடங்கள் தவிரப் 'பொது வாசிப்புப்' பழக்கம் (*General Reading*) மாணவர்களிடம் இல்லா விட்டால் இவர்களது மொழித்திறன் பெரிதும் பாதிப்பிற் குள்ளாவது இயல்பு. மொழித்திறன் ஒவ்வொரு மனிதரின் அறிவாற்றலுக்கு அடிப்படையாகும். இத்திறன் நல்ல சிறுவர் இதழ்களால் நன்கு வளர்க்கப்படும் வாய்ப்புகள் உருவாக வேண்டும். இவ்வழியில் இக்கட்டுரையின் ஆய்விற்குள்ளான இதழ்களின் சீரிய பணி மேலும் ஆக்கம் பெற வேண்டும். ஆசிரியர்களும் பெற்றோர்களும் இதில் தமது செம்மையான பொறுப்பினை ஏற்க வேண்டும். அத்துடன் பள்ளிப்பாடங்கள் முழுமையும் செழுமையும் பெற இதழ்கள் பெரிதும் துணை புரிகின்றன என்பதும் முற்றிலும் உண்மை.

### துணை நூல்கள்


1. தமிழ் இதழ்கள, சென்னைப் பலகலைக்கழக வெளியீடு, சென்னை, 1977.
2. இதழியல், கற்பக நூலகம், மதுரை, 1980.
3. சுட்டி விகடன், சிறுவர் மலர், சிறுவர் மணி, கசடறக் கற்க, துளிர் இதழ்கள.
4. தமிழ இதழகள தோற்றமும் வளர்சசியும் - நவமணிப் பதிப்பகம், சென்னை, 1987.

# அறிவியல் ஆய்விதழ்களும் தமிழ் வளர்ச்சியும் - காலத்தின் கட்டாயம்

**முனைவர் எ.டி.எஸ். ராஜ்**

நம் தாய்த்தமிழ் பழமை வாய்ந்த உயர்தனிச் செம்மொழி. பழமை மிக்கதாயினும் இளமையும் மிக்கது. பல துறைகளில் வளர்ந்தும் இளமை சிதையாதது. இன்னும் வளர்ச்சி வாய்ப்பு மிக்கது. ஆய்வு இதழ்கள் தற்போதைய வளர்ச்சியின் ஒரு பரிணாமம். அறிவியல் ஆய்வு இதழ்கள் தமிழுக்கு இன்னும் மெருகு சேர்க்கும். ஆதலின் தமிழ் இதழியல் வரலாற்றில் புதியதோர் வழிமுறை அமைத்து அனைத்துப் பாமர மக்களும் கூட விழிப்புணர்வு அடையச் செய்த அமரர் சி.பா. ஆதித்தனார் அவர்கள் நூற்றாண்டு விழாவில் - எல்லா திறத்திலும் - உலக அளவில் தமிழ் மொழியும், தமிழறிஞர்களும், அறிவியல் ஆர்வலரும், ஆய்வாளரும் பயன்பெறும் வகையில் அறிவியல் இதழ்கள் தொடங்குவது சாலச்சிறந்தது. அது தமிழ் வளர்ச்சியில் நிச்சயம் புதியதோர் பரிணாமம் தோற்றுவிக்கும் எனக் கூறுவதே இக்கட்டுரையின் நோக்கம்.

**தமிழ் எங்கள் உயிர்**

''தமிழுக்கும் அமிழ்தென்று பேர் - அந்தத் தமிழின்பத் தமிழெங்கள் உயிருக்கு நேர்'' என்று நம் தாய்த் தமிழைப் போற்றுகின்றோம். பெற்ற தாயைப்போலப் பிறந்த பொன்னாட்டைப் போல உற்ற தமிழையும் நாம் உயிராய் மதிக்கின்றோம். தமிழ்மொழியில் இருக்கும் பண்டை இலக்கியங்கள் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே இந்திய இலக்கியப் பாரம்பரியம் அடைந்திருந்த உன்னத நிலைக்குச் சான்று களாகும். அவை தமிழுக்கும் தமிழருக்கும் மட்டும் பெருமை சேர்ப்பனவல்ல. இந்தியத் துணைக் கண்டத்திற்கே பெருமை சேர்ப்பன. தமிழ் ஒரு செவ்வியல் மொழி என்பது உலக மொழி அறிஞர்களால் ஒப்புக்கொள்ளப்பட்ட உண்மை.

---

முதல்வர், இலக்குமிபுரம் கலை மற்றும் அறிவியல் கல்லூரி,
நெய்யூர் - 629 802. தமிழ்நாடு.

செவ்வியல் மொழி என்ற தகுதி அம்மொழியில் இடம் பெற்றிருக்கும் இலக்கியத்தின் அடிப்படையில் வருகிறது. முதலில் அடையாளம் காணப்படுவது செவ்வியல் இலக்கியம். அவ்விலக்கியத்தைக் கொண்ட மொழி செவ்வியல் மொழி (*Classical Language*) என அங்கீகரிக்கப்படுகிறது. நமது பழமை இலக்கியங்கள் அறிவியல் பற்றி அதிகம் சொல்லாதவையாக இருக்கலாம். ஆயினும் எல்லாச் சொல் வளமும் பெற்ற மொழி என்பது உலகறிந்த உண்மை. நாம் தேடி அறிந்து பயன்படுத்துவது மொழி வளர்ச்சிக்குப் பெரிதும் ஆக்கம் தரும் என்பதில் ஐயமில்லை. உயர் தனிச்செம்மொழி எம் தாய்மொழி என்பதில் பெருமை கொள்வோம்.

எப்படி ஆரியம் சார்ந்த இந்தியப் பண்பாட்டிற்கு வடமொழி கொள்கலனாக விளங்குகிறதோ, அதைப் போலவே திராவிடம் சார்ந்த பண்பாட்டிற்குத் திராவிட மொழிகளில் மூத்த தமிழ் மொழி கொள்கலன் (*Container*) ஆகும் என அறிவர் குழந்தைசாமி[1] (2005) குறிப்பிடுகின்றார்.

**தமிழின் இளமையும் வளமையும்**

> ஆரியத்தையும் தமிழையும் ஒப்பிடுங்கால்
> கன்னடமும் களிதெலுங்கும், கவின் மலையாளமும் துளுவும்
> உன்னுதிரத் துதித்தெழுந்து ஒன்றுபல ஆயிடினும்
> ஆரியம் போல் உலகவழக் கழிந்தொழிந்து சிதையா
> உன் சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே

எனத் தமிழ்த்தாயை வாழ்த்துகின்றார் சுந்தரம்பிள்ளை. தமிழியல் இயல், இசை, நாடகம் இருப்பதும் இயல் தமிழின் ஒரு சிறந்த அங்கம் (அறிவு+இயல்+தமிழ்) அறிவியல் தமிழ் என்பதும் மறுக்க முடியாத உண்மை. தற்காலத் தமிழ் வளர்ச்சியில் இதழ்கள் சிறந்த அங்கம் வகிக்கின்றன. மக்களோடு சிறந்த தொடர்பு முறைக்கும் இவை உதவுகின்றன. தொன்மை வாய்ந்ததும் - வழக்குமொழியாக இன்னமும் செழித்து வளரும் கன்னித் தமிழ் மொழி பலவழிகளில் வளர்ந்து வருவதும் கண்கூடு.

**தற்கால நிலை**

தற்காலத் தமிழிலக்கியம் பற்றி அசோகமித்திரன்[2] (2005) குறிப்பிடுகையில் உண்மையில் படைப்பிலக்கியத்தைக் கால அளவில் திட்டவட்டமாகக் கூறமுடியாது. பல கால முன்பே துவக்கப்பட்ட முயற்சிகள் தற்போது வெளிவந்திருக்கலாம். ஆதலால் தற்காலம் என்னும் சொல்லை மிகவும் திட்ட

வட்டமாகக் குறிக்க முடியும். துறைகளில் இலக்கியத்தைச் சேர்க்கமுடியாது என்கின்றார். இக்குறிப்பிட்ட கட்டுரையில் விமர்சன இலக்கியம், தொகுப்பு நூல்கள், கவிதைகள், மொழி பெயர்ப்பு மற்றும் இதழ்கள் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

விமர்சன நூல்கள் பல விதங்களில் முக்கியத்துவம் வாய்ந்தவை. ஒன்று இவை அந்தந்த எழுத்தாளரின் படைப்பு மட்டுமே. தனிப்பட்ட பாதிப்புக்களைத் தவிர்த்து ஆராயப் பட்டிருக்கிறது. இரண்டாவது வெளிப்பாட்டில் உள்ள தெளிவு ஓர் அறிவியல் பூர்வமான நடை பயன்படுத்தப்பட்டிருக் கிறது. மூன்றாவதாக, இதுவரை யாரும் கவனம் செலுத்தாத முன்னோடிகளையும் பார்வைக்கு உட்படுத்தியிருக்கிறது.

தொகுப்பு நூல்களைப் பற்றிக் கூறுகையில் பல இதழ் களில் வெளிவந்த சிறந்த படைப்புகளைத் தொகுத்துத் தருவது இன்று பல துறைகளில் காண இயல்கின்றது. இவை எல்லாமே சமகாலச் சமூக, கலாச்சார மற்றும் அரசியல் நிகழ்ச்சிகளைக் கவனித்திருக்கின்றன; பதிவு செய்திருக்கின்றன; மிக உயரிய அறிவுபூர்வமான தளத்தில் சிறப்பான உரைநடையில் விரிவாகவே பதிவு செய்திருக்கின்றன. அத்துடன் புனைகதை, கவிதை, நாடகம், மொழிப்பெயர்ப்புக்கூட வெளியிட்டிருக்கின்றன. தற்காலத் தமிழ் எழுத்துக்கு 1940-1970 வரை பொற்காலமாக இருந்திருக்கிறது. இதை இந்த இரு ஆண்டுகளாக ஆதார பூர்வமாக உணர முடிந்திருக்கிறது என்கின்றார் அசோகமித்திரன். இக்கூற்றின் வாயிலாக இதழ்கள் தற்போது தமிழ் வளர்ச்சியில் ஓர் அங்கமாகவே உள்ளன என்பது புலனாகின்றது.

**இதழியலில் தற்போது தமிழ்**

இதழ்கள் மக்களோடு எப்போதும் தொடர்புடையன. புதுப்புதுத் துறைகளை மக்களுக்கு இனங்காட்ட உதவுவன. புதுப்புதுச் சொற்களை, சொற்றொடர்களை உருவாக்கிப் பயன்படுத்தும் வாய்ப்புத் தருவன. அது மட்டுமன்றி அறிவியல் இதழ்கள் புதுப்புது உலகிற்கும், புது மாற்றங்களுக்கும் நம்மை இட்டுச் செல்வதால் மொழி வளம் பெறுவதற்கும், புதுப்பொலிவு அடைவதற்கும் உதவும் என்பதில் ஐயமில்லை. இவற்றிலிருந்து தொகுப்புகளும், விமர்சனங்களும் நிச்சயமாகத் தோன்றி வளரும் என்பதும் குறிப்பிடத்தக்கது.

இதழ் தயாரிப்பில், தமிழ் உலகத்தரம் அடைந்து விட்டது என்று கூறுவதில் தவறில்லை. கவிதைகளுக்கு, விமர்சனங்

களுக்கு, கதைகள் சொல்வதற்கு, ஓவிய ரசனைகளுக்கு, எத்தனை எத்தனை இதழ்கள். இவை அத்தனையும் பல பரிமாணங்களில் தமிழ் வளர்ச்சிக்கு உதவுவனவாக உள்ளன. இதுபோலவே அறிவியல் இதழ்களும் பெருமை சேர்க்கும், வளர்ச்சியைத் தூண்டும்.

**அறிவியல் இதழ்களின் தேவை**

"நாளொரு கண்டுபிடிப்பும், பொழுதொரு சாதனையுமாக அறிவியல் வளர்ந்து வருகின்றது. இந்தக் கண்டுபிடிப்பு களையும் சாதனைகளையும் நாம் அறிந்து கொள்ள வேண்டும். இவற்றை அறிந்து கொள்வதன் மூலம் நம்முடைய வாழ்க்கை வளம் பெறுவதற்கு வாய்ப்புண்டு. புதுப்புது அறிவியல் துறைகளில் நாம் கால்பதிப்பதற்கும் இந்த அறிவு உதவும். அறிவியல் வளர்ச்சியைத் தெளிவாக நாம் புரிந்து கொள்ள வேண்டுமெனில் அறிவியல் செய்திகள் அனைத்தும் தமிழில் வெளிவரவேண்டும். தாய்மொழிவழிப் பெறும் அறிவே சிக்கலற்றது, சிந்தனை வளர்ச்சிக்கு ஏற்றது. முன்னேறிய நாடு களில் எல்லாம் அறிவியல் தொழில் நுட்பக் கல்வி தாய்மொழி வழியே நடைபெறுகிறது. தமிழுக்கும் அத்தகையதொரு தேவை இப்பொழுது ஏற்பட்டுள்ளது. அறிவியல் துறையில் தமிழை வளர்த்தல், தமிழ்வழி அறிவியல் பரப்புதல், அறிவியல் நூல்கள், இதழ்கள் வெளியிடல், அறிவியல் தமிழ் வளர்ச்சியில் ஆர்வமுள்ள அனைவரையும் ஒன்றிணைத்தல் ஆகிய குறிக்கோள் களைக் கருத்தில் கொண்டு அனைத்திந்திய அறிவியல் தமிழ்க் கழகம் அமைக்கப்பட்டுள்ளது. இது ஒரு மக்கள் சார்ந்த அறிவியல் இயக்கமாக வளர வேண்டும். மூட நம்பிக்கை களை ஒழிக்கவும், அறிவியல் விழிப்புணர்வை ஏற்படுத்தவும் அறிவியல் வழிச் சமுதாயப் பொருளாதர மாற்றம் காணவும் அறிவியல் தமிழக்கழகம் தன்னை ஈடுபடுத்திக் கொண்டுள்ளது என பதிப்பாசிரியர் உரையில்[3] ச. அகத்தியலிங்கம் மற்றும் இராமசுந்தரம் அவர்களும் (1989) குறிப்பிட்டுள்ளனர். முத்தான கருத்துகள் இத்தனை ஆண்டுகளுக்குப் பின்னும் அறிவியல் இதழ் ஒன்று உலகத் தரத்தில் உருவாகவில்லையே! ஏன்? ஏன்? வாழ்வு உயர, உயர, வளர்தமிழில் அறிவியல் கற்க - உலகத் தரத்தில் அறிவியல் தமிழ் ஆய்வு இதழ்கள் வர வேண்டும்! இது நம்மால் முடிந்த காரியம்தான். பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்களும் இறவாத புகழுடைய புது நூல்களும் தமிழ் மொழியில் தோன்றப் புதியதோர் வாய்ப்பு இல்லையா?

**தமிழ் வளர்ச்சிக்கு அறிவியல் இதழ்கள்**

அறிவியல்தமிழ் வளர்ச்சிக்கு அறிவியல் ஆய்வுகள் மற்றும் அது வெளியாகும் நூல்களும் முக்கியமானவை. அதன் சொல்லாக்கம், அவைகளைக் கையாளும் முறை, அவைகள் பயன்பாட்டை உறுதி செய்தலும் முக்கியம். அறிவியல் ஆய்வுகளின் வாயிலாக அந்தத் துறையினர் கண்டறிந்த உண்மைகள், அந்தந்தத் துறைகளில் ஆய்வு நிகழ்த்தும் மற்றும் ஆய்வு பற்றி அறிய விரும்புகிறவர்களுக்கும் எளிதில் புரிந்துகொள்ளும் முறையில் சுருக்கமாக எடுத்துச் சொல்வது இன்றியமையாதது. பல்வேறு துறைகளில் ஆய்வுக் கட்டுரை எழுதுபவர்கள் அந்தந்தத் துறையின் சொல்லாட்சி மற்றும் குறிப்பிட்ட வடிவத்தில் அமைவதை வலியுறுத்துவர்.

ஒவ்வொரு துறையிலும் குறிப்பிட்ட கலைச்சொற்கள் பயன்படுத்தும் விதிமுறைகள் வரையறுக்கப்படுவது சாலச்சிறந்தது. சித்திரபுத்திரன்[4] (1989) குறிப்பிடுகையில் மனித சமுதாயத்தின் தேவைக்கேற்ப ஒரு மொழியின் சொல் தொகுதி வளர்ந்து கொண்டே செல்கிறது. அவையாவன கலை அறிவியல் சொல், இலக்கியச் சொல், வட்டார சமுதாயச் சொல் இணைந்து, சொல் தொகுதிகள் உருவாக்கப்படுகின்றன. மேற்கண்ட வகை களில் கலை அறிவியல் சொல்லாக்கம்தான் சொல் தொகுதியின் வளர்ச்சிக்குப் பெரும்பங்கு வகிக்கின்றன. அளவில்லாத கண்டு பிடிப்புக்கள் புதிய கோட்பாடுகள் கருத்துகள் வாயிலாக அறிவியல் புலம் வளர வளர மொழிகளில் கருத்துப் பரிமாற்றம் கடின மாகின்றது. மிகுந்த அறிவியல் தாக்கம் நிறைந்த ஒரு சமுதாயத் தினரோடு கருத்துப் பரிமாற்றம் செய்வது கடினமான ஒன்றாகிறது.

நாள்தோறும் புதுச்சொற்கள் தோன்றிக் கொண்டேயிருக் கின்றன. பழையன பல புதிய பொருள்களைப் பெற்றுத் தங்கள் பொருள் பரப்பை விரிவு செய்து கொள்கின்றன. தோன்றிய சொற்களில் சில வழக்குப் பெற்று நிலை பெறுகின்றன. சில வழக்கிழக்கின்றன. மேற்கூறிய கருத்துப்படி வழக்கிற்கு ஒரு சொல் விடப்படுமுன் அச்சொல்லை ஆராய்ந்து சிறந்தது என்று உறுதிசெய்து பயன்படுத்தத் தக்கது என்று சான்றளித்துச் சிறப்பகராதிகள் வெளியிடுவது மொழி வளர்ச்சிக்கு உகந்தது.[4]

**தேவைக்கேற்ப வடிவங்களும் கொடுக்கலாம்**

அறிவியல் சார்ந்த சிறப்புச் சொற்களும், சொல்லகராதி களும் இருந்தும், ஆய்வுக் கட்டுரைகள் வரைகையில்

குறிப்பிட்ட வடிவத்தில் இருப்பது சிறந்தது என்றும், எல்லோரும் எடுத்தாளவும், ஒரே கட்டுக்கோப்பில் கட்டுரைகள் இருக்கவும் வடிவமைப்புக் கொடுப்பதை - இராஜ்[5] *(1989)* வலியுறுத்துகிறார்.

அறிவியல் மொழிபெயர்ப்புப் பற்றி, திரு. சேதுமணி மணியன்[6] *(1989)* கூறுகையில் ''நமது மொழியை அறிவியல் சாரத்தால் வளப்படுத்தும் பணியில் மொழிபெயர்ப்பின் பங்கு பெரிது. ஆண்டுதோறும் கிட்டத்தட்ட 12 இலட்சம் கட்டுரைகளையும், இலட்சக்கணக்கான ஆய்வாளர்கள் கண்ட விபரங்களையும், முடிவுகளையும் தாங்கி வெளிவருகின்றன - புதிய கண்டுபிடிப்புகள், இயற்றல்கள் (*inventions*), புனைதல் (*Innovations*) மட்டுமன்று அவற்றைத் தொடர்ந்து எண்ணற்ற புதிய சொற்கள் சொற்றொடர்கள் உருவாகின்றன. இவை யனைத்தும் தமிழில் வரவேண்டுமென்பதே நமது இலக்கு. இவ்விலக்கில் தொடக்க முயற்சியே அறிவியல் நூல்களையும் பாடப்புத்தகங்களையும் அறிவியல் இதழ்களையும் தமிழில் தரும் முயற்சியாகும்'' எனக் குறிப்பிடுகிறார்.

மொழிநடை, சொல்லாட்சி, பெயராக்க நடை, கட்டளை வாக்கியப் பயன்பாடு, காலங்களுக்குப் பொதுவான சொற்றொடர்கள் - பண்புப் பெயர்கள் மலிவு, மறைபொருள் கொண்ட சொற்கள் தவிர்த்தல், கவர்ச்சியற்ற தன்மை என ''அறிவியல் மொழி''க்கான சிறப்புக் கூறுகளையும் இவர் எடுத்துச் சொல்லுகின்றார்.

**என்ன வளமில்லை நமது மொழியில்?**

தமிழர்கள் உலகெங்கணும் அறிவியல் துறைகளில் ஈடுபட்டுச் சாதனைகள் பல புரிந்து கொண்டிருப்பினும் அவர்கள் ஆய்ந்தறிந்தவற்றைத் தமிழில் வெளியிடும் ஆற்றல் பெறவில்லை. தமிழில் அறிவியற் கருத்துகளைத் தங்கு தடங்கலின்றி வெளியிடும் ஆற்றலை அளிக்க நாம் விரைந்து செயல்பட வேண்டும் என்பதுடன் தமிழையும் ஆற்றல் பெற வைக்க என்ன செய்யலாம் என்பதையும் சிந்திக்க வைக்கின்றார் விஜயலட்சுமி[7].

**பிறமொழி அறிவியல் இதழ்கள்**

இன்றைய அறிவியல் இதழ்கள் உலகின் அறிவியல் வளர்ச்சியிலும் குறிப்பாக மிக விரைவாக அறிவியல் கண்டு

பிடிப்புக்களைப் பிறருக்கு எடுத்துச் செல்வதிலும் குறிப்பிட்ட துறையில் - மீண்டும் முன்னேற்றத்தையும் - ஆய்வாளர் தொடர்புகளையும் ஏற்படுத்தப் பயன்படுகின்றன. அதிகமாக ஆங்கிலத்தில் பிரசுரமாவன. உலகெங்கும் இவை தற்போதைய இணைய தளங்களிலும் பிரசுரிக்கப்படுகின்றன. ஆங்கிலம் தவிர ஜெர்மன், ஜப்பானிய மொழிகளிலும் பல சிறந்த அறிவியல் இதழ்கள் சிறப்புறச் செயல்படுகின்றன. இவற்றின் மொழிபெயர்ப்புகளைக்கூட நாம் பயன்படுத்துமளவிற்கு எல்லாத் தொலைதொடர்புச் சாதனங்களும் வளர்ச்சியடைந் துள்ளன. உயர்கல்விக்குப் பின் ஆய்வு செய்த ஆய்வுகள் மட்டும், அதன்முன் பிரசுரிக்கப்படாதிருப்பின், சிறந்தது எனின் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. நடுவர் குழுவொன்று செயல் பட்டுத் தரமான அறிவியல் படைப்பு என ஒப்புதலளிக்கும். அதுபோலக் குறிப்பிட்ட வடிவத்தில் (*format*) கலைச்சொற்கள் பயன்பாடு (*technical terms*) மற்றும் பயன்படுத்தப்படும் அளவுகள் (*measurements*) இன்னும் கட்டுரை எழுதுபவர் களுக்கான சட்ட திட்டங்கள் (*Instruction of authors*) ஒவ்வொரு இதழும் வெவ்வேறு துறைகளுக்காக அமைந்திருக்கும் உயிரியல், இயற்பியல், கணிதவியல், தகவல் தொழில் நுட்பவியல், சூழலியல், தற்போது எண்ணற்ற இதுபோன்ற துறைகளுக்குள் தனித்தனியாகவும் இதழ்கள் அறிவியல் விளக்கங்களையும் புதுக் கண்டுபிடிப்புகளையும், தந்து உலகையே மாற்றி வருகின்றன. மனிதர்களுக்குள்ளே மிகச்சிறிய ஒரு குழு அறிஞர் களுக்கு மாத்திரம், பயன்படக் கூடியவையாய் வளர்ந்தால் போதுமா? நமது கல்லூரிகள், பல்கலைக்கழகங்கள், தொழில் மேம்பாட்டுக் கழகங்கள், வெவ்வேறு துறைகள் இவை அனைத்தும் அறிவியல் ஆய்விதழ்கள் தொடங்கலாமே! எளியனவாக எல்லோருக்கும் படித்துச் சுவைக்கத் தக்கதாக!

### அமரருக்கு அஞ்சலியாக அறிவியல் இதழ்

எளியதாய் நம்மைச் சுற்றியிருக்கின்றவை பற்றியும், அவைகள் பாதுகாப்பு பற்றியும், அவற்றின் பயன்கள், அழிந்துவரும் நிலைகள், அழிவினால் ஏற்படும் அபாயம் இப்படி எண்ணிறந்த அறிவியல் உண்மைகள் நாடோறும் தமிழர்கள் ஆய்வில் செய்தவையும், செய்ய வேண்டியவையும் இன்னும் இருக்கின்றன. அப்படியெனில் இளைய தலைமுறை யினை அறிவியல் ஆய்வாளர்களாக வளர்க்கவும் தமிழில் அறிவியல் உண்மைகளை உடனுக்குடன் உணர்த்தவும்

தமிழ் வளர்ச்சிக்காகவும் எளிய நடையில், மாணவர்கள்கூட, ஆய்வுக்கட்டுரைகள் எழுதுமளவில் அறிவியல் இதழ்களை, அமரர் ஆதித்தனார் நினைவாகவே தொடங்கினால் இன்னும் சாலச் சிறந்ததாகும். தொடங்கட்டும் புது சகாப்தமொன்று - இந்த நூற்றாண்டு விழாவில்.

**அடிக்குறிப்புகள்**


1. குழந்தைசாமி, வா.செ. (2005), ''உலகச் செம்மொழிகளும் தமிழும்'' மனோரமா இயர்புக் 2005, பக்கம் 90-99, மலையாள மனோரமா - கோட்டயம், கோழிக்கோடு - சென்னை.
2. அசோகமித்திரன் - 2005, தற்காலத் தமிழ் இலக்கியம், மேற்படிப் பக்கம் 119-122.
3. ச. அகத்தியலிங்கம் மற்றும் இராமசுந்தரம் (1989) வளர்தமிழில் அறிவியல், இரண்டாவது கருத்தரங்கக் கட்டுரைகள் தொகுப்பு, பதிபபாசிரியர்கள் உரை, பக்கம் - III மற்றும iV, அனைத்திந்திய அறிவியல் தமிழ்க் கழகம், தஞ்சாவூர் - 5.
4. சித்திரபுத்திரன், எச். (1989) ''அறிவியல சிறப்பகராதிகள'' வளர்தமிழில் அறிவியல், பககம் 430-453, அனைத்திந்திய அறிவியல் தமிழ்க கழகம் வெளியீடு.
5. இராஜ், எ.டி.எஸ., (1989), தமிழரின் ஆய்வுக் கட்டுரைகளுக்கு அருமையான வடிவமளித்தல : வளர்தமிழில் அறிவியல், பக்கம் 358-370, அனைத்திந்திய அறிவியல் தமிழ்க் கழகம், தஞ்சாவூர் - வெளியீடு.
6. சேதுமணி மணியன - 1989, அறிவியல் மொழி பெயர்பபு, வளர்தமிழில் அறிவியல், பககம் 385-399, மேறபடி.
7. விஜயலட்சுமி, ர. (1989), தமிழ்வழி அறிவியல் - வளர்தமிழில் அறிவியல், பக்கம 417-429, மேறபடி.

# மொழி வளர்ச்சியில் தினமணியின் பங்கு

**முனைவர் மா. களஞ்சியம்மாள்**

மேலை நாட்டாரின் வருகைக்குப் பின்பு தமிழ் மொழி வரலாற்றில் பெரியதொரு மாற்றம் ஏற்பட்டது. அவர்களுடைய தொடர்பால் தமிழ்மொழியில் சிறுகதை, புதினம், உரைநடை என்ற இலக்கிய வகைகள் தோன்றி வளர்ந்தன. அதற்குப் பேருதவியாக அமைந்தது அச்சியந்திரங்களின் அறிமுகம். உரைநடை வளர்ந்ததால் கலையியல், அறிவியல், வணிகவியல் போன்ற பல்வேறு துறைகளில் தமிழ்மொழி நவீன மொழியாக வளரத் தலைப்பட்டது. இருபதாம் நூற்றாண்டில் பத்திரிகைகள், வானொலி, தொலைக்காட்சி, திரைப்படம் ஆகியன சிறந்த மக்கள் ஊடகங்களாக உருவெடுத்தன. இத்தகைய தகவல் தொடர்புச் சாதனங்களுள் பத்திரிகையின் பங்கு குறிப்பிடத் தக்கதாகும். அவற்றுள் தினமணி தனக்கென்று தனிமுத்திரை பதித்து விளங்குகிறது. மக்கள் மத்தியில் விழிப்புணர்வை ஏற்படுத்தி வருவதோடு தமிழ்மொழியின் வளர்ச்சியில் அரும் பெரும் பணியாற்றி வருகிறது. தமிழ்மொழி வளர்ச்சியடை வதற்குத் தினமணி கையாளும் வழிமுறைகளும், உத்திகளும் குறித்த ஆய்வாக இக்கட்டுரை அமைகின்றது.

## தகவல் தொடர்புச் சாதனங்களின் வகைகள்

மக்களுக்கு உலகநடப்புப் பற்றிய செய்திகளைத் தரும் சாதனங்களை மரபுச்சாதனம், அச்சுச்சாதனம், மின்இயல் சாதனம் என்ற மூன்று வகைகளாகப் பிரிக்கலாம். அவற்றுள் அச்சுச் சாதனம் என்பது அச்சு எழுத்து மூலமாகச் செய்திகளைத தருவதாகும். இவை நாளேடுகள், வாரத இதழ்கள், மாத இதழ்கள் என்று பலபிரிவுகளாக அமைகின்றன. தினத்தந்தி, தினமலர், தினசரி, கதிரவன், தினகரன், நவஇந்தியா, ஜனசக்தி ஆகியன நாளிதழ்கள். இவை காலையில் வெளியிடப்படு வதால் காலை இதழ்கள் என்றும் கூறப்படும். மாலைமுரசு,

---

இணைப்பேராசிரியர், ஸ்ரீ பராசக்தி மகளிர் கல்லூரி, குற்றாலம

மாலை மலர், தமிழ் முரசு, குமரிமுரசு ஆகியன மாலையில் வெளிவருவதால் மாலையிதழ்கள் எனப்படுகின்றன. கல்கி, குமுதம், குங்குமம், ஆனந்தவிகடன் போன்றவை வாரம் ஒருமுறை வருவதால் வாரஇதழ்களாகக் கருதப்படுகின்றன. இவை தவிர மாதமிருமுறை இதழ்கள், மாதவிதழ்கள், காலாண்டு இதழ்கள், அரையாண்டு இதழ்கள், ஆண்டிதழ்கள் என்ற வகைகளிலும் இதழ்கள் வெளிவருகின்றன. வார, மாத, ஆண்டிதழ்கள் இலக்கிய வளர்ச்சிக்குத் துணை செய்கின்றன. சிறுகதைகள், தொடர்கதைகள் போன்றவை இவற்றில் இடம் பெறுகின்றன. நாளிதழ்களிலும் மொழி, இலக்கிய வளர்ச்சிக்குரிய கூறுகள் மிகுந்து காணப்படுகின்றன.

**இதழ்களில் மொழிப்பயன்பாடு**

தமிழ் மொழி, இலக்கிய வளர்ச்சியில் இதழ்கள், ஆற்றியுள்ள பணிகள் ஏராளம். இதழ்களில் பயன்படுத்தப்படும் தமிழ் வழக்கில் காலத்திற்கேற்பவும், அறிவியல், சமுதாய வளர்ச்சிக் கேற்பவும் புதுப்புதுச் சொற்கள், சொற்றொடர்கள், மொழி நடை போன்றவை தோன்றியுள்ளன.

ஒரு மொழியின் வளர்ச்சியினை அறியப்பயன்படும் கூறுகள் எழுத்துருவாக்கும் நிலைபேறாக்கம், புதுமையாக்கம் என்று மூன்று வகைகளில் அமைகின்றன. இம்மூன்று வகை களின் மூலமும் இதழ்கள் தமிழ்மொழி வளர்ச்சிக்கு உறுதுணையாக இருக்கின்றன. தொடக்ககால இதழ்களில் வடமொழி, ஆங்கிலம் ஆகிய மொழிச் சொற்கள் கலந்து எழுதப்பட்டன. செந்தமிழ், செந்தமிழ்ச்செல்வி, தமிழ்ப்பொழில் போன்ற இதழ்கள் இலககிய நடையைப் பின்பற்றுகின்றன. குமுதம், கல்கி, ஆனந்தவிகடன் போன்ற இதழ்களில் வரலாற்று நாவல்கள் இலக்கிய நடையிலும் ஏனையவை பிற நடையிலும் வெளி வருகின்றன. நாளிதழ்களில் பெரும் மாற்றத்தைச் செய்தவர் திரு.வி.க. ஆங்கிலக்கலப்பான நடையை மாற்றி, இனிய, எளிய தமிழ் நடையில் எழுதவேண்டும் என்ற ஆர்வத்தை வளர்த்த பெருமை இவரையே சாரும். மணிக்கொடி, இலக்கிய வரலாற்றிலும், உரைநடை வரலாற்றிலும் குறிப்பிடத்தகுந்த இடத்தைப் பெற்றுள்ளது. 'தமிழ்நாடு' பாமரர் தமிழுக்குப் பெருமையும் பொலிவும் சேர்த்த இதழாகும். இன்று இதழ் களில் பேச்சு நடையும், எழுத்து நடையும் கலந்து வருவதைக் காணலாம். பத்திரிகை அனைவராலும் படிக்கத்தக்க வகையில் அதன் நடை எளிமையாக இருக்க வேண்டும் என்னும் கருத்தை

முன்னிறுத்தியது 'தினத்தந்தி'. தமிழ்ப் பத்திரிகைகளில் பல புது மரபுகளைப் புகுத்தி மொழி வளர்ச்சிக்குத் துணைநிற்பதில் தினமணியின் பங்கும் போற்றுதற்குரியது.

## எழுத்துச் சீர்திருத்தம்

எழுத்துச் சீர்திருத்தத்தில் நாளிதழ்கள் முன்னோடியாக நிற்கின்றன. தினமணிப் பத்திரிகையில் எழுத்துருவாக்கம் பல நிகழ்ந்துள்ளன. மொழி முதலில் மெய்ம் மயக்கங்கள் வருவதைக் காணமுடிகிறது. (ஸ்டிரைக், ஸ்கூல்). வல்லின மெய்கள் மொழி யிறுதியில் இடம் பெறுகின்றன (பெஞ்ச், கோர்ட்). தமிழ்ச் சொல்லின் முதலில் வராத எழுத்துகள் தினமணியில் இடம் பெற்றுள்ளன (ரிக்ஷா, லஞ்சம்). தமிழ் வரிவடிவத்தின் பாணியில் ஏற்பட்டுள்ள மாற்றங்களைக் குறித்து ஓர் அறிமுகத்தை இப்பத்திரிகை செய்துள்ளது. பழைய கல்வெட்டுகளிலும், ஓலைச்சுவடிகளிலும் காணப்படும் தமிழ் வரிவடிவம் ஒழுங் கற்றதாக இருக்கும். சிறிய எழுத்து அதன் அருகிலேயே பெரிய எழுத்து என்ற அமைப்பு முறை காணப்படும். இந்த அழகியல் ரீதியில் தற்கால எழுத்துமுறை தோன்றியுள்ளது. சினிமாத்தலைப்புகள், இதழ்களின் தலைப்புகள், விளம்பரத் தலைப்புகள் போன்றவை விதவிதமான எழுத்து அலங்காரங் களோடு காணப்படுகின்றன. ஒடிந்தும், வளைந்தும், ஒழுங்கற்றும் காணப்படுகின்றன. இத்தகைய வரிவடிவப் பாணி மாற்றங் களைக் குறித்து ஓவியக் கலைஞர் ஆதிமூலம் கூறும் விளக்கங்கள பற்றி ''இப்படி இருந்த எழுத்து இப்படி ஆன கதை'' என்ற தலைப்பில் தினமணிப் பத்திரிகை வெளியிட்டுள்ள செய்தி பாராட்டுக்குரியதாக விளங்குகிறது. அக்கலைஞர் இவ்வெழுத்து களைக் 'கோட்டோவியம்' என்ற பெயரில் நவீனமும் தீவிரமும் கலந்த வடிவங்களில் உருவாக்கியுள்ளார்.

## புதுச்சொல்லாக்கம்

'தினமணி'யில் புதிய சொல்லாக்கத்தையும் காண முடிகிறது. சுழற்கோப்பை, பந்துவீச்சாளர், நடுவணரசு போன்ற புதுச் சொற்கள் இப்பத்திரிகையில் இடம் பெற்றுள்ளன.

ஆங்கிலச் சொற்கள் அப்படியே எழுத்துப்பெயர்த்தும் கொடுக்கப்பட்டுள்ளன. இன்போகாம், போலீஸ், டெஸ்ட், கமிஷனர், டைரக்டர் என்று, இன்று மக்களின் பேச்சு வழக்கில் கலந்து விட்ட ஆங்கிலச் சொற்கள் அப்படியே எடுத்தாளப்

பட்டுள்ளன. இரண்டு மொழிச் சொற்களைக் கலந்து கையாளும் போக்கும் காணப்படுகிறது.

''சார்லஸ் திருமணத்துக்கு ஓ.கே!

''டி.வி. பாருங்க கண்ணுகளா!''

''மிலிட்டரி கேண்டீன் பொருள்கள் வாங்க

'ஸ்மார்ட் கார்டு வசதி'

போன்ற தொடர்கள் சான்றுகளாகின்றன.

சில ஆங்கிலச் சொற்கள் தமிழில் மொழிபெயர்க்கப் பட்டுள்ளன. மின்னணு, வங்கி, மின்மாற்றி போன்ற சொற்கள் கலைச் சொல்லாக்கங்களாகத் திகழ்கின்றன. இவை தவிர அகங்காரம், விவாதமேடை, பிரமாண்டம், ஆராதனை, பிரார்த்தனை, பிரபலங்கள், சங்கமம், விமர்சனம், சுவராஸ்யம், சம்பவம் என்பன போன்று பிற மொழிச்சொற்களும் பயன்படுத்தப்படுகின்றன.

**மொழிநடை**

செய்திகள் அனைவருக்கும் எளிதில் புரியும் வண்ணம் எளிய நடையில் அமைந்திருப்பதையும் காணமுடிகிறது.

''சேதுசமுத்திரக் கால்வாய்த்திட்டம் நிறைவேற்றப்படும் போது ஆண்டுக்கு 24 லட்சத்து 16 ஆயிரம் பேருக்கு வேலைவாய்ப்புக் கிடைக்கும் என்று மத்திய கப்பல் போக்குவரத்து மற்றும் தரைவழிப் போக்குவரத்துத் துறை அமைச்சர் டி.ஆர். பாலு கூறினார்'' என்பது எளிய நடைக்குச் சான்றாகும்.

தலைப்புச் செய்திகளும், பிற செய்திகளின் தலைப்பு களும் தந்திநடை போன்று அமைந்துள்ளன.

''ஜார்க்கண்டில் நம்பிக்கை வாக்கெடுப்பு
ஒருநாள் தள்ளிவைப்பு : முதல்வர்''

''அரசு பணிகளில் கம்ப்யூட்டர் நிர்வாகமுறை:
இந்தியாவுக்கு உலகவங்கி ரூ. 2300 கோடி உதவி''

இலக்கியத் தரமிக்க நடையும் கையாளப்படுகிறது. மத்திய அமைச்சர் ப. சிதம்பரம் தாக்கல் செய்த இரண்டு பட்ஜெட் பற்றிக் குறிப்பிடும் பொழுது.

''கடந்த முறை கவித்துவம்
இம்முறை யதார்த்தம்''

என்ற தலைப்போடு செய்தி தரப்பட்டுள்ளது. மேலும்,

''உழைத்து முன்னேற ஊனம் தடையல்ல''

''சதுர்வேதி சாமியாரின் சட்ட ஆலோசகர் கைது''

''பரிசுக்குவியலுக்கு மத்தியில் பரதநாட்டியமாடும் மாணவி''

என்று எதுகை மோனைத் தொடையில் செய்திகளைத் தந்து தரமிக்கதாகவும் விளங்குகிறது. தனித்தனிச் சொற்களை ஆர்வத்தைத் தூண்டும் வகையில் அமைத்துத்தருதலும் காணப்படுகிறது.

''தேர்தல், மோதல், தீர்வு''

''நின்றோம், வென்றோம்''

**பிறபகுதிகள்**

பத்திரிகையின் முதல் பக்கத்தின் மேல்புறம் ஒவ்வொரு நாளும் மூன்று அல்லது இரண்டு படங்கள் போட்டு அதற்குத் தலைப்புகளோடு விளக்கமும் கொடுக்கப்படுகின்றது. அத்தலைப்புகள் ஒன்றோடு ஒன்று பொருத்தமுடையதாகச் சொற்களால் இணைக்கப்படுகின்றன.

''வியக்கும் விசிறி'' பறக்கும் பட்டம் வரவேற்கும் வான்மதி

''ஆராதனை'' வீராங்கனை பிரார்த்தனை''

மணமேடை என்ற பகுதியில் மேல்புறத்தில்

''இதயங்களின் இணைப்பு இல்லறத்தின் பிணைப்பு''

என்று செய்திக்கு ஏற்ற வகையில் தலைப்புப் போன்று அமைந்துள்ளது. அறிவுறுத்தலாகவும் சந்த நயத்துடன் கவிதை போன்றும் அமைந்துள்ளது.

''பசங்களா... பரத் அண்ணாவைப் பார்த்துக் கத்துக்குங்க''

''பிடிக்குறாங்க... பிடிக்குறாங்க... டோய்''

என்பன போன்ற துணுக்குச் செய்திகளில் பேச்சுவழக்குப் பயன்படுத்தப்பட்டுச் சுவையும், ஆர்வமும் மிக்கதாக விளங்குகின்றன.

நாட்டுமக்களின் மூட நம்பிக்கைகளையும், ஆடம்பர மோகங்களையும் சுட்டிக்காட்டும் வகையில் கிண்டல் நடையும் இடம் பெற்றுள்ளது.

ஜவுளி நிறுவனங்களின் வியாபாரத் தந்திரத்தைப்புரிந்து கொள்ளாமல், ஒவ்வொரு சமயங்களில் ஒவ்வொரு நிறப் புடவைகள் விறுவிறுப்பாக வாங்கப்படுகின்ற மூடநம்பிக்கை களைக் குறித்து வெளியிடப்பட்டிருக்கும் செய்தி அங்கதச் சுவையோடு அமைந்துள்ளது.

''மவுசு அதிகரிக்கும் மஞ்சள் சேலைகள்
சகோதரர்களுக்கு வந்தது செலவு''

'சேனல்சேதி' என்ற தலைப்பில்
''ஜாக்பாட் ஜாக்கெட்!''

என்று கொடுக்கப்பட்டுள்ள செய்தி ஜெயா டி.வியில் நடிகை குஷ்பு நடத்தும் நிகழ்ச்சியைப் பல பெண்கள் பார்ப்பதற்குக் காரணம் அவர் அணிந்து வரும் ஆடை, ஆபரணங்களுக் காகவே காண்பதாக எடுத்துக்காட்டுவதற்காகக் கொடுக்கப் பட்டுள்ளது. குஷ்பு அணிந்து வந்த ஜமிக்கி வேலைப் பாட்டுடன் கூடிய சட்டை மகளிரிடம் சுவாராஸ்யமாகப் பேசப்பட்டதை இச்செய்தி குறிப்பிடுகிறது.

தினமணியின் முதல் பக்கத்தில் இடதுபக்கம் இடம்பெறும் ''அடடே! ...மதி'' என்ற பகுதியும் சிரிப்பினை வரவழைப்பதோடு சிந்தனையைத் தூண்டும் வகையில் அமைந்துள்ள நடைக்குச் சான்றாக விளங்குகிறது.

''கூட்டணி ஆட்சி வேண்டும் என்று கேட்கிறாயே... நீ என்ன எனக்கு மகனா, மருமகனா, மாமனா, மச்சானா, பேரனா, கொள்ளுப்பேரனா.. அல்லது குறைந்த பட்சம் தூரத்து உறவா...?! எந்த உரிமையில் கேட்கிறாய் கூட்டணி?!' என்ற பகுதி அரசியலில் வாரிசுகள் இடம் பெறுவதைக் கிண்டலாகச் சுட்டிக்காட்டுகிறது.

**ஆன்மீகச் செய்திகளில் தமிழ்**

நாள்தோறும் இரண்டாம் பக்கத்தில் 'ஆன்மீகச் சிந்தனை' என்ற பகுதியில் 'தினசரி தியானம்' என்று ஸ்ரீமத்சுவாமி சித்பவானந்தரின் கருத்து இடம்பெறுகிறது. அக்கருத்தோடு தொடர்புடையதாகத் திருக்குறள், தாயுமானவர் பாடல்வரிகள், மாணிக்கவாசகரின் பாடல் வரிகள் என்று ஒவ்வொரு நாளும் ஒன்று இடம் பெறுகின்றது. இது தவிர வெள்ளிக்கிழமை தோறும் வரும் 'வெள்ளிமணி' என்ற இணைப்பில் சமயம்

சார்ந்த செய்திகள் வெளிவருகின்றன. இவை சமயத் தொடர்பான தமிழ் வளர்வதற்குத் துணை செய்கின்றன.

**சமூகச் செய்திகளில் தமிழ்வளர்ச்சி**

தினமணியின் ஆறாம் பக்கத்தில் 'தலையங்கம்' இடம் பெறுகிறது. இப்பத்திரிகை பாரதியாரின் நினைவு நாளில் தோன்றிய காரணத்தால் தலையங்கத்தின் மேலே,

> **''நிமிர்ந்த நன்னடை நேர் கொண்டபார்வை**
> **நிலத்தில் யார்க்கும் அஞ்சாத நெறிகள்''**

என்று பாரதியாரின் கவிதை வரிகளைக் கொண்டு அமைந்துள்ளது. தலையங்கத்தின் கீழ்ப்பகுதியில், தலையங்கச் செய்தியோடு தொடர்புடையதாக நாள்தோறும் ஒரு குறள் கூறப் பட்டுள்ளது. இத்தன்மை இலக்கியவாதிகளை மறக்காமல் போற்றும் பத்திரிகையின் பண்பினைப் படம் பிடித்துக் காட்டுகின்றது. மேலும் இப்பக்கத்தில் இரண்டு கட்டுரைகள் வெளியிடப்படுகின்றன. அவை சமூகம், பண்பாடு, அரசியல் சார்புடையதாக விளங்குகின்றன. நடை அவற்றின் தலைப்புகள் கவர்ச்சியாகவும், தரமானதாகவும் அமைந்துள்ளன.

> **''சிறுத்தையை அடக்கும் சிங்கம்''**
>
> **''கூசுவது கூசாமை பேதமை''**

என்று தலைப்பே தமிழ் மொழியின் தனித்தன்மையினைக் காட்டுவதாக விளங்குகிறது. வியாழக்கிழமைகளில் வெளிவரும் 'நூல் அரங்கம்' என்ற பகுதி தலைசிறந்த படைப்பாளி ஒருவருடைய இலக்கியத்திறனை எடுத்துக் கூறுவதாகவும் புதிதாக வெளிவந்துள்ள பல நூல்களைப் பற்றிய அறிமுக மாகவும் அமைந்திருக்கிறது. இப்பகுதியில் அந்தவாரம் நடந்த கருத்தரங்கம், சொற்பொழிவுகள், நூல் வெளியீடுகள், விவாத மேடைகள் போன்றவற்றை எடுத்துரைக்கின்றன. இவை தமிழ் மொழியின் வளர்ச்சிக்குப் பெருந்தூண்டுகோல்களாக விளங்குவன.

**கலையியல் தொடர்பான செய்திகளில் தமிழ்**

'கலைமணி', 'ஞாயிறு கொண்டாட்டம்' ஆகிய பகுதிகளில் இசை, நடனம், ஓவியம், திரைப்படம் பற்றிய செய்திகளை அழகான தமிழில் தருகின்றது. 'ஞாயிறு கொண்டாட்டம்' பகுதியில் ''கண்பேசும் வார்த்தைகள்'' என்ற தலைப்பில் நா. முத்துக்குமார் தம்முடைய அனுபவங்களைக் கூறுகின்றார்.

ஒரு திரைப்படப் பாடல் இயற்றுவதில் தாம் பெற்ற அனுபவத்தை அருமையான தமிழில் விளக்குகிறார். ''தமிழர்களின் வாழ்வு சடங்குகளால் ஆனது. சடங்குகள் பாடல்களால் ஆனவை. பிரபஞ்சப்பெருவெளியில் ஒரு புள்ளியான நாம் பிறப்பது முதல் பூமிக்குள் புதைந்து நம் அகங்காரம் அடங்குவது வரை, நம் ஒவ்வொரு பருவமும் ஒவ்வொரு செயல்களும் சடங்குப் பாடல்களிலிருந்தே நம் உணர்ச்சியைக் கடன் வாங்கிக் கொள்கிறது'' என்ற 'காதல்' திரைப்படப்பாடலுக்கு அவர் தரும் விளக்கம் தமிழின் தரத்தினை எடுத்துக்காட்டுகிறது.

மேலும் 'விவாதமேடை' என்ற பகுதியில் எதிர்காலப் படிப்பைத் தீர்மானிக்க வேண்டியவர்கள் மாணவர்களா! அல்லது அவர்களது பெற்றோர்களா!'' என்பது போன்று கேள்விகளைத் தொடுத்து அவற்றிற்கு வாசகர்களின் பதிலைக்கேட்டு வெளியிடுகிறது. இது பொதுமக்களையும் தரமான தமிழில் எழுதுவதற்குத் தூண்டுவதாக அமைகிறது.

### வணிகச் செய்தியில் தமிழ்

வணிகம் தொடர்பான கேள்விபதில் பகுதி வணிகவியலில் தமிழ்ப்பயன்பாடு பற்றி அறிந்து கொள்ளும் வகையில் வெளிவருகிறது ''வங்கி டெபாசிட்டுகளைவிட போஸ்ட் ஆபீஸ் டெபாசிட்டுகளில் வட்டி சிறிதளவு கூடுதல்தான். போஸ்ட் ஆபீஸ் மாதாந்திர வருமானக்கணக்கு 6 வருடத்தில் தான் முதிர்ச்சி அடைகிறது. கிசான் விகாஸ் பத்திரம் 8 வருடம் 7 மாதங்களில் முதிர்ச்சி அடைகிறது'' என்று ஆங்கிலச் சொற்களை அப்படியே எழுத்துப் பெயர்த்து வணிகம் தொடர்பான செய்திகள் தரப்படுகின்றன.

### அறிவியல் செய்திகளில் தமிழ்

மருத்துவம், வாழ்வியல் தொடர்பான செய்திகள் பல இடம் பெற்றுள்ளன. மேலும் 'சிறுவர்மணி'யில் பல சிறுவர்களுக்குப் புரியும் வகையில் அறிவியல் செய்திகள் எளிய தமிழில் விளக்கப்படுகின்றன.

### இலக்கியத்தமிழ்

ஞாயிற்றுக்கிழமை வெளிவரும் தினமணிக் கதிரில் சிறுகதைகள், கட்டுரைகள், தொடர்கதைகள் போன்றவை இலக்கிய வளர்ச்சிக்குத் துணை புரிகின்றன.

**முடிவுரை**

தினமணிப் பத்திரிகை உலகச் செய்திகளை மக்களுக்கு எடுத்துரைப்பதோடு தமிழ்மொழி, தமிழ் இலக்கியம் வளர் வதற்கும் பெருந்தொண்டாற்றி வருகிறது. எழுத்துச் சீர்திருத்தம், புதிய சொற்களை உருவாக்குதல், புதிய சொற்றொடர்களை அமைத்தல் என்று பல வகையில் தமிழ்மொழியின் வளர்ச்சிக்குத் துணை செய்கின்ற வகையில் செய்திகளை வெளியிடுகிறது. கலைத்துறை, வணிகத்துறை, மருத்துவத்துறை, அறிவியல் என்று பல துறைகளிலும் வரும் செய்திகளில் தமிழைத் தினமணி பயன்படுத்தும் விதம் இன்றையப் பயன்பாட்டுத் தமிழுக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது.

# தமிழ் வளர்ச்சியில் இதழ்கள்

நா. செல்லத்துரை[1]
நா. விஜயலெட்சுமி[2]

இயல் இசை நாடகமென இருந்த முத்தமிழ்ப் பாங்கு. இன்று 'நாற்றமிழ்' என்ற நறுமணத் தமிழாக அமைந்து இதழ்களால் மனிதர்களிடம் 'வாசம்' புரிந்து கொண்டுள்ளது. வாசித்தலைச் ''சுவாசம்'' என்ற கொள்கையாகக் கொண்டுள் ளோர்க்கு இக்கால இதழ்கள் இனிய காற்றினை வாரி வழங்கு கின்றன. மலருக்கு இதழ்கள் பொலிவையும் எழிலையும் தருகின்றன. தமிழுக்கு இதழ்கள் பெருமையையும் ஏற்றத் தினையும் தருவதோடு வளர்ச்சிக்கு வழி வகுக்கின்றன. மலர் களிலுள்ள இதழ்கள் வாடி, சருகாகி உதிர்ந்து மண்ணுக்கு உரமாவதுண்டு. மங்கலமாக, மாதர்கள் விரும்பும், ஆண்டவனையும் அலங்கரிக்கும் மலர்கள் செய்யும் பெருமையை இதழ்களும் இன்று தமிழ் மொழிக்குச் செய்து வருகின்றன. பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க் கணக்கு நூல்கள், காவியங்கள், காப்பியங்கள், கதைகள், கவிதைகள் எனக் காலத்திற்கேற்பத் தமிழ் தத்தெடுக்கப்பட்டு வளர்ந்த நிலை உன்னதமானது. இன்றோ இதழ்களுக் கிடையே தமிழ் இன்பமாய் வாழும் நிலையை இங்குக் காண்போம்.

**இதழ் என்பதன் பொருள்**

'டையனர்ஸ்'' என்ற பழைய இலத்தீன் மொழிச் சொல்லில் இருந்து பிறந்தது 'சர்னல்'. இதற்கு 'அன்று' என்று பொருள். 'சர்னல்' 'ஜர்னல்' என்றே அழைக்கப்படுகிறது. ஜர்னல் என்றால் அன்றாடம் நடந்ததை எழுதி வைக்கும் ஏடு என்று பொருள்படும். இப்போது 'ஜர்னல்' என்பது இதழ் களைக் குறிக்கிறது. பூவின் இதழ்களை மடல் எனக்கூறுவர். தாழைமடல், தாமரைமடல் என்ற சொல்லாட்சி தமிழ்

[1]முதுநிலை விரிவுரையாளர், [2]விரிவுரையாளர்
மாவட்டக் கல்வி மற்றும் ஆசிரியர் பயிற்சி நிறுவனம், புதுக்கோட்டை.

இலக்கியங்களில் பயின்று வந்துள்ளது. 'மடலேறுதல்' என்ற ஒரு நிகழ்வினைத் தொல்காப்பியம் குறிப்பிடடுள்ளது.

**இதழின் தோற்றமும் வளர்ச்சியும்**

இந்தியாவில் 80-க்கும் மேற்பட்ட மொழிகளில் நாளிதழ்களும் பருவ இதழ்களும் வெளிவந்து கொண்டிருக்கின்றன. 1816-இல் "பெங்கால் கெசட்" என்ற இதழே இந்தியர் தொடங்கிய முதல் இதழாகும். வங்காளத்தைச் சேர்ந்த கங்கநாதர் பட்டாச்சார்யா என்பவரால் தொடங்கப்பட்டது. 1831-ஆம் ஆண்டு "தமிழ்ப்பத்திரிகா" என்ற திங்கள் இதழ் சென்னைக் கிறித்தவ சமயப் பரப்புச் சங்கத்தாரால் வெளியிடப் பட்டது. 1855-இல் பெர்சிவல் என்னும் கிறித்தவர் வெளியிட்ட "தினவர்த்தமானி" என்ற வார இதழ் செய்தி, சமயம், இலக்கியம், அறிவியல் போன்ற பல துறை விளக்கங்களைக் கொண்ட முழுமை பெற்ற முதல் வார இதழாகும்.

தமிழின் முதல் செய்தித்தாள் என்ற பெயரைப் பெற்றது. "சுதேசமித்திரன்" ஆகும். இதனைத் துவக்கியவர் ஜி. சுப்பிரமணிய ஐயர். 1882-இல் வார இதழாகத் துவங்கிப் பிறகு வாரம் மூன்று முறை வெளிவந்து, 1899-இல் இது ஒரு நாளிதழாகியது. 1917 வரை "சுதேசமித்திரன்" மட்டுமே தமிழ் நாளிதழாக வெளிவந்துள்ளது. 1917-இன் இறுதியில் திரு.வி.கல்யாண சுந்தரனாரை ஆசிரியராகக் கொண்டு "தேசபக்தன்" என்ற இதழ் வெளிவந்தது. 1904-இல் பாலகங்காதர திலகரின் தொண்டர்கள் சிலருடன் சேர்ந்து பாரதியார் "இந்தியா" என்ற தமிழ் வார இதழையும் "பாலபாரதி" என்ற ஆங்கில வார இதழையும் துவக்கினார். 1917-இல் "திராவிடன்" என்ற இதழ் தொடங்கப் பட்டது. 1926-இல் டாக்டர் பி. வரதராஜுலு நாயுடு "தமிழ்நாடு" என்ற நாளிதழைத் தொடங்கினார். 1934-ஆம் ஆண்டு டி.எஸ். சொக்கலிங்கம் அவர்களால் தினமணி நாளிதழ் துவங்கப்பட்டது. சி.பா. ஆதித்தனார் அவர்களால் தினத்தந்தி, மாலைமுரசு என்ற இரு நாளிதழ்கள் 1942-இல் தொடங்கப் பட்டன. நாளிதழ்களில் இன்று வரை தனியிடம் பெற்று மிகவும் பிரபலம் அடைந்தவை இவை இரண்டும் தான். செய்திகள், சிறுகதைகள், நகைச்சுவை துணுக்குகளுக்கு இடம் கொடுத்துப் பல பருவ இதழ்கள் வெளிவந்தன. இன்று வரை வெளிவந்து கொண்டுமிருக்கின்றன. இவற்றுள் கல்கி, குமுதம், ஆனந்த விகடன், ராணி போன்றவை குறிப்பிடத்தக்கனவாகும்.

மத இதழ்கள், சாதி இதழ்கள், இலக்கியம் கலை பண்பாடு குறித்த இதழ்கள் என நாட்டு நலன் கருதிய சமுதாயச் சீர்திருத்த இதழ்கள் வளர்ச்சியடைந்து கொண்டே வந்து இன்று கல்வி, இளையோர், மகளிர், விளையாட்டு மற்றும் ஆன்மீகம், மருத்துவத்துறை அறிவியல் அரசியல் சார்ந்த இதழ்கள் எனக் கிளை பரப்பிப் பூப்பூத்துக் காய்த்துக் கனிகள் குலுங்கும் மரங்களென இன்று இதழ்களின் வளர்ச்சி நிலை மக்களுக்குப் பயன்பட்டு வருகின்றது.

**அரசியல் பயன்பாடு**

'யங் இந்தியா'' என்ற ஆங்கில இதழையும் ''நவ ஜீவன்'' என்ற குஜராத்தி இதழையும் காந்தியடிகள் தொடங்கக் காரணம் இளைஞர்களைத் தட்டியெழுப்பிச் சுதந்திர விழிப்புணர்வினை ஏற்படுத்தத்தான். மகாத்மாவைப் பொறுத்தவரை ''இதழியல்'' என்பது சமுதாய உயர்வுக்குரிய ஒரு கருவியாகக் கருதப் பட்டது. 1933-இல் ''ஹரிஜன்'' பத்திரிக்கையைத் துவக்கினார். அரசியல், சமுதாய, மனிதவள வளர்ச்சிக்கு அடிப்படையாக ஒரு மைல் கல்லாக விளங்கியது இது. பாரதியாரின் படைப்பாக்கங்கள் அனைத்தும் விடுதலை வேட்கையையும் சமுதாய ஆக்கங் களையும் கருத்தில் கொண்டவை. அதனை அப்படியே மக்களின் மனத்தில் விதைத்த பெருமை இதழ்களையே சேரும்.

அடிமை நாட்டில் அரசியல் பற்றி அறிவித்த இதழ்கள் ஒரு கட்டுப்பாட்டுக்குள் இயங்க வேண்டிய நிலையில் இருந்தன. நியாயமான செய்திகளைக் கூட வெளியிட உரிமை யில்லாத நிலை அப்போது இருந்தது. அடிக்கடித் தடை செய்யப் பட்ட இதழ்கள் ஏராளம். இன்று நாம் சுதந்திரத் திருநாட்டில் அடிப்படை உரிமைகள் பெற்று வாழுகிறோம். அன்று வணிகம் செய்ய வந்து அரசியல் பண்ணிய ஆங்கிலேயர் களுக்கு எதிராக நாட்டு நலனில் அக்கறைகாட்டிய இதழ்கள் இன்று அரசியல் பண்ணும் ஆட்சியாளர்கள் வியாபாரிகளாக மாறிக் கொண்டுவரும் அவலத்தையும் வெளிச்சம் போட்டுக் காட்ட உதவிக் கொண்டுள்ளன.

இன்று தமிழ்நாட்டில் தமிழ் மொழியில் புற்றீசல் போல எண்ணற்ற இதழ்கள் வெளிவந்தும் அழிந்து கொண்டும் உள்ளன. காலத்திற்கேற்ப, சமுதாய நோக்கோடு மக்களின் மனங்களை வளப்படுத்தும் இதழ்கள் தமிழுக்குப் பெருமை சேர்க்கின்றன. தாமும் அழியாது வாழ்ந்து கொண்டு என்றென்றும்

அழியாத தமிழையும் வளர்த்துக் காத்துப் பெருமைபபடுத்து கின்றன. சுயநலத்தோடு ஆதாயம கருதி மக்களின் உணர்வு களை மதிக்காது பணப்பயனை மட்டுமே குறிக்கோளாகக கொண்டு வெளிவரும் பல இதழ்கள் காலப்போக்கில் காணாது போய்விடுகின்றன.

## இதழியல் ஒரு தகவல் சாதனம்

கூடி வாழும் ஒரு சமூக விலங்குதான் மனிதன். தன்னைப் பற்றியும் பிறரைப் பற்றியும் அறிய ஆர்வம் காட்டாத மனிதனே இருக்க முடியாது. நாட்டு நடப்புகளையறிய விரும்பாத மனிதர்கள் யாருமில்லை. நேற்று என்ன நடந்தது? இன்று என்ன நடக்கிறது? நாளை என்ன நடக்கும? என்பதை அறிய மனிதன் ஆசைப்படுவது இயற்கை. முரசு, தெருக்கூத்து நாடகங்கள் மூலம் செய்திகள் கருத்துகள் மற்றவர்களுக்குப் பரிமாறப்பட்டன. இதனை மரபு வழிச் சாதனக்கருத்துப் பரிமாற்றம் என்பர். இன்றும் சிலவிடத்துச் சில காலங்களில் இப்பரிமாற்ற முறை நடந்து கொண்டுதானுள்ளது. அறிவியல் வளாச்சியால் தோன்றிய அச்சு இயந்திரங்களால் வியக்கத்தக்க மாற்றங்கள் விரைந்து ஏற்பட்டன. அதில் ஒன்றுதான் இதழியல் களின் தோற்றமும் வளர்ச்சியும்.

இதழ்களின் தாக்கத்திற்குட்படாத எந்தத் துறையும் இன்றில்லை. வானொலி, தொலைக்காட்சி முதலியன அரசு ஆதரவில் அரசுக் கட்டுப்பாட்டில் பெரும்பாலும் இயங்குகின்றன. சில இதழ்கள் தாம் சார்ந்த இயக்கங்கள் நிறுவனஙகள் நலன் கருதியே இயங்குகின்றன. எந்த வகையிலும் பிறர் கட்டுப் பாட்டிற்கு உட்படாமல் சுதந்திரமாகச் செய்திகளையும் கருத்து களையும் பரப்பும் இதழ்களும் உள்ளன.

## தமிழ் வளர்ச்சியில் இதழ்களின் பணி

தற்காலத்தில் வெளிவரும் ஒவ்வொரு நாள், வார, மாத இதழ்கள் அனைத்துமே தமிழ் வளாச்சிக்குத் தங்களால முடிந்தளவு பாடுபட்டு வருகின்றன என்பது உண்மை. ஏதோ ஒரு வகையில் தமிழ் வளர்ச்சிக்குக் காணிக்கை செலுத்தும் பணியைச் செய்து வருகின்றன.

வழக்கொழிந்து வரும் பீர்பால் அக்பர், தெனாலிராமன் கிருஷ்ணதேவராயர், முல்லா கதைகள, பரமாாத்த குருகதை, அறிவு நல்கும் நீதிக் கதைகள் இன்று குழந்தைகளிடையே

சென்றடையப் பல மழலையர்களுக்கான இதழ்கள் வெளிவரு கின்றன. குறிப்பாக ஒவ்வொரு நாளிதழும் ஒரு குழந்தைகள் சிறப்பு மலரைத் தற்காலத்தில் வெளியிட்டுப் பெட்டிச்சாத்தானின் (தொலைக்காட்சி பெட்டி) பிடியிலுள்ள பிள்ளைகளை விடுவிக்க முயன்று வருகின்றன. தினமணி-சிறுவர் மணி, தினமலர்-சிறுவர் மலர், ஆனந்த விகடன்-சுட்டிவிகடன் இவைகளைத் தவிர அம்புலிமாமா, கோகுலம் துளிர், அரும்பு, விஞ்ஞானச் சிறகு, விஞ்ஞானக் கதிர் போன்ற இதழ்கள் மேல்நிலைப்பள்ளி மாணவர்களும் தெரிந்து கொள்ள வேண்டிய பல அரிய அறிவியல், ஆன்மீகம், பண்பாடு பற்றிய பல செய்திகளை எளிய முறையில் வெளியிட்டுத் தமிழ்ப் பணியாற்றி வருகின்றன.

வார இதழ்கள் குறிப்பாகக் கல்கி, குமுதம், ஆனந்த விகடன் போன்றவைகளில் கவிதைகள், ஹைக்கூ கவிதைகள் நாட்டுப்புற இலக்கியங்கள், எழுதாத வாய்மொழி இலக்கியங்கள் தலைநிமிர்ந்து வாழ்ந்து மறைந்த தமிழறிஞர்கள், விஞ்ஞானிகள், கவிஞர்கள், புலவர்கள் அரசியல்வாதிகள் ஆன்மீகவாதிகள் அவர்கள் துள்ளித்திரிந்த இடங்களையும் வாழ்ந்த காலங் களையும் இளைய தலைமுறையினருக்கு எடுத்துக்காட்டும் பணியைச் செய்து வருகின்றன. மகாபாரதம் படிக்க மலைப்பாக உள்ளதா? இக்கால இளைஞர்களே! வாருங்கள்! பாண்டவர் பூமியைப் படிக்க வாருங்கள்! எளிமையாக இனிமையாக வாராவாரம் தருகிறோம் எனப் பணிபுரிந்து வருவதைக் காணலாம். பரமாத்வாம் கண்ணன் கதைகள் ஏராளம். கண்ணனும் காலத்திற்கு ஏற்பக் கவிதையாகச் சலிப்பின்றி வாரா வாரம் விஜயம் செய்கிறார் இதழ்கள் மூலம். தூய தமிழில் பேசத் தூய தமிழ்ச் சொற்களை அறிமுகப்படுத்துவதுடன் தமிழுக்குச் சிறப்பு செய்தும் கட்டுரைகள் இன்று பல இதழ்களில் வெளிவரு கின்றன. புதிர்கள், குறுக்கெழுத்துப் போட்டிகள், வினாவிடைப் பயிற்சிகள் மாணவர்களுக்குப் பயன்படுகின்றன.

அமுதசுரபியென அள்ள அள்ளக் குறையாத தித்திக்கும் **கற்கண்**டென **முத்தாரம்** அணிந்த **தேவி**யாக **மகுடம்** சூடாத மகாராணியாக **ஆனந்த விகடன்** பலவற்றை அள்ளித் தந்து **கல்கி**யென உலகில் வலம் வந்து வாசகர்களனைவர்க்கும் மங்கலக் **குங்குமம்** தந்து படித்தலைப் **பாக்கிய**மெனக் கருதும் மாந்தர்களைனவரது மனதிலும் **அம்புலிமாமா**வால் **குமுதமாக**, **தாமரை**யாக மலரும் **மங்கையர் மலரா**க **கலைமகள்** அருள் பெற்றுத் **துளிர்** விட்டு **அரும்பா**கி **விஞ்ஞானச் சிறகா**ல் **கதிர்**

வீசி, **கசடறக்கற்கப்** பல ஏற்றம் பெற்று இன்றைய உலகில் வலம் வரும் இதழ்கள் நடப்புச் செய்திகளோடு புதுமைகள் பல புகுத்திப் **புதிய பார்வையில் அன்பொளி** பரப்பித் தன்னம்பிக்கை தந்து மனித உரிமைகளை நிலைநாட்டி வருகின்றன. நாளிதழ் களாகத் தினமும் மணியடித்து, **தந்தி**யெனச் செய்திகளை முநதித் தந்து **மாலையில் முரசு** கொட்டி வெளி வரும் **உண்மை** விளம்பி என **விடுதலை** உணர்வுடன் பூமியில் **தினத்தூது** என வெளிவந்து கொண்டுள்ளன. கல்வெட்டுச் செய்திகள் தொடங்கிக் கணினித் தமிழ் வளர்ச்சி வரை பல புதிய செய்திகளை மக்கள் அறிந்து தம் பொது, அறிவியல் அறிவுடன் தமிழறிவையும் வளர்த்துக் கொள்ள உதவுகின்றன.

**முடிவுரை**

தமிழுக்கும் மக்களுக்கும் பாலமாக இருந்து நம் மகாகவியும புரட்சிக்கவியும் வளர்த்த இன்பத்தமிழை இதழ்களும் வளர்த்து வருகின்றன என்பதைக் கணினியில் இன்று தமிழ் மொழி பெற்றுள்ள சிறப்பிடத்திலிருந்து அறிந்து கொள்ளலாம். ஏராளமான படைப்பாளிகளை உருவாக்க, வெளிப்படுத்த உதவும் இதழ்கள் இன்று ஏராளம். ஊக்குவிப்பு, பாராட்டு, பரிசு இம்மூன்றையும் தந்து கவிஞர்களை, எழுத்தாளர்களை உலகினுக்குத் தரும் இதழ்கள் தமிழ் வளர்ச்சிக்கு நீருற்றிப் பாதுகாத்துத் தமிழின் புகழை உலகெங்கும் அறியச் செய்துவரும் உண்மையை உணர்ந்து மகிழ்வோம். புரவலர் களாலும், புலவர்களாலும், கவிஞர்களாலும் வளர்ந்த தமிழ்மகள் இன்று இதழ்களின் துணையால் வளமுற வாழ்ந்து எணணற்ற படைப்பாளிகளைப் பெற்றுத் தந்து கொண்டு பெருமை அடைவதைக் கண்டு களிப்போம்.

**துணை நூல்கள்**

1 சாமி.அ மா, ''தமிழ் இதழ்கள் தோற்றம் வளர்ச்சி'', நவமணி பதிப்பகம், சென்னை - 1987.

2. சோமலே, ''தமிழ் இதழ்கள்'', சென்னைப் பலகலைககழக வெளியீடு, சென்னை - 1975.

3. பேராசிரியா ஜெ. ஸ்ரீசந்திரன், ''தமிழ் இலக்கிய வரலாறு'', தமிழ்ப பேராசிரியர் (ஓயவு), வாத்தமானன் பதிப்பகம, சென்னை, பததாம பதிப்பு : ஜுலை 2002

# தமிழ் வளர்ச்சியில் தமிழ் மின்(இணைய) இதழ்கள்

**முனைவர் இரா. விஜயராணி**

புதிய புதிய கண்டுபிடிப்புகள் நாளுக்கு நாள் பெருகிக் கொண்டே இருக்கின்றன. தகவல் புரட்சியுகத்தில் நாம் வாழ்ந்து கொண்டிருக்கின்றோம். இத்தகு சூழலில் ஒரு மொழியினத் தவரின் சமூக வளர்ச்சியையும் கருத்தில் கொள்ள வேண்டும். ஏனெனில் ஒரு சமூகமோ, நாட்டவரோ காலத்தின் மாற்றத்தில் ஏற்படும் அறிவியல் கண்டுபிடிப்புகளை மறுப்பின் அச்சமூகத் தாரால் கால வெள்ளத்தில் நிலைத்திருக்க முடியாது.

உலகத்தாருடன் இணைந்து, இயைந்து வாழ வேண்டும். எனவே இந்த அறிவியல் யுகத்தோடு மனிதரும், தம்முடன் சமூகம், மொழி போன்றவற்றைப் பிணைத்துக் கொள்ள வேண்டும். அவ்வகையில் தமிழ்மொழியை உருவாக்குவது நம் கடமையாகும். மனிதரிடையே சைகை மொழி வாயிலாக நிகழ்ந்த கருத்துப் பரிமாற்றம் அச்சின் வருகையாலும், அறிவியல் கண்டுபிடிப்புகளாலும் புதியதொரு பரிணாம வளர்ச்சியடைந்தது. ஏட்டில் இருந்த தமிழ் இன்று இணையத்தில் மின் இதழாக, இணையப் பக்கமாக உலாவருகிறது.

### தமிழ் மின் இதழ்கள் (Tamil e-journals) அறிமுகம்

1995-ஆம் ஆண்டு இணையத்தின் தொடக்கம் என்று கூறலாம். மின் இதழ் பற்றிய ஆய்வுகளும் அதற்கான முயற்சி களும் 1995-ஆம் ஆண்டில் அமெரிக்காவில் கலிபோர்னியா மாகாணத்தில் மேற்கொள்ளப்பட்டன. அதன் விளைவாக பார்ட்டாலி ஃபண்ட் (*Partally Fund*) என்பவர் *LSCA* என்ற அமைப்பின் மூலம் இதழ்களுக்கான இணையப் பக்கத்தையும் தனித்தனிப் பாடத்திட்டத்தையும் இணையத்தில் வெளியிட்டார். இணைய இதழ்களைக் குறித்த ஆய்வுகளும் அதற்கான

---

விரிவுரையாளர் (மு நி.), முதுகலைத் தமிழாய்வுத் துறை
பிஷப் ஹீபர் கல்லூரி (தன்னாட்சி), திருச்சி - 620 017.

தகவல் 'தொடர்புகளும் (Data links) மேம்பாடு அடையத் தொடங்கின. இணையத்தில் இதழ்கள் மெல்ல மெல்ல ஏற்றம்பெறத் தொடங்கின. ஆண்டுகள் செல்லச் செல்ல இணையத்தில் மின் இதழ்கள் வளரத் தொடங்கின.

**இணைய இதழ்கள் வகைமைப்பாடு**

தமிழ்மொழி இலக்கணம், இலக்கியம் வளர மின் இதழ்கள் செவ்வனே பங்காற்றி வருகின்றன. அச்சு இதழ்களும், இணைய இதழ்களும், தொழில்நுட்ப ரீதியாக வேறுவேறு ஊடகங் களைச் சார்ந்துள்ளன. எனினும் அச்சு இதழ்களையும் மின் இதழ்களையும் ஒரு சில வழிமுறைகளில் வகைமைப் படுத்தலாம்.

**I. கால அடிப்படையிலான வகைமைப்பாடு**

தினசரி செய்திகளைப் படிக்கச் சில தளங்கள் உள்ளன.

1 www.dinamalar.com
2. www.dinamani.com
3. www.dailythanthi.com
4. www.dinakaran.com
5. www.dinaboomi.com

காலமுறை இதழ்களாகக் கீழ்கண்டவற்றைப் பார்க்கலாம்.

1. www.aramthinai.com★
2. www.ambalam com★
3. www.pasumariulagam.com

இவை தவிர, சில மாத இதழ்களையும் பார்க்கலாம்.

1. www.ezilmila.com
2. www.intamm.com
3. www.tamilnet.com

**II. ஊடக அடிப்படையில் வகைமைப்பாடு**



● 1. www pathivukal.com✣
2 www.thinnai.com✣
3. www.thatstamil.com✣
4. www.intamm com✣
5. www.tamileelam.com✣
6. www.tamilmurasu.asia/com.sg✣
7. www.tamiloviam.com/unicode/main.asp✣
8. www.exilivre.com✣
9. www.sysindia.com/emagzine/tamilzherpakkam✣
10. www.thamilagam.net★
11. www.varppu.com
12. www.vanavil.com✣
13. www.worldtamils.com✣

●● அச்சு+இணைய இதழ்
1. www.ambalam.com
2. www.arumbu.com
3. www.tamilcinema.com★
4. www.tamm.com/Iniyavanigam/seithi.htm★
5. www.kumudam.com★ www.vikatan.com★
6. www.kalkiweekly.com★
7. www.arramthinai.com
8. www.muzhakkam.com✣

**III. வெளிவரும் இட அடிப்படையிலான வகைமைப்பாடு**

★ உள்நாட்டில் இருந்து வெளிவருபவை

✣ வெளிநாட்டில் இருந்து வெளிவருபவை

ஆய்வுக் கட்டுரையின் பக்க எல்லையைக் கருத்திற்கொண்டு ★ ✣ குறியீடுகள் மூலம் இட அமைப்பின் வகைமைப்பாடு சுட்டப்பட்டுள்ளன.

### மின் இதழ்களும் அச்சு இதழ்களும்

மின் இதழ்கள் சர்வதேச அளவில் வாசகர்களைச் சென்றடைவதாக உள்ளன. கணினியின் மூலம் தயாரித்து அளிக்கப்படுகிறது. அச்சு இதழ்களைவிட அதிகப் பகுதிகளை உடையதாக உள்ளது. ஆனால் அச்சு இதழோ உள்ளூர், வட்டாரம் தேசிய அளவு என்ற அளவில் வாசகர்களைச் சென்றடைகிறது. வெளிநாட்டு மக்களுக்குத் தெரிய வாய்ப்பில்லை. அச்சு இதழில் அச்சு தொடர்பான வேலைதான் முதன்மை யானது முக்கியமானது. மின் இதழ்கள் அச்சு இதழ்களைவிடப் பல சிறப்புக் கூறுகளை உடையதாக, மேம்பட்டதாக உள்ளன. சான்றாக அம்பலம் இதழைக் கொண்டு இதனை விளக்கலாம்.

அம்பலம் இதழ் அச்சிதழாகவும், மின் இதழாகவும் வெளிவருகின்றன. அச்சு இதழாக வெளிவரும் அம்பலம் இதழில் சுஜாதா பக்கம், கட்டுரைகள், கவிதைகள், நேர்காணல், நகைச்சுவை, சிறுகதை ஆகிய பல பகுதிகள் இடம் பெற்றுள்ளன.

இணைய இதழான அம்பலத்தில் சிறப்பு அம்பலம் (கட்டணம் கட்டியபின் படிக்கலாம்)

### வார இதழ்

சுஜாதா பக்கம் → சுஜாதாவுடன் அரட்டை
வாழ்த்துக்கள்
இளைஞர்
சிறுவர் → சாதனைக் கோப்பு, தமிழ் எழுதும் முறை, உலகம் சுற்றுவோம் கொண்டாட்டம்.

திரை
மின்னஞ்சல்
சிறப்புப் பகுதி → வாழ்த்துப்பகுதி
சிறப்புக் கட்டுரை

வாசகர்கள் தங்களை இணைய இதழுடன் முழுமையாக ஈடுபடுத்திக் கொள்ளும் விதமாகச் சுவாரசியமாக இதழின் பகுதிகள் வடிவமைக்கப்பட்டுச் செயலாக்கம் பெறுகின்றன.

### இணைய இதழ் சிக்கல்களும் தீர்வும்

இணையத்தில் தமிழ் மின் இதழ்களில் உள்ள நடைமுறைச் சிக்கல் *'Font'* எனப்படும் எழுத்து வடிவம்தான். ஆங்கிலேயர்

களின் கண்டுபிடிப்பான கணினியில் ஆங்கிலேயர்களின் எழுத்து அமைப்பு முறையும், அதற்கான ஏற்பியும், முன்பதிவால் உருவாக்கப்பட்டிருந்தன. ஆரம்பத்தில் அவர்களின் பயன் பாட்டிற்கு ஏற்பக் கணினி வடிவமைக்கப்பட்டிருந்தது. காலம் செல்லச் செல்ல மற்ற மொழிகளும் இணையத்தில் இடம்பெற்றன.

தமிழுக்கெனப் பல எழுத்து வடிவங்கள் உருப்பெற்றன. உலகில் வெவ்வேறு நாடுகளில் வாழும் தமிழ் ஆர்வலர்கள் தமக்கெனத் தனியாக எழுத்து வடிவத்தை ஏற்படுத்திக் கொண்டு தமது தமிழ் இணையப் பக்கத்தை வடிவமைத்தனர். ஓர் ஆர்வலர் தமக்கென உள்ள தமிழ் வரிவடிவத்தைக் கொண்டு (Fonts) தம் இணையப் பக்கத்தை உருவாக்கியிருக்கும் நிலையில் அத்தளத்தை அவர் கணினியில் பயன்படுத்தியிருக்கும் தமிழ் வரிவடிவக் கோப்பு மற்றவர் கணினியில் இருக்க வேண்டும். அவ்வரிவடிவம் இல்லாத கணினியில் விசைப் பலகையில் உள்ள குறியீடுகளே காட்சியாகத் தெரியும்.

தமிழ் இணையத் தளங்களைத் தேடித்தரும் தேடுதளங்கள் இல்லாதது பெரிய குறையாகும்.

இணையம் வசதி படைத்தவர்களுக்கு என்ற கருத்து பரவலாகக் காணப்படுகிறது. இணையத்தளத்தைப் பார்வையிட ரூ. 15-20 ஒரு மணி நேரத்திற்குச் செலவிட வேண்டும். ஒரு சில இணையத்தளங்கள் சந்தா வசூலித்த பின்பே பார்வைக்கு வருகின்றன. ஒட்டு மொத்தத்தில் அச்சு இதழ்கள் இணைய இதழ்களைவிட விலை மிகவும் குறைவு. இணையத் தளங்கள் சந்தித்த எழுத்துப் பிரச்சனைக்குத் தீர்வாக *unicode* எழுத்து முறை அமைந்துள்ளது. இதனைச் சீர்மைக் குறியீடு என அழைக்கலாம். எழுத்துச் சீர்மைக் குறியீட்டில் உலக மொழி களுக்காக 65,000 இடங்கள் ஒதுக்கப்பட்டுள்ளன. இவ்விட ஒதுக்கீட்டில் தமிழுக்கான இடம் 128 மட்டுமே ஆகும். அதிலும் தற்சமயம் 67 இடங்கள் நிரப்பப்படாமல் உள்ளன. தற்பொழுது எழுத்துச் சீர்மைக் குறியீட்டைப் பயன்படுத்தி ஒருசில தமிழ் மின் இதழ்கள் இணையத்தில் வலம் வருகின்றன.

தமிழ்மொழியில் தோன்றிய முதல் மின் இதழ் அம்பலம். இணைய இதழான அம்பலத்தில் பல தலைப்புகளில் பல்வேறு விதமான படைப்புகள் வெளிவந்தபோதிலும் புனைவுக்

கூறுகளான கவிதை, கட்டுரை, சிறுகதை மற்றும் புனைவு அல்லாத கூறான சுஜாதா பக்கம் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப் பட்டுள்ளது.

**கவிதை**

அம்பலம் இதழில் வெளிவந்துள்ள கவிதைகளில் படிமம் அதிகம் இடம் பெற்றுள்ளது. இதை தவிரத் தனிமனித உணர்வுகள், மனிதநேயம், பெண்ணியச் சிந்தனை போன்ற சமகாலப் பிரச்சனைகள் சித்திரிக்கப்பட்டுள்ளன.

**படிமம்**

பக்க எல்லையைக் கருதிப் படிமம் என்பதற்கான வரையறை, விளக்கம், வகைப்பாடுகள் குறித்த தகவல்கள் இங்கு இடம் பெறவில்லை.

**ஓசைப்படிமம்**

காதால் கேட்டுணரும் ஒலிகளைக் கொண்ட படிமமாகக் கவிதை அமைவது ஓசைப்படிமமாகும். சான்றாக 'வரவேற்பாளர்' என்ற கவிதையில் பணிக்குச் செல்லும் மகளிரில் அதிலும் குறிப்பாகப் பெண் வரவேற்பாளர்கள் அனுபவிக்கும் துன்பங் களைக் கவிஞர் ஒருவர் இவ்விதம் வெளிப்படுத்தியுள்ளார்.

''தொலைபேசிச் சத்தம்
கேட்டுக் கேட்டு என்
காது மடல்கள்
ஊமையாகிவிட்டன...''

என ஆதங்கப்படுவதன் மூலம் அப்பெண் அனுபவிக்கும் துன்பத்தை ஓசைப்படிமமாக்கியுள்ளார் கவிஞர்

**தொடு உணர்வுப் படிவம்**

இது தோலில் ஏற்படும் சூடு, குளிர்ச்சி, வன்மை, மென்மை, அரிப்பு, வலி, சுகம் எனப் பல புலனுணர்வு அனுபவங்களில் அமைகிறது. 'குரல்கள்' என்ற கவிதையில் ஒடுக்கப்பட்ட குரலின் வெளிப்பாடாக அமைந்த வரிகள்:

''உதைபட்ட காயங்களின் வேதனையோடு
நிதானித்துப் பார்த்தால்
நிஜமும் நிறமும் புரியும்''

### பரந்த படிமம்

இவ்வகைப் படிமம் பாதி குறிப்புத் தன்மையாகவும், பாதி வெளிப்படையாகவும் ஒரு செய்தியை உணர்த்த உதவுகிறது. 'ஆந்தை வரும் நாள்' என்ற கவிதையில் எலி யானது தன் குட்டிகளுக்காக உணவு தேட அங்கும் இங்கும் ஓடி உணவு சேகரிக்கின்றது. திடீரென ஓர் இரவில் ஆந்தை யொன்று எலியைக் கொத்திக் கொண்டு போனது. இந்நிகழ்வை மனிதர்களோடு ஒப்பிட்டு

''உச்சிக் கிளையில்
வாயில் தொங்கும் வாலோடு
ஆந்தை
நாமும் வாழ்ந்து கொண்டிருக்கிறோம்
ஆந்தை வரும் நாளுக்காக
ஆயத்தமின்றி''

ஆந்தையைக் காலனோடு ஒப்பிட்டு - அவன் வரும் நாளுக்கு ஆயத்தமின்றி இருப்பதாகக் கவிஞர் கூறியுள்ளார்.

### பெண்ணியச் சிந்தனை

பெண் முதன்மைப்படுத்தப்பட்ட தாய்வழிச் சமுதாயத் திலிருந்து மெல்ல மெல்லக் குடும்பம் என்ற ஓர் அமைப்பு தோன்றத் தொடங்கியமையும் ஆண், பெண் இருவருக்கு மிடையே சமநிலை ஏற்படுவதற்கு மாறாக ஆண்கள் ஆதிக்க நிலையைக் கைப்பற்றியமையும், சமூகப் பரிணாமத்தில் நிகழ்ந்துவிட்ட ஒன்று. இதனால் பெண்களைப் பற்றிய சமூக எதிர்பார்ப்பு ஒரு குறிப்பிட்ட அடிப்படையிலேயே அமைந்து விட்டது. இனப்பெருக்கத்திற்கும், இல்லறக் கடமைகளைச் செவ்வனே செய்வதற்கும் உரியவர்கள் பெண்கள் என்பதற்கும் அப்பாற்பட்டு அவர்களின் உண்மை வாழ்வு எண்ணப்படு வதில்லை. 'அம்மா' என்ற கவிதையில்

''அவள் எனக்கு பசி தீர்த்தவள்
நீ எனக்கு காமம் தீர்த்தவள்
பற்றி எரிகிற தீயை
புணர்ந்து அணைக்கிற அன்பு மனைவியே!''

காமத்திற்கும் அப்பாற்பட்ட உணர்வை இக்கவிதையில கவிஞர் காட்டவில்லை. 'நிஜமுகம் தேடி' என்ற கவிதையில் பணிக்குச் செல்லும் பெண்ணின் எதார்த்த வாழ்க்கை பதிவு செய்யப் பட்டுள்ளது.

''அலுவலகம் நெருங்கும்போது
செப்பனிடப் படுகின்றன
ஸ்டிக்கர் பொட்டோடு சேர்த்து
இதழ் கடையில் குறுநகையும்
என்னைப் போல்...
.......................
அலுவலகம் முடிந்து
வீட்டு வாயிலில் கால் பதிக்கையில்
எல்லா வேலையும் நானே செய்யணுமா?
இரும்பிலா செய்திருக்கு என்னை?
வரவேற்கும் மாமியாரின் குரல்''

**ஹைக்கூ**

ஜப்பானிய மொழியில் முதன்முதலாக ஹைக்கூ எழுதியவர்களுள் சோகன் மற்றும் மோரிடாகோ இருவரும் குறிப்பிடத் தக்கவராவர். ஹைக்கூ இலக்கியத்தின் தந்தை என்று 'பாஷோ' என்ற ஜென் துறவி அழைக்கப்படுகிறார். இது ஆழமான மன உணர்வுகளின் பிரதிபலிப்பாகும்.

பாரதிக்குப் பின் தமிழ்க் கவிதைச் சூழலில் பல மாற்றங்கள் நிகழ்ந்தன. வானம்பாடிக் காலத்திற்குப் பிறகு சமூகப் பிரச்சனைகளில் புரட்சி வேகத்துடன் அணுகும் கவிதைகள் பெருகின. இந்தப் பரபரப்பான மனித வாழ்வுக்கிடையில் நீண்ட இலக்கிய வடிவங்கள் செல்வாக்குப் பெறும் சூழல் இன்றில்லை. இந்நிலையில் சுருக்கம் என்ற கவிதை நெறியை விரும்பிய புதுக் கவிஞர்களிடையே ஹைக்கூ என்ற சிறிய வடிவம் வரவேற்பைப் பெற்றது. தமிழில் ஹைக்கூ வளர்ச்சியில் பல ஏடுகள் பணியாற்றின. அப்துல் ரகுமான் (1970) தனது பால் வீதியில் ஹைக்கூ பயணத்தைத் தொடங்கினார். அம்பலத்தில் வந்துள்ள சில ஹைக்கூ கவிதைகள் :

எதிரெதிர் பார்த்தும்
புன்னகைக்க வில்லை
இன்டர்நெட்
காதலர்கள்

* * *

இறைச்சி ருசியில்
புரிபடவே இல்லை
புறாவின் துடிப்பு

* * *

கருப்பாக இல்லையே
கவலைப் பட்டாள்
கூந்தலில் இளநரை

* * *

சீக்கரம் வா சூரியனே
சுமையேற்றாதே
புல்லின் மீது...

* * *

**சிறுகதை**

19-ஆம் நூற்றாண்டு தமிழ் இலக்கியத்தின் பரப்பில், வடிவில் பல்வேறு ·மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. அச்சுப் பொறியின் வருகை இதனை மேலும் மேம்பாடு அடையச் செய்தது. வ,வே.சு.ஐயரின் குளத்தங்கரை அரசமரம் (1913) தமிழில் அமைந்த முதல் சிறுகதையாகும். இவ்வாறு படிப் படியாக வளர்ந்த சிறுகதை பல பரிணாம ·வளர்ச்சியடைந்து புதுப்பொலிவுடன் திகழ்கிறது. ஒரு பக்கக் கதை, மின்னல் வேகக் கதை, என வடிவமாற்றம் பெற்றுள்ளது. அம்பலத்தில் இடம்பெற்றுள்ள சிறுகதைகளைத் தனியாக ஆய்வு மேற்கொள்ளும் அளவிற்கு நிறைய செய்திகள் உள்ளன.

விடியலுக்கு அப்பால், சாளரம் வழியே காதல், நெப்போலியன், குடை, இன்னமும், தீ, மிருகயுத்தம், அப்பா, வாசனை, அம்மாவின் பள்ளிக்கூடம், நாத்திகன் மனைவி, பயணம் எனப் பல சிறுகதைகள் இடம்பெற்றுள்ளன. இச் சிறுகதைகளின் கரு பெரும்பாலும் சமகாலச் சமூகப் பிரச்சினையை மைய மிட்டதாக உள்ளது. பேச்சு வழக்கு நடையில் உரையாடல் இடம்பெற்றுள்ளது.

**கட்டுரை**

தமிழில் கட்டுரை இலக்கியம் வளர மணிக்கொடி, நவசக்தி, சுதந்திரச் சங்கு சுதேசமித்திரன், கல்கி, தென்றல், திராவிடநாடு, கணையாழி மற்றும் பல இதழ்கள் பணியாற்றின. கட்டுரை என்பது பண்டிதப் படைப்பன்று. புதிய இலக்கியப் படைப்பேயாகும்.

கட்டுரையை அதன் அமைப்பு நிலையில் இரண்டாகப் பகுக்கலாம்.

1. தன்வடிவம் 2. பிற வடிவம்

அம்பலம் மின் இதழில் இவ்விரண்டு வடிவ அமைப்புகளுடன் பல கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.

கட்டுரை இலக்கியத்தின் அடிப்படையில் தன் வடிவம் என்ற வகைமைப்பாட்டைக் காண முடிகிறது. தன் வடிவ மென்பது கட்டுரை இலக்கியப் படைப்புகளில் பிற இலக்கிய வடிவமான கடிதம், சிறு நாடகம், கதை போன்ற வடிவங் களைக் கொள்ளாமல் கட்டுரையின் விளக்கம் பொதுத் தன்மையில் அமைவதாகும்.

அம்பலம் இதழில் தன்வடிவமாக 'ஞாபகமிருக்கிறதா தஞ்சாவூர் தலையாட்டி பொம்மை', 'ஒரு கப்பல் ஒரு புரட்சி ஒரு சினிமா, 'ரஜினி முறுக்கு', 'டாக்டருக்குப் படிக்கிறதே வேஸ்ட்' போன்ற கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன.

**பிற வடிவம்**

தன் வடிவம் போல் அல்லாமல் கவிதையின் வடிவமானது கதைப் போக்குடையதாகவோ, கடித வகையாகவோ அமைந் திருப்பதாகும். சான்று :

'சென்னை பிளாட்பாரங்களில்
புதையல்' → கேள்வி பதில் வடிவம்

'கனவைக் கலைத்த கனவுப் பாவை' லிசாரே என்ற மாடலிங் பெண்ணின் புகழ் பற்றிப் பேச்சு வழக்கில் கூறப் பட்டுள்ளது. சிலசமயம் அவர் (லிசாரே) கூற்றாகக் கட்டுரை யானது விரிகிறது.

கணவனைக் காண்போமா! → அகதிகளான இலங்கைப் பெண்களின் வாழ்க்கை கதை வடிவில் அமைந் துள்ளது.

அம்பலம் இதழில் அமைந்த கட்டுரைகள் பெரும்பாலும் தனிநபர் பற்றியும், பெண்களின் நிலை பற்றியும், சிறுவர்களின் நிலை பற்றியும் மாறுபாட்டைக் கூறுவதாக அமைந்திருக்கிறது.

**சுஜாதாவின் பக்கம்**

அம்பலம் இதழ்த் தொகுப்பில் பெரும்பாலோரின் வரவேற்பைப் பெற்ற பகுதி சுஜாதா பக்கம். இப்பகுதியில் சுஜாதாவின் கட்டுரை, சங்க இலக்கிய அகநானூறு, புறநானூறு பாடல்களுக்கான விளக்கம், சுஜாதா பதில்கள் போன்ற படைப்புகள் இடம்பெற்றுள்ளன.

இணையம் முதலில் இராணுவப் பயன்பாட்டிற்காகக் கண்டுபிடிக்கப்பட்டது. பின் மக்களும் பயன்படுத்தும் விதத்தில் மாற்றப்பட்டது. இவ்விணையத்தில் கால்ப்போக்கில் அச்சு இதழ்கள் மின் இதழ்களாக வலம் வருகின்றன. அச்சு இதழ் களைவிட நல்ல பல சிறப்புகளைத் தன்னகத்தே கொண்டவை மின் இதழ்களாகும். தமிழ் மின் எழுத்துகளின் எழுத்துரு (Font) அதிக சந்தாதொகை போன்ற ஒருசில சிக்கல்கள் இருந்து

வருகின்றன. இருப்பினும் தற்போது எழுத்துருச் சிக்கலுக்குத் தீர்வாக அமைந்திருப்பது சீர்மைக் குறியீட்டு முறையாகும். இது உலகமொழிகள் அனைத்திற்கும் தனித்தனி இட ஒதுக்கீட்டை ஏற்படுத்தித் தருகிறது. 'உயிர்மை' இதழ் சமீபத்தில் மின் இதழாகவும் வெளிவந்துள்ளது. ஐரோப்பியர்கள் நம் நாட்டிற்கு வாணிபம் செய்ய வந்தபோது அவர்களின் நாட்டில் அச்சிடப் பட்ட நாளிதழ் கப்பல் மூலம் அவர்களை வந்தடைய பல மாதங்களாயின. ஆனால் இன்று அயல்நாடுகளில் வசிக்கும் நம் தமிழர்கள் மின் இதழ்கள் வாயிலாக நம் நாட்டு நடப்பை மிக விரைவாக அறிய முடிகின்றது.

தமிழ் மின் இதழ்களில் பல்வேறு பகுதிகள் இடம்பெற்றி ருந்தாலும் தமிழ் வளர்ச்சியில் இணைய (தமிழ்) இதழ்கள் என்ற தலைப்பிற்காக இவற்றில் இடம்பெற்றுள்ள . புதுக் கவிதை ஹைக்கூ, சிறுகதை, கட்டுரை, சுஜாதாவின் பக்கம் ஆகிய பகுதிகள் பற்றிய செய்திகள் மட்டும் இக்கட்டுரையில் இடம்பெற்றுள்ளன.

சினிமா தலைப்பிலும்
ஆதி பாணி



புத்தக முகபபில்





கல்வெட்டு முன்னுரை

# தமிழ்மொழிப் பயன்பாட்டில் 'தெளிதமிழ்' திங்களிதழ்

**முனைவர் சி. அயோத்தி**

இந்திய மொழிகள் அனைத்திலும் மிகுதியான சிறப்பும் தகுதியும் பெற்ற உயர் தனிச் செம்மொழி தமிழ்மொழி யாகும். தமிழ் மண்ணின் ஆட்சியில்; அலுவலில்; கல்வியில்; கலையில்; பண்பாட்டில்; வாணிகத்தில்; சமயத்தில் தமிழ்மொழி தான் முதன்மை பெற்றிருத்தல் வேண்டும். ஆனால் இன்றைய சூழ்நிலையில் நம் அன்னைத் தமிழ்மொழி இரண்டாம் நிலைக்குப் பின்தள்ளப்பட்டு நிற்கின்றது. நாளிதழ், கிழமை யிதழ், திங்களிதழ், வானொலி, தொலைக்காட்சி என எல்லா ஊடகங்களிலும் தமிழ்ச் சொற்களின் பயன்பாடு குறைந்து பிறமொழிச் சொற்களின் ஆளுகையே மேலோங்கியுள்ளது. தனித்தன்மையினை விட்டுக் கொடுத்து அவை பற்றிக் கடுகளவும் கவலைப்படாமல் முன்னேற்றம், விரிந்த நோக்கம் என்ற பெயரால் தமிழ்ப்பகைவர்களின் சூழ்ச்சிக்கு ஆட்பட்டுப் பிறமொழி ஆளுமைக்கு அடிமைப்பட்டு நிற்பதனையே பெருமையென்று கருதி வந்துள்ளது தமிழினம். இவ் இழிநிலை அகற்றப்படுவதோடு மட்டுமல்லாமல் தமிழினத்தின் எழுச்சிக்கும் விழிப்புணர்வுக்கும் உதவும் வகையில் தெளிதமிழ் திங்களிதழ் பல்லாற்றானும் தன் பங்களிப்பை ஆற்றியுள்ளது. இந்நிகழ்வுகள் ஈண்டு ஒருங்கு திரட்டப்படுவது இதழ்களின் மொழிப் பயன்பாடு குறிதது அறிவதற்குப் பேருதவியாக அமையும்.

### மாணவர்களின் மொழியறிவு

வளரும் தலைமுறையினராக அமையும் பள்ளி, கல்லூரி மாணவர்களின் மொழியறிவு குறித்துத் தெளிதமிழ் மிகுந்த கவலை கொள்கிறது. "கெடல் எங்கே தமிழின் நலம் அங்கெல்லாம் தலையிட்டுக் கிளர்ச்சி செய்க" எனற பாவேந்தரின் கொள்கை

தமிழ் முதுநிலை விரிவுரையாளர், அரசு கலைக கல்லூரி
உடுமலைப்பேடடை.

யினை முகப்பில் தாங்கிய தெளிதமிழ் இதழ் தற்கால மாணவர் களின் தாய்மொழிப் புலமையினை ஆசிரியவுரையில் மிகத் துல்லியமாக எழுதுகின்றது.

இன்றைய நிலையில் தமிழ்ச் சிறுவர்களுக்குத் தாய்மொழி யறிவு மிகவும் அருகியுள்ளது. தமிழ்ச் சொற்களின் எளிய நிலைப் பொருளைக் கூட ஆங்கிலச் சொற்களோடு ஒப்பிட்டுச் சொன்னால் தான் புரிகின்றது. எளிய நிலையில் அமைந்த ஒன்று, இரண்டு என்கின்ற எண்ணிக்கை முறையினைச் சரிவரச் சொல்லத் தெரியவில்லை. ஞாயிறு, திங்கள் என்கின்ற இயற்கைப் பொருள்களின் உண்மைநிலை புரியவில்லை. வலம்-இடம்; கருப்பு-வெள்ளை; இரவு-பகல் என்ற எதிரெதிர்ச் சொற்களின் நிலைப்பாடுகளை உணர்ந்துகொள்ள முடியவில்லை. இவ்வாறமைகின்ற இன்றைய நிலைமைகள் மேன்மேலும் இப்படியே தொடருமானால் அப்பா - அம்மா; மாமா - அத்தை; பெரியப்பா - பெரியம்மா; மாமியார் - மாமனார்; மருமகன் - மருமகள் என்கின்ற உறவுமுறைச் சொற்களுக்குரிய பொருள்களையும் பயன்பாட்டையும் கூட ஆங்கில மொழி களில் விளக்கினால்தான் உணர்ந்துகொள்ளக் கூடிய நிலைமையே உள்ளது (13.02.2004, ப.4) என்றுரைக்கும் தெளிதமிழ் இதழ் இவர்களைத் தொடர்ந்து அடுத்து வரும் தலைமுறைகளை எண்ணிப் பார்த்து நெஞ்சம் பதறுகின்றது.

**ஆங்கில வழிக் கல்வியும் அடிமைத்தனமும்**

ஆங்கிலத்துக்கே முதன்மை என்ற நிலை உருவாகியுள்ளது. ஆங்கிலவழிக் கல்வியைத் தலைமேல் தூக்கிவைத்துக் கொண்டாடு கின்றனர். தாய்மொழியையும் அதிலிலுள்ள இலக்கியங்களையும் மதிக்காமல் வேற்றுமொழிக்குத் தங்களை அடிமையாக்கிக் கொண்டவர்கள் தமிழ்நாட்டில் இருக்கும் அளவிற்கு வேறு நாட்டில் இல்லை என்கின்ற தாகூரின் கூற்றுக்கேற்பத் தமிழினத் தார்க்கு ஏற்பட்டுள்ள அடிமை மனப்பான்மை வேறு எங்கும் இருந்து திணிக்கப்பட்டதல்ல; தமக்குத் தாமே ஏற்படுத்திக் கொண்ட இழிதகைமை இதுவேயாகும். அடிமை இந்தியாவில் ஆங்கிலயேன் தமிழ்மொழிக்குக் கொடுத்த ஆதரவினைக் கூட விடுதலை பெற்று உருவாகிய தமிழக அரசுகள் கொடுக்கத் தயங்கின என்று குற்றம் சுமத்துகின்றது தெளிதமிழ். மனம் திறந்த மடல்கள் என்னும் பகுதியில் மாசில் மகிழ்நன் என்ற வாசகரின் கருத்தாக இந்நிலைமையினைப் பதிவு செய்துள்ளது.

'ஆங்கிலேயர்கள் நம்மை ஆட்சி செய்த காலத்திலேயே கூட பதினொன்றாம் வகுப்பு வரைத் தமிழ்வழிக் கற்க அனுமதி கொடுத்திருந்தனர். விடுதலை பெற்ற பிறகு அமைந்த தமிழர்களின் ஆட்சி அதிகாரங்களால்தான் ஆங்கில வழிக் கல்விக்கு முன்னுரிமை அளிக்கப்பட்டுள்ளன. வணிகப் பெயர்ப் பலகைகளில் தமிழ்; நீதிமன்றச் செயல்பாடுகளில் தமிழ்; மருத்துவத்துறைகளில் தமிழ்; ஆட்சி அதிகாரங்களில்; அலுவல் மொழிகளில்; பொறியியல் வளர்ச்சியில் தமிழ்; கல்வித் துறை களில் தமிழ் என்ற முழக்கங்கள் நமது அரசாங்கத்தின் கொள்கை முழக்கமாக மட்டுமே உள்ளது. செயலளவில் இதற்கு நேர் எதிரான முறைகளிலேயே உள்ளது'' (13.04.2004, ப.5) என்று கண்டிப்பதோடு மட்டும் அல்லாமல் இந்நிலைமைகள் மாறுவதற்குரிய அறிவுரையினையும் வாசகர் கருத்தாகவே தருகின்றது.

'விளக்கொளியில் தாமாகவே தேடிப் போய் வீழும் விட்டில் பூச்சிகளைப் போலவும், புதை குழியில் சிக்கியவன் அதிலிருந்து மீள்வதற்குப் பெருமுயற்சி செய்து மேன்மேலும் ஆழத்துக்குச் சென்று தவிப்பதனைப் போலவும், தமிழ் மக்களும் தமிழக அரசுகளும் ஆங்கிலவழிக் கல்விதான் சிறந்த தென்று நம்பி தம்மை அறியாமலேயே வீழ்ந்து இடர்ப்படு கின்ற நிலைமைகளைக் காண்கின்றோம். 'ஆலமரமாய் வளர்ந்து விழுதுகள்விட்டு நன்றாக வேரூன்றிவிட்ட ஆங்கில வழிக் கல்வியை மிக இளையதாக இருந்த முட்செடியைப் போல் எளிமையாகக் கைகளாலேயே கிள்ளியெறிய வேண்டிய நிலையினை விடுத்துத் தற்பொழுது கோடாரி கொண்டு வெட்ட வேண்டிய கடினமான; கட்டாய வேலையாக மாற்றம் பெற்றுவிட்டது' (13.04.2004, ப.4) என்று கண்டிக்கவும் செல்கின்றது.

'மக்கள் வழிநடத்த வேண்டிய அரசுகளும், மக்களுக்கு நல்வழி காட்ட வேண்டிய கல்வியாளர்களும்; படிப்பாளிகளும் அவர்களை உருவாக்கியுள்ள பல்கலைக்கழகங்கள் முதலிய கல்வி நிலையங்களும் ஆங்கில மொழியினை முதன்மைப் படுத்தும் அடிமை நிலையங்களாக மாறியுள்ளன. தமிழரின் உள்ளங்களில் ஊறிப்போயிருக்கும் இந்த அடிமையுணர்வை மாற்றாமல் அவர்களுக்குத் தெளிவும் விடுதலையுணர்வும் ஊட்டாமல் ஆங்கில மொழி மோகத்தை எதிர்த்து வெற்றி கொள்வது எந்நாளும் நடக்காத செயலாகும்' (14.03.2005; ப. 3)

என்கின்ற தெளிதமிழின் கூற்றினை நமது அரசுகளும் அமைப்புகளும் உள்வாங்கிச் செயல்பட்டால்தான் தமிழ்மொழிச் சொற்களின் பயன்பாடு சிறக்கும்.

### முகப்புப் பாடல்களின் மொழியுணர்வு

தமிழ்க் கவிதைகளை முதன்மைப்படுத்தி வெளிவந்துள்ள இதழ்களில் பெரும்பான்மையானவற்றுள் மேலட்டையின் வெளிப்புறத்தில் கட்டாயம் பாடல்கள் இடம்பெற்றுள்ளன. இவை முகப்புப் பாடல்கள் என்று அழைக்கப்படுவதுண்டு. இவ் இதழ்களின் ஆசிரியர்கள் திறமையான கவிஞர்களாக அமைவதால் அவர்களது கவித்திறன் வெளிப்படுமாறு இப் பாடல்கள் அமைவதுண்டு. அன்றையக் காலங்களில் நிலவுகின்ற பிரச்சனைகளை மையப்படுத்தி முகப்புப் பாடல்களை அமைக்கின்றனர். எளிய நிலையில் தெளிவான நடையில் மரபு யாப்பில் அமைந்த இப்பாடல்களைத் தெளிதமிழின் ஆசிரியராகிய முனைவர் இரா. திருமுருகனும், துணையாசிரி யராகிய பேரா.ம.இலெ. தங்கப்பாவும் எழுதியுள்ளனர். ஒவவொரு திங்களுக்கும் ஒருவராக மாறி மாறிப் பாடல்களை அமைத்துள்ள முறைமையினை இவ் இதழ்களில் காண்கின்றோம். 2004-2005-ஆம் ஆண்டுகளில் வெளிவந்துள்ள இவ் இதழ் களில் இயற்கைக்கு வேண்டுகோள், நாடே ஒளிர்கிறதாம்; தமிழினமே விடை கொடுப்பாய்; நாட்டுக்கு நல்ல துரை வந்தாலும்....' மக்கள் தீர்ப்பை மதித்து நடப்பீர், தமிழனாய் ஆவான் தம்பி; அயற்கல்வி எதிர்க்க வாரீர், கொடியவர்கள் யார்? என்னைத் தூக்கில் போடுங்கள், நாறிப் போவீர், மாய்மால மதம் ஒழிப்போம் வாரீர் என்பன போன்ற தலைப்புகளில் பாடல்கள் வெளிவந்துள்ளன. சான்றுக்கு ஒன்றிரண்டு பாடல் களின் பொருண்மைகளை மட்டும் விளக்கிக் காண்போம்.

### மதவெறியர்களை விரட்டியடித்தல்

மதத்தை அரசியலில் கலந்து மக்கள் மனங்களில் பிரிவினையை விதைத்துத் தமிழின் உயர்வையும், தமிழ் மொழிச் சிறப்பையும், தமிழ்ப் பண்பாட்டு வளத்தையும் சிதைக்கக் கூடிய கூட்டங்களை அடையாளங் காண்பது எல்லோருக்கும் எளிதான செயலன்று. பேச்சுத் திறமையாலும் சொல்வனமையாலும் பாமர மக்களைக் கவர்கின்ற போலிமை அரசியல்வாதிகளைக் கண்டறிந்து அவர்களின் பொய் முகங்களைக் கிழித்தெறியக் கூடிய நற்செயலினைத் தங்கள் இதழ்களின் வாயிலாகச் செய்து வந்துள்ளனர் இதழிய

லாளர்கள். அவ்வகையில் பேரா. தங்கப்பா எழுதியுள்ள பாடல் நல்லதொரு பயனை நல்குகின்றது. குடியாட்சி உரிமை பெற்றுள்ள நம்நாட்டில் தங்கள் எதிர்ப்புணர்வைத் தேர்தல்கள் மூலமாகத்தான் உணர்த்த முடியும். மற்றைய எத்தனையோ பிரச்சனைகள் தலைதூக்கினாலும் தனித்தமிழின் நலம் பேணும் தெளிதமிழ் போன்ற இதழ்கள் தமிழ் இனம், தமிழ்மொழி, தமிழ்ப் பண்பாடு ஆகியனவற்றிற்கு நிகழவிருக்கின்ற இன்னல் களை முன்கூட்டியே தெரிவித்துத் தமிழ் மக்களுக்கு அறிவு கொளுத்தியுள்ளனர்.

**குடந்தைக் கொடுமை**

வேற்று மொழிப் பற்றுணர்வால் தமிழ்மொழிப் புறக்கணிப்பு இன்றளவும் தொடர்வது கண்கூடு. ஆங்கிலப்பள்ளி எனும் பெயரில் ஆயிரமாயிரம் குழந்தைகளை ஒரே கொட்டடிக்குள் அடைத்து வைத்துக் கல்வி வியாபாரம் செய்யும் தொழில் நம் நாட்டில் மிக நன்றாக நடந்து வருகின்றது. அதன் விளைவாகச் சென்ற ஆண்டு குடந்தை நகரில் பள்ளிக் குழந்தைகள் பலர் தீமாய்ந்த நிகழ்வினை நேரில் கண்டோம். அக்கொடுமையினை நம் கவிஞர்கள் மிக நேர்த்தியாகப் பதிவு செய்துள்ளனர்.

*பள்ளியிலே கல்விபெறும் நானூற்றின்*
*மேலான பசுஞ்சி றாரைத்*
*தள்ளிஅடைத்து அவர்கேட்ட தண்ணீர்க்குப்*
*பதிலாகச் சாவைத் தந்தார்!* (17.09.2004)

எனவும்,

*''தீங்கில்லா இளங்குருத்துச் சேய்கள்உயிர்*
*தீக்கருகச் செய்த தென்ன?*
*ஆங்கிலத்தின் வழிஅளிக்கும் அன்பற்ற*
*கொடுங்கல்வி! அயன்மைக் கல்வி!*
*ஓங்கு பொருள் நசை இன்றி ஒளிவிழைந்தால்*
*ஆங்கிலப் பேய் ஒழியும் தானே?*
*ஏங்குகின்ற பெற்றோரே, இனியேனும்*
*அயற்கல்வி எதிர்க்க வாரீர்''* (17.08.2004)

எனவும் அமைந்த இப்பாடல்கள் ஆங்கிலப் பள்ளிகளின் நடைமுறை அவலங்களையும் அயற்கல்வி எதிர்பபுணர் வினையும் அழகாக வெளிப்படுத்தியுள்ளன. சிக்கல்களையும் பிரச்சினைகளையும் நேரிடையாகச் சுட்டியுரைப்பது அதே

நேரம் அதற்குரிய தீர்வினையும் சொல்லிச் செல்வது என்ற நிலையில் இப்பாடல்கள் அமைந்திருப்பது சிறப்பு.

### தமிழ் வளர்க்கும் தாளாண்மைகள்

தாளாண்மை எனில் ஊக்கம், முயற்சி என்ற இரு பொருள்களுண்டு. ஈண்டு இவ்விடத்தில் முயற்சி என்ற பொருளில் அமைத்துக் கொள்ளலாம். தமிழகம் மற்றும் புதுச்சேரிப் பகுதிகளில் நடைபெறும் தமிழ்மொழிப் பாதுகாப்பு முயற்சிகள் பற்றிய செய்திகளையும் தமிழ் வளர்ச்சிப் பணிகளையும் இதழ் தோறும் தவறாது இடம்பெறச் செய்திருப்பது இதனைப் போல் மற்றையோரும் செய்யவேண்டும்; செய்யலாம் என்ற ஊக்கத்தினை அளிக்கும் முன்மாதிரியாக அமைந்திருக்கின்றது. தமிழில் பெயர்ப்பலகை மாற்றும் பணி, தமிழைக் கட்டாயப் பாடமாக்கப் பட்டினிப்போர், செந்தமிழ் பேணும் தீந்தமிழ்ப் புரவலர்கள், தமிழ் வழிக் கல்வியைக் காக்க ஆர்ப்பாட்டம், உரிமை முழக்கம், தமிழ் விழிப்புணர்வு மாநாடு, தமிழில் வல்ல மாணவர்களுக்குப் பரிசளிப்பு, சிக்கலில் செம்மொழி - கலந்தாய்வுக் கூட்டத் தீர்மானங்கள், ஊடகத்தில் தமிழ்- கருத்தரங்கம், தமிழுக்கு மூடுவிழா-தடுக்கும் நடவடிக்கை என்ற தலைப்புகளில் செய்தி களை அமைத்து நாட்டின் பிற இடங்களில் எந்தெந்த முறையில் தமிழ் வளர்ச்சி நடைபெறுகின்றது என்பதனை வாசகர்களுக்குத் தெரிவித்துத் தமிழ்த் தொண்டாற்றுகின்றது.

### சிறப்புக் கட்டுரைகளில் தமிழ் வளர்ச்சி

இதழ்களில் பல்வேறு அங்கங்களில் சிறப்புக் கட்டுரையும் ஒன்று. அவ்வகையில, 'தமிழுக்கு ஆகமங்கள் தடையாகுமா?' என்ற பொருளில் பேரா. முனைவர் தமிழண்ணல் அவர்களால் எழுதபபட்டுள்ள சிறப்புக் கட்டுரை 2004-இல் வெளிவந்துள்ள அத்துணை இதழ்களிலும் தொடர்ச்சியாக வெளிவந்துள்ளது. தொடர்கதைகளைப் போல் இச்சிறப்புக் கட்டுரை பல்வகைச் சான்றுகளுடனும், பல்வேறு அறிஞர்களின் கருத்துகளையும் தாங்கி வெளிவந்திருக்கின்றது. ஆகமங்கள் குறித்த ஐயங்களைத் தெளிவுபடுத்திக் கொள்ள இச்சிறப்புக் கட்டுரை பேரளவு உதவி புரிகின்றது. இதேபோல், இந்தியக் கருத்துவளத்தில் தமிழர் கருத்துகளின் இன்றியமையாமை, தமிழில் அறிவியல் சொல்லாக்கம், பண்டைய உரையாசிரியர்கள் திறனாய்வாளர் களே, பாவாணரின் மாந்தவின முதல் தாய்மொழி ஆய்வு என்ற தலைப்புகளில் பல்வேறு சிறப்புக் கட்டுரைகள் தமிழ் மொழி தொடர்பாக மட்டுமே வெளிவந்துள்ளன. தமிழ்மொழிச்

சீர்மைக்கும் வளமைக்கும் தொண்டு செய்யப புறப்பட்ட தெளிதமிழ் இதழ் தமிழ்மொழி ஆக்கம் குறித்த சிறப்புக் கட்டுரைகளை மட்டுமே வளமையாக வெளியிட்டு வருவது பாராட்டுக்குரியது.

**வியப்பூட்டும் பெட்டிச் செய்திகள்**

மிக முக்கியமான செய்தியினை, பார்த்தவுடனே தெரியக் கூடிய பாங்கில் நான்கு பக்கங்களிலும் நான்கு கோடுகளைக் கொண்டு கட்டம்கட்டி வெளியிடுவதனையே பெட்டிச் செய்தி என்றழைப்பர். *'Box News'* என்ற ஆங்கிலச் சொல்லுக்கு இணையான தமிழ்ச் சொல்லாக அமைந்து இச்செய்திகள் எல்லா இதழ்களிலும் தவறாது இடம்பெறுவதுண்டு. மொழியுணர்வு நோக்கில் இத்தகைய பெட்டிச் செய்திகளைத் தெளிதமிழ் இதழ் பல்வேறிடங்களில் இடம்பெறச் செய்துள்ளது.

''அமெரிக்கா, செவ்வாய்க் கோளுக்குப் 'பயனீர்' என்ற விண்கலத்தை அனுப்பியபோது, உலகிலேயே மிகப் பழமையான மொழியாகிய தமிழைப் பேசுகின்றவர்கள் ஒருவேளை செவ்வாய்க் கோளில் இருக்கக் கூடும் என்று ஒலிநாடாவில் தமிழ்மொழியைப் பதிவு செய்து அனுப்பினார்களாம்!'' (14.05.2004, ப. 31)

''உலகிலேயே மிகப் பெரிய அருவியாகிய நயாகராவின் முகப்பில், உயர்ந்த இடத்தில் 'நல்வரவு' என்று தமிழில் பெரியதாக எழுதியிருக்கிறார்கள்'' (14.05.2004, ப.31)

''வடலூர் இராமலிங்க வள்ளலார் தம் காலத்தில் வாழ்ந்த காஞ்சி காமகோடி பீடாதிபதியான சங்கராச்சாரி சுவாமிகளைச் சந்திக்க நேர்ந்தது. மொழிகளுக்கெல்லாம் தாய்மொழி சமஸ்கிருதமே என்று சங்கராச்சாரியார் கூறினார். இதைக் கேட்ட இராமலிங்க வள்ளலார் அப்படியாயின் தந்தைமொழி தமிழ் என்றாராம். (13.02.2004, ப. 30).

மேற்கண்ட செய்திகளின் அருமை படித்தவுடனே நமக்கு தெரிந்துவிடும். தமிழ் மொழிக்கு ஆக்கமும் சிறப்பும் தரககூடிய செய்திகளையே தெளிதமிழ் கட்டங்கட்டி வெளியிடுகின்றது. அதிலும் மற்ற பத்திரிகைகளில் சொல்லப்பட்டுள்ள தமிழ் குறித்த செயதிகளை மடடுமே பெட்டிச் செய்தியாக அமைக்கும் பான்மையினைத் தெளிதமிழில் காண்கின்றோம்.

### தெளிதமிழ்ச் சொற்களின் அறிமுகம்

பொன்மொழி, அருந்தமிழ், தென்றலஞ்செல்வன், கலையழகன், பொய்கையார், பொன்முகில், எழில்மாறன், செவ்வேள், அறிவு ஒளி, அறிவனார், அருள்வேந்தன், தமிழ்ப்பித்தன், எழினி, இளஞ்சோழன், செம்பியன் என்பன போன்ற தமிழ்ப் பெயர்கள் பலவற்றை வாசகர்களுக்கு அறிமுகம் செய்யும் பாங்கில் இதழ்தோறும் வெளியிட்டுத் தமிழ் மக்களின் பயன்பாட்டிற்கு உதவியுள்ளது தெளிதமிழ்.

### தொகுப்புரை

செந்தமிழ்ச் செல்வி, வளரும் தமிழ், செந்தமிழ், நற்றமிழ், தமிழ்ப் பாவை, தமிழ்ப்பொழில், தூயதமிழ், தமிழ் மாருதம் போன்ற எண்ணற்ற இதழ்கள் பெயரிலேயே தமிழ் என்னும் பதத்தைத் தாங்கி வெளிவருகின்றன. தமிழால் அனைத்தும் இயம்பலாம் என்ற நோககத்தினை வலுப்படுத்தி இவ் இதழ்கள் வலம் வநது கொண்டிருக்கின்றன. இவ் இதழ்களின் தமிழ் வளர்ச்சி குறித்து ஒட்டுமொத்தமாகச் சிந்திப்பது அளவில் பெருக்கமுடையதாக அமைந்துவிடலாம். அதனால் தெளிதமிழ் என்னும் பெயருடைய ஓரிதழின் ஓராண்டுத் தொகுப்பு மட்டுமே இக்கட்டுரைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது. தமிழ்க் கவிதை களையும் தனித்தமிழ் நடையினையும் கொண்டு என்றுமுள தென்தமிழின் வளர்ச்சிப் போக்குக்குப் பனைத்துணையளவு பாடுபடுகின்ற பான்மை இக்கட்டுரையுள் சிந்திக்கப்பட்டுள்ளது.

தமிழ் மறுமலர்ச்சி குறித்த ஆசிரியவுரை, தமிழ் உணர்வு கொண்ட சிறப்புக் கட்டுரைகள், ஆங்காங்கு நடைபெறக்கூடிய தமிழ் வளர்ச்சிப் பணிகளை மற்றையோர்க்கு எடுத்தியம்பும் மனந் திறந்த மடல்கள், இதழாசிரியன் கருத்தினை ஏற்றுக் கொண்டு ஒத்துப போகின்ற அல்லது மறுத்துப் பேசுகின்ற நிலையில் அமைந்த கருத்துமேடை, இலக்கண, இலக்கியச் சொற்களின் வளமையும் வலிமையும் குறித்த இலைமறை கனிகள், தமிழ் வளர்க்கும் தாளாணமைகள், மரபுப் பாடல்களை மீண்டும் செயலுக்குக கொணரும் பாங்கில் அமைந்த குறித்தபடி படைத்த பாடல்கள், இலக்கண வினாக்களுக்கு ஏற்ற விடை தரும் பகுதியாகிய தடுமாறா இலக்கணம், தனித்தமிழ் நடையில் தமிழ்ப்பெயர் தாஙகிய கதைமாந்தர்களின் வாழ்வியலைச் சொல்லும் சிறுகதைகள், பரிசுத்திட்டம் கொடுத்து மாணவர் களுக்கு ஊக்கப்படுத்தும் மாணவர் பக்கம், பொதுவான நிலையில் சொற்பொருள் ஆராய்ச்சி செய்யும் வினாதலும்

விடுத்தலும், தமிழ் உணர்வாளர்களின் நூல்களைத் திறனாய்வு செய்யும் நூல்நிறை, தமிழ் விழிப்புணர்வுக் கவிதைகள் என்கின்ற தனித்துவமான உள்ளடக்கங்களைக் கொண்ட தெளிதமிழ் இதழின் அனைத்துப் பகுதிகளையும் மேலோட்டமாகவும் ஒரு சில பிரிவுகளை ஆழமாகவும் பார்க்கின்ற ஆய்வுப் பார்வை யுடன் இக்கட்டுரை எழுதப்பட்டுள்ளது.

வணிக நோக்கில் லாபத்தை மட்டும் குறியாகக் கொள்ளாமல், கொள்கை ரீதியில் தமிழ் வளர்ச்சிக்கென சிற்றிதழ் பாங்கில் வெளிவரும் தெளிதமிழ் புதுச்சேரியில் இருந்து புறப்பட்டாலும் அங்குள்ள தமிழ் உணர்வாளர்கள் மட்டுமன்றித் தமிழகத்தில் உள்ள தமிழ்ப் பற்றாளர்களின் இல்லங்களிலும் நீக்கமற நிறைந்துள்ளது. தமிழுக்கு ஆக்கமும் ஊக்கமும் தரக்கூடிய பல்வகைச் செய்திகளைத் தாங்கி வரக்கூடிய இவ் இதழின் கருத்தாக்கங்கள் எளிய மக்களையும் சென்றடைந்தால் குறித்ததொரு பாதையில் தமிழ் வளர்ச்சி என்றென்றும் உயர்வு பெறும். தெளிதமிழ் இதழினைப் படிக்கும் வாசகர்களும், உணர்வுகளை உருவேற்றும் படைப்பாளர்களும், தமிழர், தமிழ்மொழி, தமிழர்நாடு, இவற்றின் முன்னேற்றத்தினை மனத்திற் கொண்டு தெளிதமிழை அனைத்து இடங்களுக்கும் கொண்டு சென்று பரப்புதல் வேண்டும். அம்முயற்சி தமிழ் மொழிக்குச் செய்யும் அளப்பரும் பணியாகும்.

# தமிழ் வளர்ச்சியில் தமிழ்ப்பாவையின் பன்முகப் பணி

**முனைவர் சி. வாசுகி**

தமிழ் தனித்துவம் பெற்றது; தொன்மைக்காலம் முதல் அது உரிய முறையில் மக்களின் பேச்சுத்தமிழ் வாயிலாகவும் வாழ்க்கை முறையின் மூலமாகவும் இனிதே வளர்ந்தது. அயலாரின் அறிவீனத்தால் அயற்சொல் கலப்பு ஏற்பட்டது. வந்தாரை விருந்தோம்பிப் பரிவு காட்டி வாழவைக்கும் தமிழரின் பண்பே தங்கள் மொழியின் தூய்மையைப் பிறர் கெடுப்பதற்கும் வாய்ப்பாக அமைந்தது. இதனால் ஆரியர் - திராவிடர், வடமொழி - தமிழ் என்ற பிரிவினைகள், போராட்டங்கள் ஏற்பட்டு இன்றுவரைப் பனிப்போராகவே இருந்து வருகின்றது. இருப்பினும் தமிழின் தனித்துவம் பேணப்படும் சூழல் முழுமை யாகத் தமிழர்களுக்கு இன்று வரை வாய்க்கவில்லை.

எனினும் இப்பணியைத் தங்களுக்கு இட்டதுபோல் சிரமேற்கொண்டு தமிழ் ஆர்வலர்களும் சான்றோர்களும் தமிழ்ப் பேரறிஞர்களும் செய்து வருகின்றனர். பேரிதழ்களும் சிற்றிதழ் களும் இப்பணியில் தங்கள் கடமைகளைத் தவறாது ஆற்றி வருகின்றன. இவ்விதழ்களுள் இலக்கிய வளர்ச்சியையும் சமுதாய வளர்ச்சியையும் மையமாகக் கொண்டு வெளிவரும் இதழ்களும் மரபுப் பின்னணியில் தமிழின் தனித்துவத்தைக் காப்பதை நோக்கமாகக் கொண்டு வெளிவரும் இதழ்களும் உள்ளன. இவ்விரண்டு காரணங்களையும் முதன்மையாகக் கொண்டு செயல்படும் இதழ்களும் உள்ளன. இவற்றுள் ''தமிழ்ப்பாவை''யும் ஒன்று. இரண்டாயிரத்து நான்கு சனவரி முதல் திசம்பர் வரையுள்ள ஓராண்டுக்காலத் தமிழ்ப்பாவை இதழ்கள் இவ்வாய்வின் மூலமாகக் கொள்ளப்பட்டுள்ளன.

**தமிழ்ப்பாவை - அறிமுகம்**

தமிழ் நெறிக்காவலர் கருணைதாசன் அவர்களை ஆசிரியராகக் கொண்டு மதுரையிலிருந்து மாதந்தோறும் வெளிவரும் சமுதாய,

முதுநிலை விரிவுரையாளர், தமிழ்த்துறை, அ.ப.ம. கல்லூரி, பழனி.

மரபுக்காவல் இதழ் தமிழ்ப்பாவை. இதன் துணை ஆசிரியர் எபிநேசர் ஆவார். எழுத்தாளர் மன்றத் திங்களிதழ் என இவ்விதழ் சுட்டப் படுகின்றது.

### தமிழ்ப்பாவையின் நோக்கம்

1963-ஆம் வருடம் தொடங்கி ஆசிரியரின் பல்வேறு பணிப்பளுவால் 1969-இல் தடைப்பட்டு மீண்டும் புரட்சித் தலைவர் ம.கோ.இரா. அவர்களின் உதவியாலும் உந்துதலாலும் 1986-இல் வெளிவரத் தொடங்கி, பத்தொன்பதாம் அகவையை நிறைவு செய்து இருபதாம் அகவையில் வெற்றிநடை போட்டு வருகின்றது. இவ்விதழின் நோக்கத்தை இவ்விதழ்க் கருத்தின் மூலமே நாம் புரிய முயற்சிப்போம். "நம்முடைய தமிழினத் திற்கு நாட்டுப்பற்று என்றால் என்ன என்பதை உணர்த்த பிற நாட்டுத் தலைவர்களின் வரலாற்றைப் பதியவைக்க வேண்டும் என்ற நோக்கில் இப்பகுதியைத் தொடர்ந்துள்ளோம். முதலில் குமுகாயப் புரட்சியும் பண்பாட்டுப் புரட்சியும் தந்தை பெரியார் போன்று தொடங்கி வெற்றி கண்ட சீனப் பெருநாட்டின் தலைவர் 'ஓசிமின்' அவர்களைப் பற்றித் தொடங்கியுள்ளோம். இதுபோன்ற வரலாற்று உண்மைகளை நம் இளைஞர்களிடம் ஊட்டினால் தமிழ்நாட்டு மாணவர்கள் உணர்ச்சியுள்ள தமிழினம் அறிந்து தெளிவு பெற வேண்டும். நாட்டு மக்கள் அந்த உணர்ச்சிகளோடு வாழவேண்டும் என்ற நம்பிக்கையில் தொடங்கியுள்ளோம். ஓசிமின்னின் ஆளுமையும் பிரெஞ்சு, சப்பானிய சீனப் படைகளை எதிர்த்து வியட்நாமியரின் வாழ்வியலையும் நம் தமிழ்மக்கள் புரிந்துகொள்ள வேண்டும், உணர்வு பெற வேண்டும்.! (தமிழ்ப்பாவை, 1.4.2004, ப.12)

மேற்கண்ட கருத்தின் வாயிலாகத் தமிழ்மக்கள் தமிழ் உணர்வு பெற வேண்டும்; அதுவும் உண்மையானதாக, உயர் வானதாக இருக்க வேண்டும்; தொடர்ந்து நீடிக்க வேண்டும் என்பதே தமிழ்ப்பாவையின் தலையாய நோக்கமாக அமைந் திருப்பதை அறியலாம்.

### ஆசிரியரின் சமுதாயப் பொறுப்பு

'பாவை இனியன்' என்னும் பெயரில் 'என் பயணப் பாதை' என்னும் வாழ்க்கை அனுபவத் தொடரைத் தமிழ்ப் பாவையில் எழுதி வருகின்றார். அன்றாட வாழ்க்கை முறை களுள் இன்றியமையாத நிகழ்வுகளின் பதிவு இவருடைய சமுதாயப் பொறுப்புக்குச் சான்று பகர்கின்றது. பல ஆண்டு

களுக்கு முன்னர் மதுரையில் நடைபெறவிருந்த பெரிய மதக் கலவரத்தைத் தனது துரித நடவடிக்கையால் நிகழாமல் தடுத்தார். ஒரு பத்திரிகையாளர் எவ்வெத் தகுதிகளைப் பெற்றிருக்க வேண்டுமோ அனைத்தையும் தமிழ்ப்பாவை ஆசிரியர் பெற்றிருக்கின்றார்.

ஒருநாள் அதிகாலை குன்றக்குடி அடிகளார் தொலைபேசியில் ஆசிரியரை அழைத்து ''மீனாட்சியம்மன் கோயில் பக்கம் போனீங்களா? அங்கு என்ன நடந்திருக்கிறது என்பதாவது தெரியுமா? என்றார். தெரியாதே சாமி! என்னவென்று சொலலுங்கள் என்றேன். மீனாட்சிகோயில் கிழக்குக் கோபுரத்தில் முசுலீம்கொடி ஏற்றப்பட்டிருக்கிறது. சற்றுச் சினத்துடன் கூறினார். நான் அதிர்ச்சியடைந்தேன். உண்மையா சாமி, யார் சொன்னது என்றேன். யார் சொன்னார் என்பது முக்கியமல்ல; நடந்திருக்கிறது உண்மை. அதுமட்டுமல்ல; இன்று பொழுதுக்குள் அந்தக் கொடியை அவர்கள் இறக்காவிட்டால் ஆர்.எசு.எசு. மாநாடு கோவையில் நடந்து கொண்டிருக்கிறது. மாலையில் முடிந்ததும் அத்தனை பேர்களையும் மதுரைக்குத் திருப்பிவிட்டு ஊர்வலமாக வந்து முசுலீம் கடைகள் அனைத்தையும் அடித்து நொறுக்கிக் கலகம் செய்யத் திட்டமிட்டிருக்கிறார்கள் (1.4.04, ப.2) என அடிகளார் கூறினார். இச்செய்தியைக் கேட்ட ஆசிரியர் கவலைப்படாதீர்கள் என அடிகளாரிடம் கூறிவிட்டு, இப்பிரச்சினையைத் தீர்ப்பது குறித்து உடனே ஆலோசனை செய்தார். மருத்துவர் சத்தார் சாகிபு, நாராயணஞ் செட்டியார் ஆகிய இருவரையும் சந்தித்து ஏற்பட்டுள்ள சிக்கலைத் தீர்க்க வேண்டும் என முடிவெடுத்தார். அப்படியே இருவரையும் சந்தித்தார். இருவருடைய ஆதரவும் கிடைத்தது. மீனாட்சியம்மன் கோயிலுக்குச் சென்றார். கோபுரத்தைப் பார்த்தார். பச்சைக்கொடி நாட்டப்பட்டிருந்தது. சினமடைந்தார். அருகிலுள்ளவர்களைப் பார்த்துக்கொடி ஏற்றப்பட்டதற்குரிய காரணத்தை வினவுகின்றார். ''அண்ணே இது முசுலீம் கொடி யில்லை. மறவர் சாவடியில் காமன் பண்டிகை கொண்டாடுவோம்''. அதற்காக இந்தக் கொடியை ஏற்றி மூன்றாம் நாளான இன்று பொழுது சாயும் நேரத்தில் கீழே இறக்கி விடுவோம். அதற்காக ஏற்றப்பட்ட கொடிதான்'' என்றார் ஒருகடைக்காரர். (மேலது, பக். 4-5) நடந்த உண்மையோ இவ்வாறிருக்க ஏற்படவிருந்த நிகழ்வோ ஆபத்தானதாக இருந்தது.

> **''சமன்செய்து சீர்தூக்குங் கோல்போல் அமைந்தொருபால்**
> **கோடாமை சான்றோர்க் கணி''** (குறள் : *118*)

என்ற குறளுக்கேற்பத் தக்க சமயத்தில் தன் சான்றாண்மையை ஆசிரியர் வெளிப்படுத்தியுள்ளார்.

"மக்களைக் கவரப் பல்வேறு வழிமுறைகளைப் பின்பற்றும் உரிமை பத்திரிகைகளுக்கு உண்டு. ஆனால் அந்த உரிமை களைப் பின்பற்றும் பொழுது மக்களின் நலனைக் கெடுக்காமல் செயல்படவேண்டிய பொறுப்புணர்ச்சி பத்திரிகையாளருக்கு இருக்க வேண்டும். ஒற்றுமைக்கு வித்திடும் வகையில் செய்தி களை வெளியிட வேண்டும்" (சோ. கலைவாணி, பத்திரிகைக் கலை, ப.15) எனக் கலைவாணி அவர்கள் இதழியல் விதி களாகக் கூறுபவை தமிழ்ப்பாவை ஆசிரியரின் சமுதாயப் பொறுப்புடைமைக்கும் பொருந்துகின்றது.

அன்று அவர் பொறுப்புணர்ச்சியுடன் துரிதமாகச் செயல் பட்டிருக்காவிட்டால் எண்ணற்ற மனித உயிர்களும் அவர் களுடைய பொருளாதாரமும், சமுதாய நடவடிக்கைகளும் சேதமடைந்தும் தடைப்பட்டும் போயிருக்கும்.

**இளைஞர்களை விழிப்படையச் செய்தல்**

நமது குடியரசுத் தலைவர் டாக்டர் ஏ.பி.ஜே. அப்துல்கலாம் அவர்கள் அரிய ஆற்றல் படைத்தவர். அவர் செல்லும் இடங்களிலெல்லாம் மாணவர்களைச் சந்திக்கின்றார். இளம் நெஞ்சங்களில விதைக்கப்படும் நல்வித்துகளே எதிர்காலத்தில் நற்பயனை நாட்டுக்கு நல்குபவை என்பதனாலேயே அவர் அவ்வாறு செய்கின்றார். விவேகானந்தரும் இளைஞர்களை நோக்கியே தமது குறிக்கோள்களை விடுத்தார். கொண்ட கொள்கைகளைச் செயல்படுத்தும் வேகம் இளைஞர்களிடமே அதிகம் உண்டு. அவற்றை விவேகத்துடன் வெளிப்படுத்து வதற்கு வழிகாட்டினால் அவ்விளைஞர்கள் வாழும் வீடும் நாடும் எப்பொழுதும் ஏற்றப் பாதையிலே செல்லும். இதனை உய்த்துணர்ந்துதான் **தமிழ்ப்பாவையும்** செயல்படுகின்றது.

ஒவ்வொரு இதழிலும் "இளைஞனே இது உனக்காக" என்ற தொடரைத் தம்பிக்கு அண்ணன் எழுதுவதுபோல் அருளன் என்னும் பெயரில் கருணைதாசன் எழுதி வருகின்றார். இத்தொடர் அவ்விளைஞனைச் சமுதாயப் பொறுப்பு உடையவனாகவும் சிறந்த கல்வியாளனாகவும் நேர்மையும் ஒழுக்கமும் கொண்ட வனாகவும் தன்னம்பிக்கையும் ஊக்கமும் உடையவனாகவும் ஆக்கும் உந்து கோலாக அமைகின்றது.

## இளைஞன் - சிறந்த கல்வியாளன்

'கற்றோர்க்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு' என்பது நாம் அனைவரும் அறிந்த பொதுமை வாக்கு. இதனை அடைவதற்கு நெஞ்சில் ஊக்கமிருந்தால் போதும், பிற புறக் காரணங்கள் எவையும் குறுக்கீடாக அமையா. இத்தகைய தன்னம்பிக்கை உடையவனே சிறந்த கல்வியாளனாகத் திகழ முடியும். இதனை இரு கைகளையும் இழந்த பெண் வாயிலாகப் புரிய வைக்கின்றார். "ஒரு நேர்ச்சியில் (விபத்தில்) இரு கைகளையும் இழந்த சென்னை மாணவி மாளவிகா 10-ஆம் வகுப்புத் தேர்வில் அறிவியல், கணிதம் ஆகிய இரு பாடங்களிலும் நூற்றுக்குநூறு மதிப்பெண் பெற்றுச் சாதனை படைத்துவிட்டார். வினாக்களுக்கு விடைசொல்லி, உதவியாளரைக் கொண்டு தேர்வு எழுதினார். 500-க்கு 483 மதிப்பெண்கள் பெற்று முதலிடம் பெற்றுவிட்டார்... இவருடைய குறிக்கோள் என்ன தெரியுமா? இ.ஆ.ப. (ஐ.ஏ.எஸ்.) படித்து மாவட்ட ஆட்சியராக வரவேண்டும் என்பதே"! (1.7.04, ப.12) இத்தகைய சிந்தனை இளைஞர்கள் மத்தியில் வளரவேண்டும். பெற்றோரைக் குறை கூறியும், குடும்பச் சூழலைக் காரணங் காட்டியும், தனக்கு இருக்கும் சிறு சிறு உடற்குறைகளை வெளிப்படக் கூறியும் படிப்பதிலிருந்து தப்பிக்க நினைக்கும் இளைஞர்கள் இந்நிகழ்வைப் படிப்பினையாகக் கொள்ள வேண்டும்.

## இளைஞனின் தன்னம்பிக்கை

1.6.04-ஆம் நாள் வெளிவந்த இதழில் ஓர் இளைஞன் தொடர்வண்டியில் தற்கொலை செய்து கொண்ட நிகழ்வைக் குறிப்பிட்டு ஆசிரியர் இளைஞனுக்கு அறிவுரை கூற முனைகின்றார். வாழ்வில் ஏற்படும் சிக்கல்களுக்குத் தற்கொலைதான் காரணம் என்றால் உலகில் மனித இனம் வேரூன்ற முடியாது. சூழலுக்கு ஏற்ப மனத்தைப் பழக்கப்படுத்தி வாழக் கற்றுக் கொள்ளவேண்டும். "வாழ்க்கை என்னும் சூதாட்டத்தில் வெற்றி பெற என்ன செய்யலாம் என்று நீ கேட்பது என் காதில் விழுகிறது. நான் உனக்குக் கூறுவது எந்த வேலையை நீ தேர்ந்தெடுக்கிறாயோ அதில் முழு ஈடுபாட்டையும் காட்டு; வாழ்வில் வெற்றி பெறுவாய். இதுவே அதன் மறைபொருள் (இரகசியம்) நீ ஏற்றுக்கொண்ட பணியில் களைப்போ, வெறுப்போ ஏற்படாது. கரணியம், நீ அதை மனமுவந்து

ஏற்றுக் கொள்கிறாயல்லவா? எனவே அது ஒரு சுமையாகவே தெரியாது'' (1.6.04. ப.17) என இறைவனிடம் பேசுகின்றார். இத்தகைய மனப்பக்குவம் எல்லோரிடமும் ஏற்பட்டுவிட்டால் துயரங்கள் அனைத்தும் தூள் தூளாகச் சிதறிவிடும். இச்சிந்தனை ஒவ்வொரு இளைஞனின் மனத்திலும் ஏற்படவேண்டும் என்பதே இத்தொடரின் நோக்கமாகும்.

**இளைஞனுக்கு அறத்தை வலியுறுத்தல்**

*''அறித்தினூஉங்கு ஆக்கமும் இல்லை அதனை*
*மறத்தலின் ஊங்கில்லை கேடு''* (குறள். 32)

என்பது வள்ளுவம். இதைப் போன்று தமிழ் இலக்கிய நூல் ஒவ்வொன்றும் இயன்றளவு தகுந்த இடங்களில் அறத்தை வலியுறுத்திச் செல்கின்றன. இதனை நாம் அனைவரும் கற்கின்றோம். ஆனால் மனத்தில் நிலை நிறுத்துகின்றோமா என்றால் அது வினாக்குறியே.

மனிதன் அறம் பிறழாமல் வாழவேண்டும் என்பதே நியதி. இதை அறிந்தும் தன்னலத்திற்காக, தற்பெருமைக்காக, தன் மகிழ்ச்சிக்காக அறம் பிறழ்ந்து நடக்கின்றோம். அனைத்தும் அறிந்திருந்தும் தவறு செய்யும் பெரியவர்களிடம் அதனை எடுத்துக் கூறித் திருத்த முயல்வது வீண் முயற்சியாக முடிந்து விடும். ஆனால் அறந்தை நிலைநாட்ட வேண்டும். இதற்குரிய வழி யாது எனச் சிந்தித்த நம் குடியரசுத் தலைவர் அப்துல்கலாம் ஓர் எளிமையான வழியைக் கையாள்கிறார். பணி நிமித்தம் எங்குச் சென்றாலும் மாணவர்களைக் தவறாது சந்திக்கின்றார். அவர்களிடம் ''ஊழல் - கையூட்டு இல்லாத இந்தியாவை நீங்கள் தாம் உருவாக்க வேண்டும். ஓர் இயக்கத்தைத் தொடங்குங்கள். ஊழலை ஒழிக்கும் சிந்தனையை முதலில் உங்கள் வீட்டில் இருந்தே தொடங்கவேண்டும். ஆசிரியர்களும் பெற்றோர்களும் இதற்கான முயற்சியில் ஈடுபடவேண்டும். ஊழலைச் சட்டத் தினால் ஒழிக்க முடியாது. தாய், தந்தை, ஆசிரியர்கள் ஆகிய மூன்று தரத்தினரும் வழங்கும் சிந்தனை மூலம் நாட்டை வளப்படுத்துங்கள். சிறப்பான கல்வி மூலம் ஊழலை ஒழிக்க முடியும்'' (1.3.04, ப.16) எனக் கூறுகின்றார். அப்துல்கலாம் அவர்களின் கருத்தை எடுத்தியம்புவதன் மூலம் நேர்மையான இந்திய இளைஞர்களை உருவாக்க ஆசிரியர் முற்படுகின்றார்.

**இளைஞனின் மொழிப்பற்று**

தன்னம்பிக்கையையும் அறத்தையும் இளைஞர்களிடம் வலியுறுத்திய ஆசிரியரின் கடமைகளுள் மொழிப்பற்றை ஏற்படுத்துவதும் தலைசிறந்ததாகும். அதையும் தவறாது தம் இதழ் மூலம் செய்திருக்கின்றார். இதைச் செய்யத் தவறுவது தாயை மறந்ததற்குச் சமமானது. இதனை வலியுறுத்த நீதிமன்ற நிகழ்வைச் சுட்டிக் காட்டியுள்ளார். 'நீதிமன்றத்தில் தமிழுக்குத் தடையா' என்பது இச்செய்தியின் தலைப்பாகும்.

தமிழில் நீதிமன்றங்களில் வாதிடக்கூடாது என உயர்நீதி மன்றத்தில் தடைவிதிக்கப்பட்டுள்ளதை எடுத்துக்கூறி, உலகின் பிற நாடுகளில் எம்மொழி நீதிமன்றங்களில் வாதங்களை எடுத்துக் கூறப்பயன்படுகின்றது என்பதையும் கூறுகின்றார். "உலகில் முன்னேறிய நாடுகளான சீனா, உருசியா, சப்பான், பிரான்சு, செர்மன், நார்வே, இத்தாலி ஆகிய நூற்றுக்கு மேற்பட்ட நாடுகளில் உயர்நீதிமன்றமொழி ஆங்கிலமாக இல்லை. அந்தந்த நாட்டுமொழியே நீதிமன்ற மொழியாக உள்ளது என்பதைப் புரிந்துகொள். ஏன், 17-ஆம் நூற்றாண்டு வரை இந்த நாட்டு மககளுக்கு அந்நிய மொழியான இலத்தீன் தான் நீதிமன்ற மொழியாக இருந்தது. சுமைதூக்குபவரின் மொழியாகத்தான் ஆங்கிலம் இருந்தது. ஆனால் நல்லோர் பலர் போராடியதின் பயனாக 1731-ஆம் ஆண்டில் இங்கிலாந்து பாராளுமன்றத்தில் 2-ஆம் ஜார்ஜ் மன்னர் நீதிமன்றங்களில் ஆங்கிலம் தான் பேசவேண்டும், இலத்தீனில் பேசினால் 50 பவுண்ட் தண்டம் தண்டப்படும் என்ற சட்டம் இயற்றினார்" *(1.10.04, ப.15)* என்ற உண்மையை எடுத்துக்கூறித் தமிழக இளைஞரிடம் தமிழுணர்வை ஏற்படுத்த முனைகின்றார். இவ்வாறு கூறுவதோடு நில்லாமல் "வழக்கு என்பது வானிலிருந்து கீழே விழுவதல்ல. மக்களிடையே மக்களால் ஏற்படும் சிக்கல்கள்தாம் வழக்கு. உறவு, உழைப்பு, உற்பத்தி, தொழில், குடும்பம், குழப்பம், பண்பாட்டுச் சிதைவு இவைகளின் சார்பாக எழுவதுதான் வழக்கு. இதை விளக்கக் கையில் ஏந்தப்பெறும் விளக்குத்தான் நீதி. அந்த நீதி விளக்கின் ஒளி மக்கள் மொழியில் உரையாடு வதும், தருக்கம் செய்வதும், தெளிவுபடுத்துவதும், புரிந்து கொள்வதுமான பயன்பாட்டுப் பயனாக அமைய வேண்டுமே தவிர இருளில் சிக்கித் தவிக்கும் அவலமாக அமைந்துவிடக் கூடாது" (மேலது) எனத் திட்டவட்டமான தீர்ப்பையும் கூறுகின்றார். சொல்ல நினைத்த கருத்தை உரியவருக்குத்

தெளிவாகப் புரிய வைப்பதற்காகத் தக்க சான்றுகளை எடுத்துக் காட்டிப் பொருந்தும் வகையில் வாழ்வியல் விளக்கங்களை எளிய நடையில் எடுத்துக்கூறி விளங்க வைப்பது இவருடைய தனித்தன்மையாக விளங்குகின்றது.

**தனித்தமிழ்ப் பற்று**

தமிழ்ப்பாவையின் தலையாய நோக்கம் எங்கும் எதிலும் தனித்தமிழ் என்ற நிலையை உருவாக்குவதேயாகும். எனவே இதழெங்கும் அயற்சொல் கலவாமல் அரசியல், சமுதாயம், மொழியுணர்வு, பொது அறிவு போன்ற அனைத்து வகைச் செய்திகளையும் கொடுத்து வருகின்றார்.

நாட்டுக்கு நலம் பயக்கும் எக்கொள்கையானாலும் நிலைத்துச் செயல்பட்டுப் பயன் நல்க வேண்டுமெனில் வீட்டிலிருந்தே தொடங்க வேண்டும். அப்பொழுதுதான் எவ்வித இடையீடும இல்லாமல் அது வளர்ந்து வர இயலும். அவ்வகையில்தான் ஆசிரியரின் தனித்தமிழ் வளர்க்கும் திறனும் அமைந்துள்ளது.

பண்பாட்டிலும் பழக்கவழக்கங்களிலும் நவீனத்தை நாடும் மக்கள் விரும்பி ஏற்கின்றனர். குழந்தைகளுக்குப் பெயர் சூட்டும் முறை மேலும் மேலும் புதுமையடைந்து வருகின்றது. மொழி முதல் எழுத்துகள், மொழி இறுதி எழுத்துகள் தொடர்பாகத் தொல்காப்பியர் கூறிய கொள்கைகள் யாவும் தவிடுபொடியாகிவிட்டன. இப்பெயர்கள் பெற்றோர்க்கும் குழந்தைகளுக்கும் நாகரிகக் கௌரவத்தை ஏற்படுத்தினாலும் நாள்தோறும் மொழிச்சிதைவை ஏற்படுத்தாமலில்லை. இதனை நாம் அறியத் தவறுகின்றோம்.

தமிழ்ச் சான்றோர்கள் தமிழைச் செம்மொழியாக ஆக்கு வதற்குப் பல்வேறு முயற்சிகள் எடுத்துக் கொண்டிருக்கும் இவ்வேளையில் நம் பிள்ளைகளின் பெயர்கள் சொல்லி அழைக்க இயலாத வகையில் புதுமையாக இருப்பது கேலிக்குரியதாகும். அந்நியக் கலாச்சாரத்தைக் கடைப்பிடிக்கத் துடிக்கும் மக்களின் அறியாமையால் இது நிகழ்கின்றது. இதனைப் போக்கும் வகையில் தமிழ்ப்பாவையில் ''தமிழா! உன் பெயர் தமிழா! உங்கள் குழந்தைக்கு நல்ல தமிழில் பெயரிடுங்கள்'' எனற செய்தி அமைகின்றது. ''அருணகிரி - அருணமலை, அருளானந்தன் - அருளியன், அழகிரி - அழகுமலை, ஆனந்தன - மகிழ்நன்... '' *(1.8.04. ப.21)*. என பி.இரா. அரசெழிலன் எனபவர் அகரவரிசைப்

பாடி எழுதி வருகின்றார். அதேபோல் புதுச்சேரியைச் சேர்ந்த முனைவர் இரா. திருமுருகன் அவர்கள் தரும் 'ஆங்கிலம் - தமிழ்ச் சொற்களஞ்சியம்'' (மேலது. ப.27) என்ற செய்தியும் தமிழ்ப்பாவையின் தனித்தமிழ் வளர்ச்சிக்குச் சான்றாக அமைகின்றது.

தமிழகத்தில் பட்டி தொட்டிகளிலும் வாழும் தமிழக மக்களால் பின்பற்றப்படும் நாகரிக முறைகளில் 'அம்மாவை மம்மி' என அழைக்கும் பழக்கமும் ஒன்று. புதுமையான ஒன்றை நாம் வாழ்க்கையில் பின்பற்ற முற்படும்பொது சிந்தித்துச் செயல்படுகிறோமா என்றால் பெரும்பாலும் இல்லை என்றே கூறலாம். ஏனெனில் சிந்தித்திருந்தோமானால் நமக்குரிய பண்பாட்டை மறந்து, அந்நியச செயல்பாடுகளை அடுக்கடுக்காய் நாம் வரவேற்றிருக்கமாட்டோம். இப்பொழுது நம் மொழியில் மட்டும் கலப்பு ஏற்படவில்லை. நம் வாழ்க்கை முறைகள் அனைத்திலுமே கலப்பு ஏற்பட்டுள்ளது.

''கெய்ரோ காட்சியகத்தில் (மியூசியம்) வைக்கப் பெற்றுள்ள மம்மிகள் நம்மை வியப்பில் ஆழ்த்துகின்றன. பண்டைய எகிப்தியர்கள் இறப்பதற்குப் பின்பும் மறுவாழ்க்கை இருப்பதாக நம்பினார்கள். அதற்காக இறந்தவர் உடலைப் பதப்படுத்திப் பாதுகாத்தார்கள். இந்தப்பாடம் செய்யப் பெற்ற உடல்களைத் தான் மம்மி என்று கூறுகின்றனர். மம்மி என்பது ஆங்கிலச் சொல் அல்ல. மம்மியா என்ற அரபுச் சொல்லிலிருந்து பிறந்தது. மம்மியா என்றால் பதப்படுத்தப்பட்ட உடல் என்ற பொருளாம். ஆக நம் குழந்தைகள் பெற்ற தாயைப் பிணமே என்று அழைக்கலாமா? அவர்கள் பிணமாகலாமா? குழந்தைகளே தெரிந்து கொள்வீர்.'' (1.8.04, ப.19) எனவரும் செய்தி ஆங்கில நாகரிகத்தின்மீது நாம் கொண்டுள்ள மோகத்தை அகற்ற உதவுகின்றது. 'மம்மி' என்ற சொல்லின் உண்மைப்பொருளை அறிநதிருந்தோமென்றால் நம் குழந்தைகளுக்கு 'மம்மியை' நாமே கற்றுக் கொடுத்திருப்போமா? இதேபோன்று எண்ணற்ற சான்றுகளைக் கூறிக்கொண்டே செல்லலாம். இதனையறிந்தாவது நாம் திருந்துவோம்.

**நிறைவுரை**

தமிழ்ப்பாவை தன் பெயருக்கேற்பப் பாங்குடன் தன் பணியைத தமிழுலகில் ஆற்றி வருகின்றது. நேரடியாகச் சொல்ல வேண்டிய செய்திகளை நேரடியாகவும் இடித்துக்

கூறவேண்டிய செய்திகளை அவ்வண்ணமே கூறாமல் தாய்மை உள்ளத்துடன் எடுத்துக் கூறியும தன் நோக்கத்தை அது நிறைவேற்றுகின்றது. இதன் நோக்கம் தமிழை வளர்ப்பது என்றாலும் சமுதாயச் சீர்திருத்தம் முதன்மைப் பணியாகத் திகழ்கின்றது. குழந்தைகள், இளைஞர்கள், பெரியவர்கள் என அனைவரும் விரும்பிப் படிக்கும் வகையில் பல வகையான செய்திகளைத் தொகுத்தும் வகுத்தும் எளிமைப்படுத்தியும் தருகின்றது. கூர்ந்து நோக்குவோமெனில் தமிழ்ப்பாவையின் பணி தரணியையே செம்மையாக்கும் பணியாகத் திகழ்கின்றது. தமிழை வளர்க்கும் தமிழர்கள் ஒழுக்கத்திலும் பிறவகையாலும் செம்மைப் பண்பு கொண்டவர்களாகத் திகழ்ந்தால்தான் அவர்களால் தமிழைச் செப்பமுறக் காக்க முடியும் என்ற சிந்தனையை மையப்படுத்திச் செயல்படுகிறது.

# சில தமிழ்வளர்ச்சி இதழ்கள்

அ.குரு. ஆறுமுகம்

இந்திய வரலாறு இரு பிரிவானது. ஒன்று வடஇந்திய வரலாறு. மற்றது தென்னிந்திய வரலாறு. வட இந்திய வரலாறு வாய்மொழியாக வந்தது. தென்னக வரலாறு வாய்மொழியாக மட்டுமன்றி இலக்கியம், கல்வெட்டுகளில் உள்ளது. அதுவும் தமிழ்ச் சங்க இலக்கியங்களில் உள்ளது. தமிழில் 60,000 கல்வெட்டுகள் உள்ளன. இவற்றில் கி.மு.3ம் நூற்றாண்டுக்கும் முறபட்டவையும் உண்டு. வரலாற்றுக்கு முந்திய தென்னகத்தின் இயற்கை நிலையையும், வரலாற்றையும் அறிய வேண்டு மெனில் சங்க இலக்கியத்தைப் படிக்க வேண்டும். தமிழாசிரி யர்கள் இப்போது வரலாற்று ஆசிரியர்களாக மாறிக்கொண்டி ருக்கிறார்கள். வரலாற்று அசிரியர்கள் தமிழைப் படிப்பதில்லை. தமிழில்தான தென்னக வரலாறே உள்ளது. அதை மலையாளம், கன்னடம், தெலுங்கு மற்ற திராவிட மொழி பேசுவோர் படிக்க வேண்டும். இப்போதுள்ள மோசமான நிலை என்னவென்றால் தமிழாகள் தங்கள் அறிவுச் சொத்தை இந்தியாவின் பிறமொழி களிலும், அய்ரோபபிய மொழிகளான இங்கிலீசு, பிரெஞ்சு, செர்மனி, ஸ்பானிஷ் போன்ற மொழிகளிலும் மொழியாக்கம் செய்யவில்லை. வரலாறு நிலைக்க வேண்டுமெனில் அவர்கள் அதைச் செய்ய வேண்டும்.

முனைவர் சட்டார் (*Sattar*), இந்திய வரலாற்று ஆய்வுக் கழகதத்தின் முன்னாள் தலைவர் கோழிக்கோட்டில் 2004 பிப்ரவரியில் நடைபெற்ற தென்னிந்திய வரலாற்றுப் பேரவைக் கூடடத்தில் ஆற்றிய தலைமையுரையே மேலே சொல்லப் பட்டவை. இவர் ஒரு கன்னடத்துக்காரர்.

இந்தியாவிலேயே தனித்தன்மையுடன் வடமொழி ஆதிக்கத்திலிருந்து மொழியையும், இனத்தையும் காப்பாற்றிக் கொண்டிருந்த தமிழர்கள் இன்று அந்த நிலையில் இல்லாதது

---

செங்கதிர் இலலம், 1/361, திருமூலர் வீதி
அழகாபுரம் நகர மலைசசாலை, சேலம் - 636 016

வருத்தமளிக்கிறது. (வி.டி. இராசசேகர் ஆசிரியர் தலித்வாய்ஸ், பெங்களூர்.)

உலகத்திலேயே கப்பல் கட்டும் தொழிலில் முன்னணியில் இருந்தவர்கள் தமிழர்கள். இது சங்க கால வரலாறு.

இந்த நூற்றாண்டின் இறுதியில் உலகமொழிகளில் 90 விழுக்காடு அழிந்துபோகும் என்கிறார் இந்திய மொழிகள் ஆய்வு மைய இயக்குநர் முனைவர் உதயநாராயணசிங் - மைசூர்.

இந்திய மொழிகளிலேயே முதன்முதலில் அச்சேறிய மொழி தமிழ். இணையத்திலும் அப்படியே ஆனால் இன்று காணும் நிலைமையென்ன? ஊடகங்கள் நமது மொழியை நாளும் வதைசெய்து கொண்டிருக்கின்றன. நாம் காலம் காலமாகப் படித்து வந்த சில இதழ்களே இன்று தமிழை ஏதோ வாழ வைத்துக் கொண்டிருக்கின்றன. நமக்கு நாள், வாரம் இருமுறை, வாரம், மாதமிருமுறை, மாதம், இருமாதம், காலாண்டு என நூற்றுக்கணக்கான இதழ்கள் இன்று கிடைக்கின்றன. இவற்றில் பெரும்பாலும் ஆங்கிலக் கலப்பு மிகையாகி வருகிறது. உலகில் மொழியை மறந்து ஆங்கில மோகம் கொண்டு அலைவோர் நம்மைத் தவிர வேறு கூட்டத்தினரைப் பார்ப்பது அரிது.

இத்தகைய சூழலில் தமிழை வளர்க்கும் பணியில் சில இதழ்களை இங்குக் காணலாம்.

**வார இதழ்**

அந்தமான் முரசு

போர்ட் பிளேயரிலிருந்து நீண்ட காலமாக வருகிறது. மொழி, கலை, பண்பாடு, இலக்கியம், சமூகம் ஆகிய அனைத்துச் செய்திகளையும் தாங்கி வருகிறது.

நாத்திகம்

பகுத்தறிவுச் சிந்தனையை வளர்க்கிறது. தமிழர் முன்னேற்றத்திற்குத் தடையாக உள்ள மூட நம்பிக்கைகளைத தோலுரித்துக் காட்டுகிறது. சென்னையிலிருந்து திரு. நாத்திகம் இராமசாமி அவர்களால் வெளியிடபபடுகிறது.

**மாதமிருமுறை இதழ்**

மக்கள் நெஞ்சம்

சென்னையில் இருந்து வருகிறது. பல்வேறு தமிழ் நிகழ்ச்சிகள், பகுத்தறிவு, பொது அறிவு பற்றிய செய்திகளைத் தருகிறது.

**மாத இதழ்கள்**

மொழிக்கான இதழ்கள்

தென்மொழி

பாவலரேறு பெருஞ்சித்திரனாரை நிறுவனராகக் கொண்டது. இதன் ஆசிரியர் அவரது முதல் மருகர் இறைக்குருவனார். தூயதமிழ்ப் பணியில் பாவாணர் வழிநின்று செயல்படுகிறது.

தமிழ்ச்சிட்டு

தமிழ்ச் சிறுவர் இதழ். சிந்தனையைத் தூண்டக்கூடியது. தென்மொழி வெளியீடு.

செந்தமிழ்ச்செல்வி

தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால் வெளியிடப்படுவது.

எழுகதிர்

தமிழ் இடிமுழக்கம் முனைவர் அரு. கோபாலன் வெளியிடுவது.

தமிழியக்கம்

பாரதிதாசன் தமிழியக்கத்தைப் பின்பற்றி வருவது. இப்போது தட்டுத் தடுமாறிக் கொண்டிருக்கிறது.

தமிழ்ப்பாவை

மதுரையிலிருந்து வெளிவருகிறது.

மேலே சொல்லப்பட்டவை எல்லாம் தமிழ்ப் பணியில் உள்ளவை.

காட்டுயிர்

இது முன்பு கானுயிர் என்ற பெயரில் வந்தது. இது கானுயிர்கள் பற்றிய செய்திகளை அறிவியல் வழிநின்று தருகிறது. பொள்ளாச்சியில் இருந்து வருகிறது.

**சூழலியல்**

சுற்றுச் சூழல் புதிய கல்வி

திண்டுக்கல்லிலிருந்து வெளிவருகிறது. சூழலியல் செய்தி களை மொழிக் கலப்பின்றித் தருகிறது. தொண்டு நிறுவனத்தால் வெளியிடப்படுகிறது.

நெய்தல் முகம்

கடற்சூழலியல் செய்திகளைத் தருவது. நாகப்பட்டினத்தி லிருந்து தொண்டு நிறுவனத்தால் வெளியிடப்படுவது.

பசுமைத் தாயகம்

சென்னையிலிருந்து வெளிவருகிறது.

வேளாண்மை

இன்று வேளாண்மைக்கான தமிழ் இதழ்கள் நிறையவே வருகின்றன. அவற்றில் மொழிக்கு முதன்மை கொடுத்து வெளியிடப்படும் இதழ்கள் சிலவே. அவற்றுள் தமிழின வாழ்வியல் பேரிகை இயற்கை வேளாண் அறிஞர் கோ. நம்மாழ்வார் அவர்களால் வெளியிடப்படுகிறது.

தாளாண்மை

திருமங்கலத்திலிருந்து வெளிவருகிறது. இவையிரண்டும் முழுக்க முழுக்க இயற்கை வேளாண்மை செய்திகளைத் தாங்கி வரும் தூய தமிழ் மாத இதழ்கள்.

வளரும் வேளாண்மை

கோவை வேளாண்மைப் பல்கலைக்கழகத்தால் வெளியிடப் படுகிறது.

ஸ்பைஸ் இந்தியா

இது கொச்சியிலிருந்து வருகின்ற வாசனைத் திரவியங்கள் பற்றிய மாத இதழ். ஆங்கில பெயரையே தமிழ்ப் பதிப்புக்கும் சூட்டிவிட்டார்கள்.

தன்முன்னேற்ற மாத இதழ்

தன்னம்பிக்கை கோவையிலிருந்து வருகிறது. இளைஞர் களுக்கு தன்னம்பிக்கையூட்டும் இதழ்.

**அறிவியல் இதழ்கள்**

கலைக்கதிர்

அறிவியல் இதழ்களின் முன்னோடி. கோவையிலிருந்து 58 ஆண்டுகளாக வெளிவந்து தமிழ் தெரிந்த அனைவருக்கும் நுட்பமான அறிவியல் செய்திகளைத் தமிழில் தருகிறது.

துளிர்

தமிழ்நாடு அறிவியல் இயக்கத்தின் மாத இதழ். சிறியவர், பெரியவர் படிக்கும் வகையில் செய்திகளைத் தருகிறது.

அறிக அறிவியல்

மறைந்த தவத்திரு. குன்றக்குடி அடிகளாரை நிறுவனராகக் கொண்டு தவத்திரு. பொன்னம்பல அடிகளாரை நிர்வாக ஆசிரியராகக் கொண்டு வெளிவருகிறது. இதன் ஆசிரியர்

குழுவினர் காரைக்குடி மின்வேதியல் ஆய்வகத்தைச் சேர்ந்த அறிவியல் அறிஞர்களே. இது ஆன்மீகத்தோடு அறிவியலையும் இணைக்கும் இதழ்.

**சமூகவியல் சார்ந்த இதழ்கள்**

சிந்தனையாளன் .

பெரியார் சிந்தனைகள் (மூன்று தொகுதிகள்) ஆசிரியர், திரு. வே. ஆனைமுத்து அவர்களை ஆசிரியராகக் கொண்டு வெளிவருகிறது. பிற்படுத்தப்பட்டோருக்கான மண்டல் குழு அமைக்கப்படுவதற்கு முழுமுதற்காரணமானவர் இவரே என்பது பலரும் அறியாத செய்தி. இவ்விதழ் கல்வி, பொருளியல், சமூக நீதி, தாராளமயம், உலகமயம், வேளாண்மை முதலான பல்வேறு மக்கள் சிக்கல்களை அலசி ஆராய்கிறது.

தலித்முரசு, தாய்மண், உழைக்கும் மக்கள் தமிழகம்

இவை அனைத்தும் தமிழ் நலம் சார்ந்த ஒடுக்கப் பட்டோர் உரிமை இதழ்.

தமிழ்நேயம், தமிழர் கண்ணோட்டம்

இவை மார்க்சீய வழியில் தமிழ் நலம் பேணும் தமிழ் இதழ்கள்.

புதிய கலாச்சாரம், புதிய ஜனநாயகம்

இவை தமிழ் மொழியை முன்னிறுத்தும் மார்க்சீய லெனினியக் கட்சியின் அரசியல், சமூக, கலை இலக்கிய இதழ்கள்.

**மருத்துவ இதழ்கள்**

சித்த மருத்துவ இதழ்கள் தமிழில் இப்போது பெருகிக் கொண்டு வருகின்றன. மருத்துவ இதழ்களுக்கு பேமிலி கெல்த், கெல்த் டைம் என்று பெயர்வைத்துத் தமிழில் இதழ் வெளி யிடுவோர் மத்தியில் அலோபதி மருத்துவம் பயின்ற இருமருத்து வர்கள் தமிழில் இரு மருத்துவ இதழ்களை நடத்துகின்றனர். அவை :

1. அறிவியல் மருத்துவ மலர்

காது, மூக்கு, தொண்டை நிபுணர், மரு. மு. குமரேசன் அவர்களால் சென்னையிலிருந்து வெளியிடப்படுகிறது.

2. மீனாட்சி மருத்துவ மலர்

சமூக நல்லிணக்க மருத்துவர், அறுவை மருத்துவர். ந. சேதுராமன் அவர்களால் மதுரையிலிருந்து வெளியிடப்படுகிறது.

இவர்களின் மருத்துவத்துடன் கூடிய தமிழ்த் தொண்டு பாராட்டப்படவேண்டியது.

**மக்கள் குடியுரிமை இதழ்**

குடிமக்கள் முரசு

அரசிடமிருந்து குடிமக்களுக்குக் கிடைக்க வேண்டிய உரிமைகளை எளிய தமிழில் தருகிறது. இதன் ஆசிரியர் திரு. அ.கி.வேங்கடசுப்ரமணியன். இவர் இந்திய ஆட்சிப் பணியைச் சேர்ந்தவர். ஓய்வு பெற்றவர்.

**இருதிங்களிதழ்கள்**

வேளாண்மை : 1.பசுந்தளிர்

இயற்கை வேளாண்மை இதழ். திருச்சியில் இருந்து வெளிவருவது. இப்போது தடுமாறுகிறது.

2. நம்வழி வேளாண்மை

இது இயற்கை வழி வேளாண்மையாளர்கள், மூலிகை மருத்துவர்கள் மற்றும் அடிமட்டக் கண்டுபிடிப்பாளர்களின் குரலோசை, மதுரையிலிருந்து வெளிவருகிறது.

**பொது**

நாளை விடியும்

பகுத்தறிவு, சமூகம், மொழி ஆகியவற்றை முன்னிலைப் படுத்தி வெளிவரும் இதழ், திருச்சிராப்பள்ளியிலிருந்து வெளி வருகிறது.

**மனித உரிமை**

மனித உரிமைக் கங்காணி

இது மனித உரிமைக்கான முழுமையான இதழ். மதுரையி லிருந்து வருகிறது. இதன் ஆசிரியர் கால் நூற்றாண்டுக்கும் மேலாக மனித உரிமையில் தொடர்புடைய கென்றிடிபேன்.

**காலாண்டு இதழ்**

களஞ்சியம்

அறிவியல் செய்திகள் தமிழில் வரவேண்டும் என்ற இலட்சியத்தை நோக்கமாகக் கொண்டு அண்ணா பல்கலைக் கழக வளர் தமிழ் மன்றத்தால் வெளியிடப்படுகிறது. கால தாமதமாக வந்து கொண்டிருக்கிறது.

மேலே கூறப்பட்ட இதழ்கள் யாவும் தமிழ் கூறும் நல்லுலகின் மீது பற்றும், பாசமும், பிடிப்பும், மக்கள் வாழ்வின் மீதும் அக்கறையும் கொண்டவை. எனவே தமிழ்நலம் விரும்புவோர் இவைகளின் வளர்ச்சியில் அக்கறைகொண்டு ஆதரிக்க வேண்டும்.

# தமிழ் வளர்ச்சியில் நூலிதழ்கள்

முனைவர் மோ. கோ. கோவைமணி

ஒரு நூல் பல பகுதிகளாகத் தொடர்ந்து வெளிவருவதைத் 'தொடர் வெளியீட்டு நூல்' என்கிறோம். இதனை வரிசை வெளியீடு என்றும், பகுதி வெளியீடு என்றும் குறிப்பிடு கின்றோம். இவ்வெளியீடுகளில் நூல்கள் மட்டுமே இடம் பெற்றிருக்கும். இவ்வெளியீடுகள் மாதத்திற்கொன்றோ, மாதத் திற்கு இரண்டோ, வாரத்திற்கொன்றோ, ஆண்டிற்கு நான்கோ (காலாண்டு) எனக் காலத்தை முறையாக வகுத்துக்கொண்டு தொடர்ந்து வெளிவருதால் இவற்றைச் சஞ்சிகைகள் - இதழ்கள்- பருவ இதழ்கள் என்றெல்லாம் குறிப்பிடுகின்றோம். இப்பருவ இதழ்களில் நூல்கள் மட்டுமே இடம்பெற்றிருப்பனவற்றை 'நூலிதழ்கள்' என்று குறிப்பிடலாம். (இக்கட்டுரைக்குள் குறிப்பிடப் பெற்றிருக்கும் ஆண்டு நூலிதழின் தொடக்க ஆண்டைக் குறிக்கும்)

**நூலிதழ் வகைப்பாடு**

நூலிதழ்களைத் தமிழ் நூலிதழ்கள் என்றும், மொழி பெயர்ப்பு நூலிதழ்கள் என்றும், பல நூலிதழ்கள் என்றும் மூன்றாகப் பகுக்கலாம். ஒரு குறிப்பிட்ட தமிழ் நூலை மட்டுமே தொடர்ந்து பகுதி பகுதியாக வெளியிட்டு வரும் நூலிதழைத் 'தமிழ் நூலிதழ்' என்றும், பிற இந்திய மொழிகளில் உள்ள சிறந்த நூல்களைத் தமிழில் மொழியாக்கம் செய்து தொடர்நது பகுதி பகுதியாக வெளியிட்டு வரும் நூலிதழை 'மொழி பெயர்ப்பு நூலிதழ்' என்றும், ஒன்றுக்கும் மேற்பட்ட நூல்களை (தமிழ் நூல்கள் மற்றும் மொழிபெயர்ப்பு நூல்கள்)த் தொடர்ந்து பகுதி பகுதியாக ஒன்றன் பின் ஒன்றாக வெளியிட்டு வரும் நூலிதழைப் 'பல நூலிதழ்' என்றும் அழைக்கலாம்.

தமிழ் நூலிதழ் என்பது, ஒரு குறிப்பிட்ட தமிழ்நூல் தொடர்ந்து வெளிவந்து நூல் முற்றுப் பெற்றவுடன் இதழின் வாழ்நாளும் நிறைவுறுவதாகும். குறிப்பாக, கம்பர் தமிழில்

---

ஓலைச்சுவடித்துறை, தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர் - 613 005.

எழுதிய 'கம்பராமாயணம்' எனும் நூல் 'கம்பராமாயணம்' என்ற நூலிதழில் பகுதி பகுதியாகத் தொடர்ந்து வெளியிடப் பட்ட நூல் முற்றுப் பெற்றவுடன் இவ்விதழ் நின்றுவிட்டதைக் குறிப்பிடலாம்.

மொழி பெயர்ப்பு நூலிதழ் என்பது, பிறமொழிகளில் உள்ள சிறந்த நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்து ஒரு நூலிதழ் போல் தொடர்ந்து வெளிவந்து நூல் முற்றுப் பெற்ற வுடன் இதழின் வாழ்நாளும் நிறைவுறுவதாகும். குறிப்பாக, மராத்திய மொழியில் மகிபதிபாவா என்பார் இயற்றிய 'பக்த விஜயம்' என்ற நூலைட் பலர் தமிழில் மொழிபெயர்த் திருக்கின்றனர்.

பல நூலிதழ் என்பது, நூற்பெயரையோ நூலாசிரியர் பெயரையோ நூலிதழின் பெயராகப் பெறாமல் ஒரு பொதுப்பெயரைப் பெற்று அவற்றுள் ஒரு தன்மைத்தான நூல்களைத் தொடர்ந்து வெளியிட்டு வருவதாகும். இவற்றில் ஒரு நூல் முற்றுப்பெற்றவுடன் வேறொரு நூல் தொடர்வதாக அமைந்திருக்கும். குறிப்பாக, 'இதிகாச மஞ்சரி' என்னும் பல நூலிதழில் முதலில் இராமாயணக் காதையின் உரைநடைப் பகுதி தொடர்ந்து வெளிவந்துள்ளது. இப்பகுதி முடிவடைந்த வுடன் அடுத்த இதழில் மகாபாரதக் கதையின் உரைநடைப் பகுதி தொடர்ந்து வெளிவந்துள்ளது. இப்படி இதிகாசக் கதைகள் ஒன்றன் பின் ஒன்றாகத் தொடர்ந்து வெளிவந்ததால் இதற்கு 'இதிகாச மஞ்சரி' என்ற பெயர் இட்டிருக்கின்றனர் எனலாம்.

**நூலிதழ் அமைப்பு**

நூலிதழ்களை அமைப்பு நிலையில் அகநிலை அமைப்பு, புறநிலை அமைப்பு என இரண்டு நிலைகளாகப் பகுக்கலாம். அகநிலை அமைப்பானது தமிழ் நூலிதழ், மொழிபெயர்ப்பு நூலிதழ், பல நூலிதழ் என்றவாறு அமைகிறது. புறநிலை அமைப்பானது பக்கங்களை அடிப்படையாகக் கொண்டும் இதழின் அளவு அடிப்படையாகக் கொண்டும் அமைகிறது.

நூலிதழை நூல் பெயரில் அமைந்த நூலிதழ் என்றும், நூலாசிரியர் பெயரில் அமைந்த நூலிதழ் என்றும், பொதுப் பெயரில் அமைந்த நூலிதழ் என்றும் மூன்றாகப் பிரிக்கலாம். மேலும் இவற்றைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம். நூல் பெயரில் அமைந்த அகநிலை நூலிதழை,

1. தமிழ் நூலிதழ்
2. மொழிபெயர்ப்பு நூலிதழ்
3. பல நூலிதழ்
   அ. ஒரு நூலாசிரியரின் நூல்களைக் கொண்ட பல நூலிதழ்
   ஆ. பல நூலாசிரியர்களின் நூல்களைக் கொண்ட பல நூலிதழ்

என்றும், நூலாசிரியரின் பெயரில் அமைந்த அகநிலை நூலிதழை,

1. ஒரு நூலாசிரியர் பெயரிலமைந்த நூலிதழ்
2. ஒன்றுக்கும் மேற்பட்ட நூலாசிரியர் பெயரிலமைந்த நூலிதழ்

என்றும், பொதுப்பெயரில் அமைந்த அகநிலை நூலிதழை,

1. அமைப்புப் பெயரிலமைந்த நூலிதழ்
2. சிறப்புப் பெயரிலமைந்த நூலிதழ்

என்றும் வகைப்படுத்தலாம். பக்க வரையறை கருதியும் காலங் கருதியும் இங்குத் தமிழ் நூலிதழ் மற்றும் மொழிபெயர்ப்பு நூலிதழ் குறித்து மட்டும் விளக்கப்பெற்றுள்ளது.

**1. நூல் பெயரிலமைந்த அகநிலைத் தமிழ் நூலிதழ்**

ஒரு குறிப்பிட்ட தமிழ் நூலின் பெயரிலேயே வெளிவரும் நூலிதழை 'நூல் பெயரிலமைந்த அகநிலைத் தமிழ் நூலிதழ்' எனலாம். இவ்வகையான நூலிதழ் மேலும் மூன்று நிலை களாகப் பகுக்கலாம். அவை

அ. செய்யுள் நடையில் அமைந்த தமிழ் நூலிதழ்
ஆ. உரைநடையில் அமைந்த தமிழ் நூலிதழ்
இ. செய்யுளும் உரைநடையும் அமைந்த தமிழ் நூலிதழ் என அமையும்

**அ. செய்யுள் நடையில் அமைந்த தமிழ் நூலிதழ்**

செய்யுள் நடையில் அமைந்த தமிழ் நூலிதழானது செய்யுள் வடிவமாகவே நூலிதழ் முழுவதும் அமைந்திருப்ப தாகும். இவ்வகையில் தமிழில் இயற்றப்பெற்ற பல நூல்கள் பலவேறு காலக் கட்டங்களில் நூலிதழ்களாக வெளிவந்திருக் கின்றன. குறிப்பாக,

1868 - கிருஷ்ணமாச்சாரியாரின் 'முதலாயிரம்'

1872 - சண்முக சுந்தரம் அவர்களின் 'சிவஞான போதம்'

1881 - பாலசுந்தர முதலியார் - வாசுதேவ பிள்ளை ஆகியோரின் 'தேவாரப் பதிகத் திருமுறைகள்'

1882 - கிருஷ்ணமாச்சாரியாரின் 'நாலாயிர திவவியப் பிரபந்தம்'

1885 - திருவேங்கடசாரியாரின் 'இயல்பா'

1897 நல்லசாமியின் 'சிவஞான சித்தியார்'

1894 - திருப்பாதிரிப்புலியூர் சிவசிதம்பர முதலியாரின் 'திருப்புகழ்'

1914 - என். கோடீஸ்வர ஐயரின கவிகுஞ்சரபாரதி இயற்றிய'ஸ்கந்தபுராண கீர்த்தனை'

1933 - திரு.வி.கலியாணசுநதர முதலியாரின் 'திருவிளை யாடற் புராணம்' போன்ற நூலிதழ்களைக் குறிப்பிடலாம்.

**ஆ. உரைநடையில் அமைந்த தமிழ் நூலிதழ்**

உரைநடை (வசனம்) யில் அமைந்த தமிழ் நூலிதழானது உரைநடை வடிவமாகவே நூலிதழ் முழுவதும் அமைந்திருப்ப தாகும். இவ்வகையில் தமிழில் இயற்றப்பெற்ற பல நூல்கள் பல்வேறு காலக் கட்டங்களில் நூலிதழ்களாக வெளிவந்திருக் கின்றன. குறிப்பாக, 1847 ஆம் ஆண்டு ஏ. சிற்றம்பல முதலியார் வெளியிட்ட 'வில்லிபாரத வசனம' என்னும் நூலிதழைக குறிப்பிடலாம்.

**இ. செய்யுளும் உரைநடையும் அமைந்த தமிழ் நூலிதழ்**

செயயுளும் உரைநடையம் அமைந்த தமிழ் நூலிதழானது செய்யுளும் உரைநடையுமாகவே நூலிதழ் முழுவதும் அமைந் திருப்பதாகும். இவ்வகையில் தமிழில் இயற்றப்பெற்ற பல நூல்கள் பல்வேறு காலக் கட்டங்களில் நூலிதழ்களாக வெளி வந்திருக்கின்றன. குறிப்பாக,

1840 - இராமாநுஜக் கவிராயரின் விளக்கவுரையுடன் 'திருக்குறள் பரி. உரை'

1872 - சண்முக முதலியார் உரையுடன் வெளிவநத 'உண்மை விளக்கம் எனும் சித்தாந்த தீபிகை'

1873 - சி. திருவேங்கடாசாரியார் உரையுடன் வெளிவந்த 'முதலாயிர வியாக்கியானம்'

1880 - பெரியவாச்சான் பிள்ளை உரையுடன் சோமையா முதலியாரின் 'திருவாய்மொழி'

1881 - பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானமும் பூர்வாசாரியர்கள் சேர்த்தருளின அரும்பத விளக்கமும், வியாக்கியானங்களைத் தழுவிச் சேர்க்கப்பட்ட பதவுரையும் கொண்டு திருவேங்கடாசாரியார் - கிருஷ்ணமாசாரியார் ஆகியோரின் 'பெரிய திருமொழி'

1882 - பெரியவாச்சான் பிள்ளை உரையுடன் எஸ். பார்த்தசாரதி ஐயங்கார் அவர்களின் 'பெரிய திருமொழி'

1883 - தி.க.சுப்பராயச்செட்டியார் உரையுடன் இ. ரத்தினவேலு முதலியார் வெளியிட்ட 'திருவிளையாடற்புரணம் உரையுடன்'

1883 - ஆறுமுகத்தம்பிரான் - அட்டாவதானம் சுப்பராய முதலியார் உரையுடன் பி. கிருஷ்ணசாமி முதலியார் - ஏ.ஆர்.நாகலிங்க முதலியார் ஆகியோரின் 'பெரியபுராணம் உரையுடன்'

1891 - டி.கே. சுப்பராயசெட்டியார் உரையுடன் சென்னை ஆதிகலாநிதி அச்சுக்கூடம் வெளியிட்ட 'காஞ்சிப் புராணம்'

1891 - சுப்பராயலு நாயக்கர் உரையுடன் வெளிவந்த 'பெரியபுராணம் உரையுடன்.

1892 - ஈக்காடு இரத்தினவேலு முதலியார் உரையுடன் டி. குப்புசாமி நாயக்கர் வெளியிட்ட 'காசி காண்டம்'

1894 - வேலூர் திருவேங்கடம் உரையுடன் வெளிவந்த 'நந்தமண்டல சதகம்'

1896 - இரத்தினவேலு முதலியார் உரையுடன் டி. குப்புசாமி நாயக்கர் வெளியிட்ட 'திருவிளையாடற்புராணம்' உரையுடன் (இதன் மறு நாளிதழ்ப் பதிப்பு 1935-ஆம் ஆண்டு வெளிவந்துள்ளது)

1896 - சூ. சுப்பராய நாயக்கர் உரையுடன் வெளிவந்த 'கந்தபுராணம் உரையுடன்'

1897 - என். வேதாசலம்பிள்ளை (மறைமலையடிகள்) உரையுடன் வெளிவந்த 'உண்மை விளக்கம் என்னும் சித்தாந்த தீபிகை'

1902 - கோ. வடிவேலு செட்டியார் - வி.பி. தெய்வநாயக முதலியார் ஆகியோரின் 'திருக்குறள் பரிமேலழகர் உரை'

1904 - காஞ்சிபுரம் இராமசாமி நாயுடு உரையுடன் சை.ர. நமசிவாய செட்டியார் அவர்களின் 'திருவருட்பா - திருமுறைகள் முழுவதும்'

1908 - திரு.வி.கலியாணசுந்தர முதலியாரின் அரும்பதக் குறிப்புரையும் வசனமும் கொணடு வி. உலகநாத முதலியார் - ஆ.சிவசங்கர முதலியார் வெளி யிட்ட 'திருதொண்டர் புராணம்'

1910 - காஞ்சிபுரம் மகாவித்துவான் இராமாநந்த யோகி களின் சொற்பொருள், பொழிப்புரை, கருத்துரை, விளக்கவுரையுடன் பு. சண்முக முதலியார் வெளியிட்ட 'தேவாரம்'

1911 - ஈக்காடு இரத்தினவேலு முதலியார் பொழிப்புரை யுடன் வெளிவந்த கோனேரியப்பரின் 'உபதேச காண்டம்'

1911 - ஏ.ஆர். திருவேங்கடாசாரியாரின் 'திருவாய்மொழி - பகவத் விஷயம்'

1913 - பி.பி.சீனிவாச்சாச்சாரியாரின் 'திருவாய்மொழி-பகவத் விஷயம்'

1913 - இராமானந்தயோகி உரையுடன் பி.சண்முக முதலியார் வெளியிட்ட 'சீகாளத்திப் புராணம்'

1913 - பி.பி. சீனிவாசாச்சாரியாரின் 'திருவாய்மொழி - பகவத் விஷயம்'

1914 - பூவை. கல்யாணசுந்தர முதலியாரின் மெய்கண்ட விருத்தி எனும் உரையுடன் எஸ்.ஆர். மாணிக்க முதலியார் அவர்களின் 'திருப்பாடற்றிரட்டு' (தாயுமானவர் பாடல்கள்)

1924 - 'திருக்குறட் குமரேச வெண்பா உரையுடன்'

1925 - பி.எஸ். சுப்பிரமணியர் உரையுடன் சென்னை அல்லையன்ஸ் வெளியிட்ட 'திருப்புகழ் - விருத்தியுரை'

1930 - திரு. வி. கலியாணசுந்தர முதலியார் உரையுடன் சாது அச்சுக்கூடம் வெளியிட்ட 'திருத்தொண்டர் புராணம் உரையுடன்'

1931 - அ. பாலகிருஷ்ணபிள்ளை உரையுடன் வெளி வந்த 'திருவருட்பா'

1935 - சி.கே. சுப்பிரமணிய முதலியார் அவர்களின் 'திருத்தொண்டர் புராணம்'

போன்ற நூலிதழ்களைக் குறிப்பிடலாம்.

**2. நூல் பெயரிலமைந்த அகநிலை மொழிபெயர்ப்பு நூலிதழ்**

பிற மொழியில் மிகச் சிறந்து விளங்கும் நூல்களைத் தமிழ் மொழியில் மொழிபெயர்ப்புச் செய்வது காலங் காலமாக நடந்து வரும் ஒரு வழக்கமாகும். இவ்வகையில் நூலிதழும் தனக்கென ஒரு இடத்தைப் பிடித்திருக்கின்றது எனலாம். இவ்வகையில் வெளிவந்த மொழிபெயர்ப்பு நூலிதழ்களை மூன்று நிலைகளாகப் பகுக்கலாம் அவை :

அ. வடமொழி- தமிழ் மொழிபெயர்ப்பு நூலிதழ்

ஆ. மராட்டிய மொழி - தமிழ் மொழிபெயர்ப்பு நூலிதழ்

இ. தெலுங்கு - தமிழ் மொழிபெயர்ப்பு நூலிதழ் என்பனவாகும்.

**அ. வடமொழி தமிழ் மெழிபெயர்ப்பு நூலிதழ்**

வடமொழியில் சிறப்புற்று விளங்கிய நூல்களைத் தமிழர்களும் உய்த்துணர வேண்டி வடமொழியும் தமிழ்மொழியும் கற்ற வல்லவர்கள் பலர் வடமொழி நூல்களைத் தமிழில் செய்யுள் வடிவமாகவும் வசனமாகவும் மூலமும் உரையுமாகவும் மொழிபெயர்த்திருக்கின்றனர். இவ்வகையில் செய்யுள் வடிவில்,

1878 - இ. சீனிவாசராகவாச்சாரியாரின் 'வால்மீகி ராமாயணம்'

1891 - கந்தசாமி முதலியாரின் 'புராண பாகவதம்'

1891 - எம். ரங்காச்சாரியாரின் 'புராண பாகவதம்'

1911 - ஏ.வி. நரசிம்மாச்சரியாரின் 'பாகதவதம்' (1-8 பாகங்கள்)

1913 - நடேச சாஸ்திரியாரின் 'பாகவதம்' (9-30 பாகங்கள்)

1915 - வி. வைத்தியநாத ஐயரின் 'பாகவதம்' (31-36 பாகங்கள்)

(இறுதி மூன்றும் ஒரே நூல். இந்நூலை முறையே மூவரும் மொழிபெயர்த்திருக்கின்றனர்) போன்ற மொழிபெயர்ப்பு நூலிதழ்களையும் ; உரைநடை வடிவில்,

1876 - டி. சீனிவாசாச்சாரியாரின் வசன மொழிபெய்ர்ப்பில் 'வால்மீகி ராமாயணம்'

1878 - தாதாதேசிக தாதாச்சாரியாரின் வசன மொழி பெயர்ப்பில் 'வால்மீகி ராமாயணம்'

1886 - கே. சீனிவாசராகவனின் வசண மொழிபெயர்ப்பில் 'வால்மீகி ராமாயணம்'

1890 - பி.எம். சீனிவாசராகவாச்சாரியாரின் வசன மொழிபெயர்ப்பில் 'வால்மீகி ராமாயணம்'

1890 - வரதராசனின் வசன மொழிபெயர்ப்பில் 'மகாபாரதம் அல்லது ஆரம்ப காலம் முதல் உள்ள இந்திய சரித்திரம்'

1891 - பஞ்சாபிகேசனின் வசன மொழிபெயர்ப்பில் 'மகாபாரதம்'

1891 - தாதாதேசிக தாதாச்சாரியாரின் வசன மொழி பெயர்ப்பில் 'வால்மீகி ராமாயணம்' (மறுபதிப்பு)

1892 - வைத்தியநாதனின் வசன மொழிபெயர்ப்பில் 'ஸ்ரீமத் ஆதிமகாபாரதம்'

1901 - உ.வே. ஸ்ரீநிவாஸாசார்யரின் வசன மொழி பெயர்ப்பில் 'மஹாபாரதம்'

1901 - எஸ்.எம். நடேச சாஸ்திரியாரின் வசன மொழி பெயர்ப்பில் 'வால்மீகி ராமாயணம்'

1909 - சி.ஆர். சீனிவாச ஐயங்காரின் வசன மொழி பெயர்ப்பில் 'வால்மீகி ராமாயணம்'

1909 - ஆர். சிவராம சாஸ்திரியாரின் வசன மொழி பெயர்ப்பில் 'பாகவதத் தமிழ் வசனம்'

1910 - கணபதி சாஸ்திரியின் வசன மொழிபெயர்ப்பில் 'ஆநந்த ராமாயணம்'

1910 - எம்.கே. வீரராகவ ஐயங்காரின் வசன மொழி பெயர்ப்பில் 'பாகவத தசம ஸ்கந்தம்'

1912 - ஏ.வி.நரசிம்மஹாச்சாரியாரின் வசன மொழி பெயர்ப்பில் 'வால்மீகி ராமாயணம்'

1913 - கே. ஸ்ரீநிவாச ஐயங்கார் - பி. சண்முகம் ஆகியோரின் வசன மொழிபெயர்ப்பில் 'ஆத்ம புராணம்'

1916 - ஏ.வி. நரசிம்மாச்சாரியரின் வசன மொழி பெயர்ப்பில் 'பாகவதத் தமிழ் வசனம்'

போன்ற மொழிபெயர்ப்பு நூலிதழ்களையும்; மூலமும் உரையுமாக,

1890 - வித்தியாரணிய அடிகளின் உரையுடன் கு.சீனிவாசன் அவர்கள் வெளியிட்ட 'சூதசங்கிதை'

1906 - டி. சுந்தரராஜசர்மா அவர்களின் 'பகவத் கீதையும், ஸ்ரீசங்கராசாரிய பாஷ்யமும்'

1917 - வீரமெய்யப்ப சுவாமிகளின் உரையுடன் 'பகவத்கீதை மூலமும் உரையும்'

1926 - பி.எஸ். கிருஷ்ணசாமி ஐயர் உரையுடன் 'வால்மீகி ராமாயணம்'

போன்ற மொழிபெயர்ப்பு மூலமும் உரையுமான நூலிதழ் களையும் குறிப்பிடலாம்.

**ஆ. மராட்டிய மொழி- தமிழ் மொழிபெயர்ப்பு நூலிதழ்**

மராத்திய மொழியில் தலைசிறந்து விளங்கும் ஓர் இலக்கியத்தைத் தமிழ்மொழியில் பெயர்ப்புச்செய்து நூலிதழாக வெளியிட்டிருக்கின்றனர். இவ்வகையில் மராத்திய மொழியில் பகிபதிபாவா அவர்களின் 'பக்த விஜயம்' என்ற நூலைத் தமிழ்மொழியில் வசனமாக நான்கு விதமாக மெழிபெயர்ப்புச் செய்திருக்கின்றனர். அம்மொழியெர்ப்புகள் நூலிதழ்களாக வெளிவந்திருக்கின்றன. அவை,

1898 - புதுவை நாராயணதாசரின் 'மகாபக்த விஜயம்'

1907 - வி. பாலகிருஷ்ண முதலியாரின் 'பக்தமாலா வசனம்'

1911 - வி.சீனிவாசராவின் 'பக்த மாலிகை'

1912 - டி. நரசிம்ம பாகவதரின் 'பக்தமாலா வசனம்'

போன்ற மொழிபெயர்ப்பு நூலிதழ்களைக் குறிப்பிடலாம்.

## இ. தெலுங்கு தமிழ் மொழிபெயர்ப்பு நூலிதழ்

தெலுங்கு மொழியில் தலைசிறந்து விளங்கும் ஓர் இலக்கியத்தைத் தமிழ்மொழியில் பெயர்ப்புச் செய்து நூலிதழாக வெளியிட்டிருக்கின்றனர். இவ்வகையில், வியாசர் வடமொழியில் எழுதிய பிரமாண்ட புராணத்தில் வரும் கதைப்பகுதியே 'அத்யாத்ம இராமாயணம்'. இராமனுடைய பரப்பிரம்ம சொரூபம், சரஸ்வதி பிரம்மா உரையாடலில் இக்கதைப்பகுதி இடம் பெறுகிறது. இந்த ராமாயணத்தைச் சிவன் பார்வதிக்கு உபதேசித்தார் என்பர். இந்த அத்யாத்ம ராமாயணம் தெலுங்கில் 16ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த கஞ்சாள சரபனகவி என்பார் காப்பியமாகப் படைத்துள்ளார். இவரைத் தொடர்ந்து இம்மடிஜெக தேவராயலு (17ஆம் நூற்) இராபாக ஸ்ரீராகவி (கி.பி 18ஆம் நூற்.) கோட்டமராஜு நாகையா (கி.பி.18ஆம் நூற்.) கிருஷ்ணகிரி வேங்கடரமண கவி (கி.பி.19ஆம் நூற்.) அல்லமராஜு ராமகிருஷ்ண கவி (கி.பி. 19ஆம் நூற்.) இராமையா மாத்யுடு (கி.பி.19ஆம் நூற்.) போன்றோரும் இக்காப்பியத்தைத் தெலுங்கில் மொழிபெயர்த்திருக்கின்றனர். இவர்களைத் தவிர சீதாராம சாஸ்திரி என்பாரும் தெலுங்கில் இக்காப்பியத்தை மொழி பெயர்த்திருக்கின்றார். இம்மொழிபெயர்ப்பை அடிப்படை யாகக் கொண்டு வே. பாலகிருஷ்ண முதலியார் அவர்கள் தமிழில் வசனமாக மொழிபெயர்த்திருக்கின்றார். இம்மொழி பெயர்ப்பு 1903 ஆம் ஆண்டு நூலிதழாக வெளிவந்துள்ளது.

### முடிவுரை

இவற்றையெல்லாம் பார்க்கும் போது தமிழிலக்கிய வளர்ச்சிக்கும் தமிழ் வளர்ச்சிக்கும் இதழ்கள்- குறிப்பாக நூலிதழ்கள் எவ்வாறெல்லாம் பயன்பட்டிருக்கின்றன என்பது விளங்கும். இவற்றில் பெரும்பான்மையானவை நூலிதழாக வெளிவந்து மக்கள் மத்தியில் வரவேற்பைப் பெற்றுப் பின்பே தனி நூலாக வலம் வந்திருக்கின்றன என்பதை உணரும் போது தமிழிலக்கிய வளர்ச்சிக்கும் தமிழ் வளர்ச்சிக்கும் இதழ்களின் பங்குதெற்றென விளங்கும். இவ்வாறு காலங்காலமாக வெளி வந்திருக்கக் கூடிய நூலிதழ்களை எல்லாம் தொகுத்துத் தனியொரு ஆய்வேடாக உருவாக்க முயற்சியின் தொடக்கமே இக் கட்டுரையாகும்.

# தமிழ் இதழ்களும் கதை இலக்கியமும்

முனைவர் பி. பார்வதி

''செய்திகளையும், கருத்துக்களையும், பொழுதுபோக்கு களையும் தகவல் பரப்பும் கருவிகள் வாயிலாக நம்பகமான வகையில் முறையாகப் பரப்புதலே இதழியல்'' என்கிறார் ரோலண்ட் கி.உல்ஸ்லே (*The Magazine World, P. 4*). பொழுது போக்கு அம்சங்களில் கதைகள், படங்கள், துணுக்குகள் போன்றவை அடங்கும். இவற்றுள் பத்திரிகைகளின் முக்கியமான உள்ளடக்கமாக கதை விளங்குகிறது. இக்கதையை சிறுகதை, தொடர்கதை, படக்கதை எனும் மூன்று வகைகளில் வெளியிட்டு வருகின்றன. அவற்றுள் சிறுகதை என்ற இலக்கியக்கூறு எவ்வாறு இதழ்களின் வளர்ச்சியில் முக்கியத்துவம் பெற்றுள்ளது என்பதையும் இதழ்கள் இச்சிறுகதையை எவ்வாறு வளர்த்தன என்பதையும் இக்கட்டுரை ஆராய்கிறது.

**இதழ்கள்**

இந்தியாவில் வெளியிடப்பட்ட முதல் இதழ் ஜேம்ஸ் அகஸ்டஸ் ஹிக்கியால் வெளியிடப்பட்ட ''பெங்கால் கெஜட்'' என்பதாகும். இதன் உள்ளடக்கத்தில் சிறுகதை இடம் பெற்றுள்ளது. தமிழில் வெளிவந்த முதல் இதழ் ''தமிழ்ப்பத்திரிகை'' என்பதாகும். இவ்விதழிலும் சிறுகதை ஒரு கூறாக இடம்பெற்றுள்ளது. தொடக்ககாலம் முதல் இன்று வரை வெளிவருகின்ற (புலனாய்வு இதழ்களில் ஒரு சில தவிர) அனைத்து இதழ்களிலும் சிறுகதை ஒரு கூறாக இடம்பெற்றுள்ளது. நாளிதழ்கள், வார இதழ்கள், மாத இதழ்கள், ஆண்டு மலர்கள், இணைப்பு இதழ்கள், சிற்றிதழ்கள் என அனைத்து இதழ்களிலும் சிறுகதை முக்கியக் கூறாக இடம் பெறுகிறது.

**செய்தி இதழ்கள்**

தொடக்க காலத்தில் இதழ்கள் என்றாலே செய்தித்தாள் களையே குறித்தன. செய்திகளுக்கு முக்கியத்துவம் தந்ததோடு

---

இணைப்பேராசிரியர், தமிழ்த் துறை, ஸ்ரீ பராசக்தி மகளிர் கல்லூரி, குற்றாலம் - 672 802.

பொழுதுபோக்கு அம்சங்களையும் இணைத்துத் தந்தன. அறிவியல் முன்னேற்றமும், அச்சடித்து வெளியிடுவதில் புதிய கருவிகளின் தாக்கமும் அதிகமான பின்பு நாள்தோறும் செய்திகளைத் தரும் செய்தித்தாள்கள் உருவானவுடன் நாளிதழ்கள் செய்திகளுக்கு மட்டுமே முக்கியத்துவம் தந்தன. பொழுதுபோக்கு அம்சங்களை விட்டுவிட்டன. எனினும் சிறுகதைகளை வாரந்தோறும் ஏதேனும் ஒருநாளில் வெளியிட்டு வந்தன. அதன்பின் குழந்தைகளுக்கான இணைப்பு இதழ்களிலும் வாரந்தோறும் வெளியிடும் தினமணிக்கதிர், வாரமலர், குடும்பமலர் போன்ற இணைப்பு மலர்களிலும் சிறுகதைகள் இடம் பெறலாயின.

தினமணி நாளிதழின் வார வெளியீடான தினமணிக்கதிரில் வாரந்தோறும் ஒரு சிறுகதை இடம் பெறுகிறது. கருத்தாழம் மிக்க சிறுகதைகளை இவ்விதழ் வெளியிட்டு வருகிறது. சில சமயங்களில் இரண்டு சிறுகதைகள் இடம் பெறுவதுண்டு. தினமலரில் வாரமலரில் பொழுதுபோக்கு அம்சம் நிறைந்த சிறுகதைகள் இரண்டு இடம் பெறுகின்றன. இதுபோலவே குடும்ப மலர் போன்ற மற்ற நாளிதழ்களின் இணைப்பு இதழ்களிலும் சிறுகதை முக்கிய கூறாக விளங்குகிறது.

குழந்தைகளுக்காக வெளியிடப்படும் இணைப்பு இதழ்களான சிறுவர்மணி, சிறுவர் மலர், தங்கச்சுரங்கம் போன்றவற்றில் மூன்று முதல் ஐந்து சிறுகதைகள் இடம் பெறுகின்றன. இச்சிறுகதைகள் குழந்தைகளுக்கு நீதிக் கருத்துக்களை, சிறந்த பழக்க வழக்கங்களைப் பண்பாடுகளை எடுத்துரைக்கின்றன. சான்றாக டிச. 3,2004-இல் வெளிவந்த சிறுவர் மலரில் ''கந்தர்வப்போர்'' என்ற தலைப்பில் ஒரு சிறுகதை இடம் பெற்றுள்ளது (ப. 20-21). இக்கதையின் முடிவில் ''...... பிறரை இழிவு படுத்தும் செயல்களில் நாம் ஒருபோதும் இறங்கக் கூடாது. அப்படி இழிவு படுத்தும்போது நம்மை நாமே இழிவு படுத்த வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டு விடுகிறது பார்த்தீர்களா'' (ப. 21) என்ற கருத்து கூறப்பட்டுள்ளது. இதன் வழி ஒரு நீதிக்கருத்து எடுத்துரைக்கப்பட்டுள்ளதைக் காண முடிகிறது. குழந்தைகளுக்காக வெளியிடப்படும் அனைத்து இதழ்களிலும் இடம் பெறும் சிறுகதைகள் இத்தன்மையிலேயே அமைகின்றன.

குழந்தைகளுக்கான இணைப்பு இதழ்களில் குழந்தைகளின் தமிழறிவை மேம்படுத்தும் வகையில் காப்பியங்கள், புராணங்கள் போன்றவற்றைக் கதையமைப்பில் தரும் உத்தியையும் பின்பற்றப்படுகின்றன. சான்றாக பிப். 4, 2005-இல்

வெளியான சிறுவர்மலரில் இடம் பெற்றுள்ள ''சீவகன்'' என்ற கதையைக் கூறலாம். நான்கு வாரங்களாகச் சீவக சிந்தாமணி என்ற காப்பியத்தின் கதையைச் சிறுகதைப் போக்கில் கூறிக் குழந்தைகளுக்கு அவ்விலக்கியத்தை அறிமுகப்படுத்தியுள்ளது. இவ்வாறாகக் குழந்தைகளுக்கான இணைப்பு இதழ்கள் சிறுகதைக் கூறை உள்ளடக்கத்தில் ஒன்றாக ஏற்றுள்ளன.

**பொழுதுபோக்கு இதழ்கள்**

தொடக்ககால வார இதழ்கள் செய்தி இதழ்களாக இருந்தாலும் சிறுகதையை உள்ளடக்கமாகக் கொண்டிருந்தன. செய்திகளைக் கொடுப்பதற்காக நாளிதழ்கள் தோன்றியவுடன் வார இதழ்கள் பொழுதுபோக்கு இதழ்களாக மாறத் தொடங்கின. இராஜம் ஐயரின் ''விவேக சிந்தாமணி'', மாதவையாவின் ''பஞ்சாமிர்தம்'', வ.வே.சு. ஐயரின் ''பாலபாரதி'' போன்ற இதழ்கள் சிறுகதைகளை உள்ளடக்கமாகக் கொண்டுள்ளன. ''பாலபாரதி'' இதழில் சிறுகதைகளை எழுதிய வ.வே.சு. ஐயரை ''சிறுகதையின் தந்தை'' என்று அழைக்கின்றனர்.

பாரதியார், திரு.வி.க. போன்றோர் தங்கள் இதழ்களில் சிறுகதைளை வெளியிட்டனர். திரு.வி.க. தனது ''நவசக்தி''யில் கல்கி எழுதிய சிறுகதைகளை ''அகஸ்தியர்'' என்ற புனை பெயரில் வெளியிட்டார். வார இதழ்கள் சிறுகதைகளை வெளியிட்டாலும் சிறுகதைகளுக்கான போட்டியை ஆனந்த விகடன் இதழ் முதன்முதலில் தொடங்கியது. இதனால் பல புதிய சிறுகதை எழுத்தாளர்கள் உருவாயினர். இதனை "1933-ஆம் ஆண்டு தமிழ் மலர்ச்சி இலக்கியத்தில் ஓர் எல்லைக்கல். அந்தப் பத்திரிகையில் முதன் முறையாகச் சிறுகதைப் போட்டி ஒன்று நடத்தினார்கள்..... சிறுகதை பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்த எழுத்தாளர்களுக்கு விகடன் நடத்திய போட்டியே வழி திறந்து விட்டது'' என்ற பி.எஸ். இராமையாவின் கூற்று உறுதிப் படுத்துகிறது. (சி.சு. செல்லப்பா, தமிழில் சிறுகதை பிறக்கிறது, ப. 40)

கே. சீனிவாசன் என்பவரால் தொடங்கப்பட்ட மணிக்கொடி என்ற வார இதழ் முதலில் தேசீய விடுதலைப் போராட்டத்தைக் கருவாகக் கொண்ட சிறுகதைகளை வெளியிடத் தொடங்கியது. பின்னர் இது சிறுகதைகளுக்கு உரிய வார இதழாக மாறியது. இவ்விதழில் இடம் பெற்ற கதைகள் அமைப்பிலும், சொல்லும் விதத்திலும் பிற இதழ்களின் கதைகளினின்றும் மாறுபட்டுத்

தோன்றின. சிறுகதைகளை எழுதும் புதிய எழுத்தாளர்களை இவ்விதழ் ஊக்குவித்தது. புதுமைப்பித்தன், பி.எஸ். இராமையா, கு.ப. ராஜகோபாலன், லா.ச. ராமாமிர்தம், ந. பிச்சமூர்த்தி, மௌனி போன்ற சிறுகதைச் சிற்பிகள் பலர் உருவாக "மணிக்கொடி" இதழ் களமாக அமைந்தது. இவர்கள் மணிக்கொடி எழுத்தாளர்கள் என்று அழைக்கப்பட்டனர்.

தேசீய விடுதலைப் போராட்டக் காலத்தில் இதழ்கள் எல்லாம் அரசியல் செய்திகளுக்கு முக்கியத்துவம் தந்த காலத்தில் மணிக்கொடிப் பத்திரிகை அரசியல் கருத்துக்களையும், சமுதாயக் கருத்துக்களையும் சிறுகதைகளாக்கி வெளியிட்டுச் சிறுகதை இலக்கியத்தை வளர்த்தது எனலாம். மணிக்கொடிப் பத்திரிகையில் சிறுகதைகளை எழுதிய புதுமைப்பித்தன் "சிறுகதை மன்னன்" என அழைக்கப்பட்டார். இதனால்தான் மணிக்கொடிப் பத்திரிகைக் காரர்கள் இப்பத்திரிகையைத் தமிழ்நாட்டின் வெள்ளி முளைப்பு என்று கூறுகின்றனர்.

இந்தியா விடுதலையடைந்தவுடன் பத்திரிகை ஒரு தொழிலாக மாறியது. பத்திரிகையாளர்கள் பத்திரிகையின் விற்பனையில் கவனம் செலுத்தத் தொடங்கினர். எனவே பத்திரிகைத் திறன் களுக்கு முக்கியத்துவம் தரப்பட்டது. இலக்கியத்தரம் பின்னுக்குத் தள்ளப்பட்டது. பொழுதுபோக்கு அம்சம் சிறுகதையில் புகுத்தப் பட்டது. நேரம் போவதற்காகவே சிறுகதைகள் படைக்கப்பட்டன. வார இதழ்களில் வெளியான சிறுகதைகளில் பல படித்த வுடன் மறந்து விடும் தன்மையில் எழுதப்பட்டன. சிறந்த மொழி நடையோ, இலக்கியத் தரமோ, சிந்தனை வளமோ சிறுகதைகளில் தென்படவில்லை. இலக்கிய விழிப்புணர் வுடைய சிலர் இந்நிலை கண்டு வருந்தி மக்களிடையே தரமான இலக்கிய உணர்வை, சிறந்த தமிழ் நடையை வளர்க்க முன் வந்தனர். அவர்களுள் குறிப்பிடத்தகுந்தவர்கள் அழகிரிசாமி, சி.சு. செல்லப்பா, வல்லிக்கண்ணன், சுந்தர ராமசாமி, அசோகமித்திரன் போன்றோராவர். இவர்கள் "எழுத்து, தீபம், தாமரை, இலக்கியவட்டம்" போன்ற இலக்கிய இதழ்களை வெளியிட்டுச் சிறுகதைகளுக்குப் புத்துயிர் ஊட்டினர்.

**சிற்றிதழ்கள்**

மணிக்கொடிக்குப் பின் வெளிவந்த குமுதம், குங்குமம், தாய், சாவி போன்ற பொழுதுபோக்கு வார இதழ்கள் பாமர மக்களின் மொழிநடையைத் தம் இதழ்களின் மொழிநடையாகக்

கொண்டன. வாசகர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தும் கருத்துக்களைக் கதைக் கருவாகக் கொள்ளவில்லை. நல்ல உயர்தரமான கருத்துக்களை மக்களிடையே பரப்ப வேண்டும் என்பது இதழ்களின் குறிக்கோளாக இருந்தது மாறி விற்பனை ஒன்றே குறிக்கோளாக மாறியது. எனவே இலக்கியவாதிகள் இலக்கியத்தைச் செம்மைப்படுத்த முன் வந்தனர். இதனால் சிற்றிதழ்கள் பல தோன்றின.

வணிக நோக்கமின்றி, தமிழ்ச் சமுதாயத்தின் பண்பாட்டை வளர்க்கவும், தமிழ் இலக்கியத்தின் தரத்தை உணர்த்தவும், மொழியியலும், இலக்கியத்திலும் தரமான செய்திகளைக் கொடுக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் சிற்றிதழ்கள் வெளியிடப்பட்டன. இத்தகு ''விற்பனை நோக்கமல்ல ஐநூறு வாசகர்கள் இருந்தாலே போதும்'' என்ற அறிவிப்போடு சி.சு. செல்லப்பா ''எழுத்து'' என்ற சிற்றிதழைத் தொடங்கியதைச் சான்றாகக் கூறலாம். ''தாமரை'', ''தீபம்'', ''கணையாழி'', ''செம்மலர்'' போன்ற சிற்றிதழ்கள் சிறந்த சிறுகதைகளையும் சிறுகதை எழுத்தாளர்களையும் உருவாக்கித் தமிழ் உலகிற்குத் தந்தன. திங்கள் இதழாக வந்த ''சரஸ்வதி'' என்ற சிற்றிதழ் மிகச் சிறந்த சிறுகதைகளை வெளியிட்டுச் சிறுகதை இலக்கியத்தை வளர்த்தது என்பதை வல்லிக் கண்ணன் ''சரஸ்வதி காலம்'' என்ற நூலின் வழி அறிய முடிகிறது. (ச.வே.சு. இதழ்கள், தமிழ் இலக்கிய வரலாறு, ப. 393) தோழர். ப. ஜீவனாந்தம் என்பவரால் 1958-இல் தொடங்கப்பட்ட ''தாமரை'' என்ற சிற்றிதழ் சிறந்த இலக்கிய இதழ் என்று பாராட்டப்பட்டது. இவ்விதழ் மிகச் சிறந்த, திறனாய்விற்குத் தகுதியான சிறுகதைகளை வெளியிட்டு வந்தது. 1982-இல் பொன் விழா கொண்டாடிய ''கலைமகள்'' என்ற திங்கள் இதழும் பல சிறுகதை எழுத்தாளர்களை உருவாக்கித் தந்தது.

சிற்றிதழ்கள் வழிச் சிறுகதைகள் எழுதிப் புகழ் பெற்றவர்களுள் பெண் எழுத்தாளரான அம்பையும் ஒருவராவார். இவரது ''காட்டில் ஒரு மான்'' என்ற சிறுகதைத் தொகுதியில் இடம் பெற்றுள்ள கதைகள், ''சதங்கை'', ''நிகழ்'', ''மஞ்சரி'', ''எக்ஸில்'', ''கிழக்கும் மேற்கும்'', ''உன்னதம்'', ''காலச்சுவடு'' போன்ற சிற்றிதழ்களில் வெளிவந்தவைகளாகும். பெண் எழுத்தாளர்களின் சிறுகதைகள் பல சிற்றிதழ்களின் வழியே வெளிவந்துள்ளன. இதன்வழிச் சிற்றிதழ்கள் சிறந்த சிறுகதை இலக்கியங்களை வெளியிட்டுப் பல பல புதிய சிறுகதை

எழுத்தாளர்களை உருவாக்கியுள்ளதை அறியமுடிகிறது. சிறுகதை எழுத்தாளர்களை உருவாக்கிய பத்திரிகை சிறுகதையின் வடிவ மாற்றத்திற்கு மூலகாரணமாக விளங்குகிறது எனலாம்.

**இதழ்கள் சிறுகதையை வளர்த்தவிதம்**

வாசகர்களைக் கவரும் இதழியல் உத்திகளில் முதலில் இடம் பெறுபவை கதைகளே. மேனாட்டார் வரவால் தமிழுக்குக் கிடைத்த இலக்கிய வகையான சிறுகதை இதழ்கள் வாயிலாகவே வளர்ந்தது எனில் மிகையன்று.

''சிறுகதை என்பது அரை மணி நேரத்திலிருந்து இரண்டு மணி நேரத்திற்குள் படித்து முடிக்கத் தக்கதாய் இருக்க வேண்டும்'' என்கிறார் எட்கார் ஆலன்போ. ''குதிரைப் பந்தயம் போல விறுவிறுப்பாகத் தொடக்கமும் முடிவும் சுவையானதாய் இருக்க வேண்டும்'' எனச் சிறுகதைக்கு இலக்கணம் வகுக்கிறார் செட்ஜ்விக். பத்திரிகைகளில் சிறுகதை எழுதி அதன் வழிச் சிறுகதையின் தந்தை என்று போற்றப்பட்ட வ.வே.சு. ஐயர், சிறுகதை மன்னன் என்று அழைக்கப்படும் புதுமைப்பித்தன் போன்றோர் மனதில் நிற்கும் கதைகளைப் படைப்பதில் வல்லவர்கள். எதார்த்த வாழ்க்கையே இலக்கியப் படைப்பிற்கு மூல ஊற்றாக இருக்க வேண்டும் என எண்ணியவர்கள்.

வாழ்க்கையின் பல கோணங்களை உள்ளவாறு உணர்ந்ததோடு, யாதர்த்தங்களைச் சிறுகதை வாயிலாக எடுத்துரைத்தவர் புதுமைப்பித்தன். கிராமத்துச் சூழ்நிலை களைப் படம் பிடித்துக் காட்டுவதில் பேராற்றல் உடையவர் கு.ப. ராஜகோபாலன், ஆழ்ந்து கற்று, அனுபவித்து மகிழும் கதைகளை உருவாக்கியவர் மௌனி. தத்துவச் சிந்தனைகளைச் சிறுகதைகளோடு தருபவர் ந. பிச்சமூர்த்தி. தஞ்சை மாவட்டத்தின் கிராமிய வாசனையோடு சிறுகதைகளைப் படைப்பவர் தி. ஜானகிராமன். இவர்கள் அனைவரும் ''மணிக்கொடி'' என்ற பத்திரிகை வாயிலாகச் சிறுகதைகளைப் படைத்துப் புகழ் பெற்ற வர்கள். இவர்களை மணிக்கொடி எழுத்தாளர்கள் என்றே அழைப்பர்.

1938-இல் தோன்றி 1942 வரை வெளிவந்த ''கலாமோகினி'' என்ற இதழும் சிறுகதை எழுத்தாளர்கள் வளர்வதற்கு ஊக்கம் அளித்தது. 1932-இல் தொடங்கப்பட்ட திங்களிதழாகிய ''கலைமகள்'' 1982-இல் பொன்விழா கொண்டாடியது. 1958-இல் ப. ஜீவானந்தம் என்பவரால் தொடங்கப்பட்ட ''தாமரை'' இதழ் பல சிறுகதைகளை வெளியிட்டுள்ளது.

1930-இல் தோன்றிய எதார்த்தவாதம் எழுபது வரை ஆதிக்கம் செலுத்தியது. புதுமைப்பித்தன் முதல் ஜெயகாந்தன் வரை உள்ள சிறுகதை எழுத்தாளர்கள் எதார்த்தவாதப் போக்கின் உந்துதலால் நுண்ணிய மனவுணர்வினைச் சித்திரிக்கும் கதைகளைப் படைத்தனர். 60-70-களில் ''இலக்கியப் பத்திரிகைகள்'' என்ற பெயரில் இலக்கிய ஆர்வமுடைய எழுத்தாளர்கள் சிற்றிதழ்களை வெளியிட்டனர். சமுதாயத்தில் பிரச்சினைகள் அதிகம் காணப்பட்டன. தீண்டாமை, வரதட்சணை, ஊழல், சாதிப் பிரச்சினை, அரசியல் போன்றவற்றைச் சிறுகதைகள் பிரதிபலிப்பதை விட அதற்கு அப்பாற்பட்டதை இலக்கியங்கள் வழி எடுத்துரைக்கலாம் என்ற எண்ணம் பத்திரிகையாளர் களுக்கு ஏற்பட்டது. சுந்தர ராமசாமி, அசோகமித்திரன், கந்தசாமி, முத்துசாமி போன்ற எழுத்தாளர்கள் சிறுபத்திரிகைகள் வழியே தமிழ்ச் சிறுகதைகளுக்குப் புதிய பரிமாணத்தை ஏற்றினார்கள். உலக இலக்கியங்களின் பாதிப்பு சிறுகதை எழுத்தாளர் களுக்கு இருந்ததால் கலை நோக்கம் சிதறாமல் சிறுகதை களைப் படைத்தனர். சமூக விழிப்புணர்வு, சமுதாய மறுமலர்ச்சி, சமுதாயச் சீர்திருத்தக் கருத்துக்கள் சிறுகதைகள் வழியே மக்களுக்கு ஊட்டப்பட்டன.

1975-க்குப் பின் இதழ்களில் வாசகர்களைக் கவர்ந்திழுக்க சிறுகதை ஓர் உத்தியாகப் பயன்பட ஆரம்பித்தது. வார இதழ் களின் எண்ணிக்கை அதிகரித்தது. இதனால் இதழ்களில் வெளியிடும் சிறுகதைகளின் எண்ணிக்கையும் அதிகமாயின. எனவே இதழ்கள் சிறுகதைகளை வெளியிடுவதில் பல்வேறு உத்திகளைக் கையாண்டு வாசகர்களைக் கவர முற்பட்டன. சிறுகதைகளில் எட்கர், ஆலன்போ, செட்ஜ்விக் போன்றோர் கூறிய இலக்கணங்கள் மீறப்பட்டன. இதழ்களில் சிறுகதை வெளிவரும் பக்கத்தை அடிப்படையாகக் கொண்டும், சிறுகதையைப் படித்து முடிக்கும் நேரத்தின் அளவை வைத்தும் சிறுகதையின் அளவிற்கு வரையறை கூறப்பட்டது. சிறுகதையின் உருவ அமைப்பிலும் பல்வேறு மாற்றங்கள் ஏற்பட்டன. ஒரு பத்தி, அரைப்பக்கம், ஒரு பக்கம், பல பக்கங்கள், இரண்டு வாரம் வெளிவரும் கதை எனக் கதைகளின் பக்கங்களை வைத்துச் சிறுகதைகள் அழைக்கப்பட்டன. செய்திகளைக் கதையாக்கித் தரும் உத்திகளையும் இதழ்கள் கையாண்டன.

''சிறுகதையின் அகலப் பரப்பிற்கு முதற்காரணமான பத்திரிகைகள் தாம் அதன் அளவையும் ஓரளவிற்கு நிர்ணயித்தது

என்று உறுதியாகக் கூறலாம். ஒரே இதழில் தொடங்கி முடிந்து விடுகின்ற வகையில் பத்திரிகைகள் சிறுகதைகளை வெளியிட வெளியிடத்தான் சிறுகதையின் அளவு சுருங்கிச் சுருங்கி ஒரு கட்டுத்திட்டத்திற்கு உட்பட்டதாக மாறியது'' என்ற நாகராசனின் கூற்று (ஆய்வுகோவை, 1994, தொகுதி, ப. 791) இன்றைய் காலச் சிறுகதையின் வரையறைக்கு இதழ்களே காரணம் என்பதை எடுத்துரைக்கிறது. இன்றைய சிறுகதைகளின் உள்ளடக்கங்களாக திருமணம், காதல், வறுமை, வேலையில்லாத் திண்டாட்டம், குடும்பப் பிரச்சினை, வரதட்சணை, பெண்கள் பிரச்சினை, தன்னம்பிக்கை போன்றவை இடம் பெற்றுள்ளன.

பிறநாட்டு இலக்கியங்களைத் தமிழில் மொழி பெயர்த்தல் வேண்டும் என்ற பாரதியின் கனவைப் பத்திரிகைகள் நனவாக்கி யுள்ளன. செம்மலர், இலக்கிய வட்டம், எழுத்து, படிகள், காலச்சுவடு போன்ற சிற்றிதழ்கள் தரம் வாய்ந்த பிறமொழிக் கதைகளை மொழி பெயர்த்து வெளியிட்டுள்ளன. 1983-ஆம் ஆண்டு குங்குமம் ஜெர்மன், பிரெஞ்ச், ஸ்பெயின், மலையாளம், கன்னடம், தெலுங்கு, மராத்தி போன்ற அயல்நாட்டு, நம்நாட்டு மொழிகளில் வெளிவந்த சிறுகதைகளைத் தமிழில் மொழி பெயர்த்து வெளியிட்டுள்ளது. (பி. பார்வதி, தமிழ் வார இதழ் களில் இதழியல் உத்திகள், பி.எச்.டி. ஆய்வேடு, ப. 44).

உண்மைச் சம்பவங்களைக் கதையாக்கித் தரும் உத்தியை இதழ்கள் கையாண்டுள்ளன. ''டாக்டர் ஜகன்னாதன் டைரி யிலிருந்து எடுக்கப்பட்ட குறிப்புகளில் உள்ள உண்மைகளை எடுத்துக் கொண்டு பெயர்களையும், ஊர்களையும் மாற்றி, கொஞ்சம் விரிவாக்கி சுவாரசியமான கதையாக்கிக் கொடுத்திருக் கிறோம்'' என்ற ஜீ.வி. ஆசிரியரின் கூற்று (23.12.1983, ப. 19) உண்மைக் கதைக்கு இலக்கணமாகிறது. இத்தகு கதைகளை இதழ்கள் அவ்வப்போது வெளியிட்டு வருகின்றன.

**முடிவுகள்**

1. இதழ்களின் வளர்ச்சியில் கதை - இலக்கியமும் முக்கிய இடம் வகிக்கிறது.
2. இதழ்களின் விற்பனைக்கு இதழ்களின் இடம் பெறும் சிறுகதைகளும் காரணமாகும்.
3. இதழ்களே இன்று சிறுகதையை வரையறை செய்கின்றன.

4. சிறுகதை என்ற இலக்கிய வளர்ச்சிக்குத் தமிழ் இதழ்களே முக்கிய காரணமாகும்.
5. புதிய புதிய சிறுகதை எழுத்தாளர்கள் உருவாவதற்கு இதழ்களே காரணம் எனலாம்.
6. சிறுகதையின் தந்தை, சிறுகதை மன்னன், தற்காலச் சிறுகதை மன்னன், மிகச் சிறந்த சிறுகதை எழுத்தாளர்கள் ஆகியவர் களைத் தமிழ் இதழ்களே உருவாக்கின.
7. இலக்கியத்தரம் வாய்ந்த சிறுகதைகளை வெளியிட சிற்றிதழ்கள் தோன்றின. அம்பை போன்ற சிறந்த எழுத்தாளர்களை இச்சிற்றிதழ்கள் உருவாக்கின.
8. சிறுகதை எழுதுவதற்குச் செய்தி, உண்மைச் சம்பவம், சமுதாயப் பிரச்சினைகள் என எதனையும், கதைக் கருவாகக் கொண்டு எழுத்தாளர்கள் சிறுகதைகளைப் படைக்கின்றனர்.
9. சிறுகதைப் போட்டிகளை இதழ்கள் உருவாக்கிப் பல புதிய சிறுகதை எழுத்தாளர்களை உருவாக்கியுள்ளன.

## அனைத்திந்திய அறிவியல் தமிழ்க்கழக வெளியீடுகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | வளர்தமிழில் அறிவியல் | 1988 | ரூ. 50/- |
| 2. | வளர்தமிழில் அறிவியல் | 1989 | ரூ. 90/- |
| 3. | பொறியியல் தொழில்நுட்பம் | 1993 | ரூ. 110/- |
| 4. | மருத்துவ அறிவியல் வளர்ச்சி | 1994 | ரூ. 120/- |
| 5. | சுற்றுச்சூழல் பாதுகாப்பு | 1995 | ரூ. 140/- |
| 6. | அறிவியல் தமிழாக்கம் | 1997 | ரூ. 90/- |
| 7. | காலந்தோறும் அறிவியல் தொழில்நுட்பம் | 1998 | ரூ. 160/- |
| 8. | பொது அறிவியல் | 1999 | ரூ. 300/- |
| 9. | தகவல் தொடர்பியல் | 1999 | ரூ. 140/- |
| 10. | அறிவியல் தமிழ் வளர்ச்சி | 1999 | ரூ. 90/- |
| 11. | வேளாண் அறிவியல் வளர்ச்சி | 2000 | ரூ. 370/- |
| 12. | இலக்கியமும் வேளாண்மையும் | 2001 | ரூ. 190/- |
| 13. | கல்வி நுட்பவியல் | 2001 | ரூ. 310/- |
| 14. | அறிவியலும் சமுதாயமும் | 2002 | ரூ. 180/- |
| 15. | உயிர் தொழில் நுட்பவியல் | 2002 | ரூ. 100/- |
| 16. | கிராமப்புற உலகம் | 2002 | ரூ. 60/- |
| 17. | கிராமப்புற வளர்ச்சியில் அறிவியல் தொழில்நுட்பங்கள் | 2002 | ரூ. 60/- |
| 18. | வளரும் தமிழ் | 2003 | ரூ. 60/- |
| 19. | பல்துறைத் தமிழ் | 2003 | ரூ. 60/- |
| 20. | இணையத்தமிழ் | 2003 | ரூ. 60/- |
| 21. | அறிவியல் தமிழ் ஊடகங்கள் | | ரூ. 75/- |
| 22. | அறிவியல் தமிழ் நூல்களும் இதழ்களும் | 2004 | ரூ. 75/- |
| 23. | அறிவியல் அறிஞர்கள் | 2005 | ரூ. 75/- |
| 24. | தமிழ் வளர்ச்சியில் இதழ்கள் | 2005 | ரூ. 60/- |

**வாழ்வு உயர வளர்தமிழில் அறிவியல்**